ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# நூற்றெட்டுத்திருப்பதி யந்தாதி

## மூலமும் - உரையும்.



### தனியன்

ஏற்றமணவாள ரிசைத்தாரந் தாதிவெண்பா
தோற்றக் கேடில்லாத தொன்மாலைப்-போற்றத்
திருப்பதியா நூற்றெட்டினையுஞ் செபிப்போர்
கருப்பதியா வண்ணமுண் டாக.

(இதன்பதப்பொருள்) தோற்றம் - உற்பத்தியும்,—கேடு - நாசமும்,— இல்லாத - இல்லாத,—தொல் - பழமையாகிய,— மாலை - ஸ்ரீ அப்பதியை,—போற்ற - துதிக்க,—திருப்பதியாம் - திவ்விய க்ஷேத்திரங்களாகிய,—நூற்றெட்டினையும் - நூற்றெட்டையும்,—செபிப்போர் - ஸ்மரணைசெய்பவர்கள்,—கரு - தாயின் உதரத்தில்,— பதியாவண்ணம் - படியாதவிதம்,—உண்டாக - உண்டாகும்படி,— ஏற்றம் - புகழ்பொருந்திய,— மணவாளா - மணவாளதாசரென்பவர்,—அந்தாதிவெண்பா - வெண்பா அந்தாதியை,—இசைத்தார் - சொல்லினார் — எ-று.

(கருத்து.) கருப்பதியாவண்ணம் திருமாலைப்போற்ற நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா அந்தாதியை மணவாளதாசர் இசைத்தார் (என்பதாம்.) செபித்தல் - செபித்தலென நின்றது.

## நான்முகம்.

### ஆழ்வார்கள் துதி.

பொய்கைபூ தன்பேயார் பொன்மழிசைக் கோன்மாறன்
செய்ய மதுரகவி சேரர்பிரான் - வையகமெண்
பட்டர்பிரான் கோதைதொண்டர் பாதப் பொடிபாணன்
கட்டவிழ்தார் வாட்கலியன் காப்பு.

(இ-ள்) பொய்கை - பொய்கையாழ்வாரும், — பூதன் - பூதத்தாழ்வாரும்,— பேயார் - பேயாழ்வாரும்,— பொன்மழிசைக்கோன் - திருமழிசையாழ்வாரும்,—மாறன் - நம்மாழ்வாரும், செய்யமதுரகவி - செவ்விய மதுரகவியாழ்வாரும்,—சேரர்பிரான் - குலசேகராழ்வாரும்,—வையகம் - பூமியிலுள்ளோரால்,— எண் - நன்குமதிக்கப்பட்ட,—பட்டர்பிரான் - பெரியாழ்வாரும்,— கோதை - சூடிக்கொடுத்தாளும்,—தொண்டர்பாதப்பொடி - தொண்டரடிப்பொடியாழ்வாரும், — பாணன் - திருப்பாணாழ்வாரும்,—கட்டு அவிழ் - முறுக்குடைந்த, — தார் - பூமாலையணிந்த,—வாட்கலியன் - திருமங்கையாழ்வாரும். — காப்பு - காவலாகும்—எ-று.

(க-து) பொய்கையாழ்வா ராதியோர் இந்நூலுக் கிடையூறின்றி காக்கவேண்டும்—எ-டு. (க)

பிறவாத பேறு பெறுதற் கென்றுமே
மறவா திறைஞ்சென் மனனே-துறவாளன்
வண்குருகூர் வாவி வழுதி வளநாடுடைய
தண்குருகூர் நம்பிதிருத் தாள்.

(இ-ள்) என் மனனே - என்னுடைய நெஞ்சே! — துறவாளன் - துறவையுடையவரும்,—வண் - அழகிய,—குருகூர - நா

ளைகள் உலாவும்,—வாவி - தடாகங்களையுடைய,—வளம் - வ
ளம்பொருந்திய,—வழுதிநாடு - பாண்டிநாட்டை,—உடைய -
தமக்கு இருப்பிடமாகவுடைய,—தண் - குளிர்ந்த,—குருகூர் -
திருக்குருகூரில் திருவவதாரஞ்செய்தருளிய,—நம்பி - சடகோப
ருடைய,—திருத்தாள் - அழகியசரணங்களை,—பிறவாத - ஜனி
க்காத,—பேறு - இலாபத்தை,—பெறுதற்கு - அடைதற்கு,—
என்றென்றும் - எக்காலத்தும்,—மறவாது - மறவாமல்,—இ
றைஞ்சு - வணங்குவாயாக—எ-று.

(க-து.) என்மனமே! பரமபதத்தை அடைதற்பொருட்டு
திருக்குருகூர்நம்பி திருத்தாள் சேவி—எ-ம். (௨)

முன்னே பிறந்திறந்து மூதுலகிற் பட்டவெல்லாம்
என்னே மறந்தனையோ வென்னெஞ்சே - சொன்னேன்
இனியெதிரா சன்மங்க ளின்றுமுதற் பூதூர்
முனியெதிரா சன்பேர் மொழி.

(இ-ள்) என்னெஞ்சே - என் மனமே!—முன்னே - பூர்வ
ம்,—பிறந்து - ஜனித்து,—இறந்து - மரித்து,—மூது - பழ
மையாகிய,—உலகில் - பிரபஞ்சத்தில்,—பட்ட எல்லாம் - அனு
பவித்தயாவையும்,—என்னே - ஏன்,—மறந்தனையோ - மறந்
துவிட்டாயோ,—சொன்னேன் - செப்பினேன்,—இனி - இனி
மேல்,—சன்மங்கள் - பிறவிகள்,—எதிரா - வாராவாம்,—(ஆத
லால்) இன்றுமுதல் - இன்றுமுதற்கொண்டு,—பூதூர் - ஸ்ரீபெ
ரும்பூதூரில் எழுந்தருளிய,—முனிஎதிராசன் - எதிராஜமுனிவ
ருடைய,—பேர் - திருநாமத்தை,—மொழி - சொல்லுவாயா
க—எ-று.

(க-து,) நெஞ்சே - எதிராஜமுனிவர்பேரை ஸ்மரிக்கில் ஜன்ம
ம் வாராது—எ-ம். (௩)

முக்கால மில்லா முகில்வண்ணன் வைகுந்தத்
தெக்காலஞ் செல்வா னிருக்கின்றேன் - தக்காரெண்
கூரத்தாழ் வானடியைக் கூடுதற்கு நாயடியேன்
போரத்தாழ் வானசடம் போட்டு.

(இ-ள்) நாய்அடியேன் - நாய்போன்ற தாசனுகியயான்,— போர - மிகவும்,—தாழ்வான - இழிவாகிய,— சடம் - தேகத்தை,—போட்டு - நீக்கிவிட்டு,—தக்கார் - அறிஞரால்,—எண் - ணியாளிக்கபபட்ட,—கூரத்து ஆழ்வான் - கூரத்தாழ்வாரது,— அடியை - திருப்பாதங்களை,—கூடுதற்கு - சேர்வதற்கு,—முக் காலம் - பூத பௌஷிய வர்த்தமான மென்று மூன்றுகாலங்களும்,—இல்லா - தனக்கில்லாத,—முகில்வண்ணன் - மேகவண்ணனுடைய,—வைகுந்தத்து - பரமபதத்தில்,—எக்காலம் - எந்நாளில்,—செல்வான - ஏகும்படி,—இருக்கின்றேன் - இருக்கிறேன—எ-று. (அந்வயம்) நாயடியேனித்தாழ்வான சடம்போட்டுக் கூரத்தாழ்வானடியைக் கூடுதற்கு முகில் வண்ணன் வைகுந்தத் தெக்காலஞ் செல்வா னிருக்கின்றேனெனக்கூட்டிப்பொருள் கொள்க. (௪)

நான்கூடடில் வந்தவன்றே நானறியா நன்மையெல்லாந
நான்கூட்டி வைத்தநலந் தான்கண்டீ - ராங்கூட்டச்
சிட்டருக்கு வாய்த்த திருவரங்க னின்னருளாற்
பட்டருக்காட் பட்டபயன்.

(இ-ள்) ஆம் கூட்டம் - கூட்டமாகிய,— சிட்டருக்கு - பாகவதாசனுக்கு,—வாய்த்த - கிடைத்த,— திருவரங்கன - திருவரங்கநாதனது,—இன்அருளால் - இனியதிருவருளினுல்,—பட்ட

ருக்கு - குணவாளபட்டருக்கு,—ஆட்பட்ட - அடிமைப்பட்டத
னுண்டாகிய,—பயன் - பிரயோசனமானது,—நான் - (தாச
னாகிய)யான்,—கூட்டில் - தேகத்தில்,—வந்தஅன்றே - உதித்த
அப்போதே,—நான் அறியா - எனக்குத்தெரியாத,—நன்மை எ
ல்லாம் - நலங்களையெல்லாம்,—தான் - தானே,—கூட்டிவைத்
த - கிடைசரும்படி செய்த,—நலம்தான் - உபகாரத்தை,—
கண்டா - பார்த்தீர்களா!—எ-று.

(க-து.) பட்டருக்கு ஆட்பட்டதனாலாய பயன் சகல
நன்மையும் தானே கூட்டிவைத்தனன்—எ-ம். (௫)

ஈரிருப தாஞ்சோழ மீரொன்ப தாம்பாண்டி
ஓர்பதின்மூன் றுமலைநா டோரிரண்டாம் - சீர்நடுநா
டாறோ டிரட்டிதொண்டை யவ்வடநா டாறிரண்டு
கூறுதிரு நாடொன்றாக் கொள்.

(இ-ள்) சோழமீரர் இருபதாம் - சோழநாட்டுத் திருப்பதிக
ள் நாற்பதாகும்,—பாண்டி ஈர் ஒன்பதாம் - பாண்டி நாட்டுத்
திருப்பதிகள் பதினெட்டாகும்,—மலைநாடு ஓர்பதின்மூன்றும் -
மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றாகும்,—சீர்நடுநாடோர்இர
ண்டாம் - சிறந்தநடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டாகும்,—
தொண்டை ஆறோடிரெட்டு - தொண்டைநாட்டுத் திருப்பதிக
ள் இருபத்திரண்டாகும்,—அவ்வடநாடு ஆறிரண்டு - அவ்வடநா
ட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டாகும்,—கூறு - சொல்லாநின்
ற - திருநாடு ஒன்று ஆ - திருவைகுந்தம் ஒன்று ஆக நூற்றெ
ட்டுத்திருப்பதியென,—கொள் - கொள்ளுவாயாக—எ-று.

(க-து) நூற்றெட்டுத்திருப்பதிகளு மிவ்வழி யடங்கும்-எ-ம்

## நூல்.

### சோழநாட்டுத்திருப்பதிகள் - ௪௦.

### திருவரங்கம்பெரியகோயில்.

சீர்வந்த வுந்தித் திசைமுகனு லல்லாதென்
சோர்வந்த சொல்லிற் சுருங்குமோ - ஆர்வம்
ஒருவரங்கங் கோயி லுகந்தவனை யாள்வான்
திருவரங்கங் கோயிற் சிறப்பு.

(இ-ள்) ஆர்வம் - அன்பையுடைய,— ஒருவர் - தாசபூதராம் ஒருவருடைய,— அங்கம் - சரீரத்தை,— கோயில் - கோயிலாக,— உகந்து - விரும்பி,— அவனை - அத்தாசபூதனை,— ஆள்வான் - அடிமைகொள்பவனாகிய ஸ்ரீமந்நாராயணனது,— திருவரங்கம்கோயில் - திருவரங்கம்பெரியகோயில் (என்னும் திவ்ய தேசத்தின்,)— சிறப்பு - பெருமையானது,— சீர் - சிறப்புவாய்ந்த,— உந்தி வந்த - நாபிக்கமலத்திலுதித்த,— திசைமுகனால் - பிரமதேவனால்,— அல்லாது - அல்லாமல்,— என் - என்னுடைய,— சோர்வந்த - குற்றமுற்ற,— சொல்லில் - மொழியில்,— சுருங்குமோ - அடங்குமோ—எ-று.

(விசேடம்) ஆர்வம் - அன்பையுடைய,— ஒருவர் - ஒப்பற்ற தவசிகள்,— அங்கு அங்கு - அவ்வவ்விடங்களில்,— ஓயில் - அவாக்களை ஒழியப்பெற்றால்,— அவனை - அவர்களை,— உகந்து - சந்தோஷித்து,— ஆள்வான் - அடிமைகொள்பவனுடைய —என்று உரைப்பாருமுளர்.

(க-ரு.) திருவரங்கங்கோயிற் சிறப்பு எனது சொல்லில் அடங்காது—எ-ம். (க)

## திருவுறையூர்.

சிறப்புடைய செல்வத் திருப்பதிகள் போல
மறப்புடைய நாயேன் மனத்துள் - உறப்போந்
தறந்தையா நின்ற வரங்கா திருவாழ்
உறந்தையா யிங்குறைந்த தோது.

(இ-ள்) சிறப்பு உடைய - பெருமை வாய்ந்த,—செல்வம் - ஐஸ்வரியம் பொருந்திய,—திருப்பதிகள்போல - திவ்வியக்ஷேத்திரங்கள்போல,—மறப்புஉடைய - மறதியையுடைய,—நாயேன - நாய்போன்றவனாகிய எனது,—மனத்துள்-சிந்தையில்,—உற - பொருந்த,—போந்து - வந்து,—அறம் - தருமத்தை,—தையா நின்ற - பொருந்தவைக்கா நின்ற,—அரங்கா - திருவரங்கநாதனே!—திருவாழ் - பெரியபிராட்டியார் வசிக்கின்ற,—உறந்தையா - திருவுறையூரென்னுந் திவ்வியதேசத்தையுடையவனே,—இங்கு - என்மனதில்,— உறைந்தது - பொருந்திய காரணத்தை,—ஓது - சொல்லுவாயாக—எ-று.

(க-ள்) உறந்தையா! சிறப்புடைய திருப்பதிகள்போல என் மனத்துள் உறைந்தது ஓது—எ-ம். (௨)

## திருத்தஞ்சைநகரம்.

ஓதக்கே ணெஞ்சே யுனக்குமிது நன்றெனக்கும்
மேதக்க நன்மையினி வேறில்லை - போதப்
பெருந்தஞ்சை மாமணியைப் பேணி வடிவம்
பொருந்தஞ்சை மாமணியைப் போற்று.

(இ-ள்) நெஞ்சே - மனமே!—ஓத - யான் சொல்ல,—கேள் - கேட்பாயாக,—உனக்கும் இது நன்று - (எந்தனக்கேயன்றி) உந்தனுக்கும் இது நல்லதாகும்,—எனக்கும் - எந்தனுக்கும்,—மே

தக்க - மேன்மையாகிய,—நன்மை - நலமானது,— வேறு இல்லை - பிறிதொன்றில்லை,— போத - மிகவும்,—பெரு - பெரிய,— தஞ்சை - திருத்தஞ்சையென்னுந் திவ்விய தேசத்திலெழுந்தருளிய,—மாமணியை - சிறந்த மாணிக்கம்போன்ற சுவாமியை,— பேணி - போற்றி,—பொருந்து - நித்தியமாக வசித்த,—வடிவம் அஞ்சை - விபவம், பரத்துவம், அந்தரியாமித்துவம், அர்ச்சாவதாரம், வியூகம் என்னும் ஐந்து வடிவங்களையும்,—மா - பெரிய பிராட்டியாரையும்,—மணியை - கவுஸ்துவமணியையும்,—போற்று - துதிசெய்வாயாக—எ-று.

(க-து.) மனமே! திருத்தஞ்சை மாமணியைப் போற்றின் நம் மிருவருக்கும் நன்மையாம்—எ-ம். (௯)

## திருவன்பில்.

போற்றிசெய வோர்குடைக்கீழ் பொன்னாடுமிந்நாடும்
நாற்றிசையு மாண்டாலு நன்கில்லை - தோற்றமிலா
எந்தையன்பி லாதி யிணைத்தா மரையடிக்கே
சிந்தையன்பி லாதார் சிலர்.

(இ-ள்) தோற்றம் இலா - உற்பத்தியில்லாத,— எந்தை - என் தந்தையாகிய,—அன்பில் - திருவன்பிலென்னுந் திவ்விய தேசத்திலெழுந்தருளிய,—ஆதி - மூலகாரணனது,—இணைத்தாமரை அடிக்கு - உபயசரணாரவிந்தங்களுக்கு,— சிந்தை - மனதில்,— அன்பு இலாதார் - பத்தியில்லாதவராகிய,—சிலர் - சிலபேர்,— போற்றிசெய - (யாவரும்) துதிக்க,—ஓர்குடைக்கீழ் - ஏகசத்திரத்தின்கீழ் (அதாவது ஒரே செங்கோலின் கீழ்),— பொன்னாடும் - தேவலோகத்தையும்,—இந்நாடும் - இவ்வுலகத்தையும்,— நால்திசையும் - நான்கு திக்குகளையும்,—ஆண்டாலும் - அரசா

ட்கிசெய்தபோதிலும்,—நன்கு இல்லை - நன்மையில்லை—என்று ஏ-தேற்றம்.

(க-து.) எந்தை யடிக்கு அன்பிலார் பொன்றுமிடம் இக்காடு மாண்டாலும் நன்கில்லை—எ-ம். (௪)

## திருக்கரம்பனூர்.

சிலமா தவஞ்செய்துந் தீவேள்வி வேட்டும்
பலமாநதியிற் படிந்தும் - உலகில்
பரம்பநூல் கற்றும் பயனில்லை நெஞ்சே
கரம்பனூ ருத்தமன்பேர் கல்.

(இ-ள்) சில - சிறிது,—மாதவம் - பெருந்தவத்தை,—செய்தும் - புரிந்தும்,—தீவேள்வி வேட்டும் - அக்கினி ஹோத்திரமாகிய யாகத்தைச்செய்தும்,—பல - பலவாகிய,—மாநதியில் - மிக்க புண்ணிய ஆறுகளில்,—படிந்தும் - மூழ்கியும்,—உலகில் - உலகத்தில்,—பரம்ப - விரியாக,—நூல் - சாஸ்திரங்களை,—கற்றும்-வாசித்தும்,—பயன் - பிரயோசனம்,—இல்லை - (ஒன்று)மில்லை (ஆதலால்),—நெஞ்சே - மனமே!—கரம்பனூர் - திருக்கரம்பனூரென்னுந்திவ்யதேசத்தி லெழுந்தருளிய,—உத்தமன் - புருஷோத்தமனது,—பேர் - திருநாமங்களை,—கல் - கற்றுக்கொள்ளுவாயாக—எ-று.

(க-து.) திருக்கரம்பனூ ருத்தமன்பேரைக் கல்லாது யாது புரியினும் பயனில்லை—எ-ம். (௫)

## திருவெள்ளறை.

கல்லிருந்தான் றங்கைக் கமலத்தோ னக்கமலத்
தில்லிருந்தாள் நங்கை யரங்கேசனென்றே - சொல்லுமுறை
உள்ளுறையா நின்றவையா லுள்ளமே தள்ளுமிந்நி
வெள்ளறையா னருளே விருப்பு.

(இ-ள்) கல் இருந்தான் - (கைலாய) மலையிலிருந்த சிவனா லும்,—தந்தை - தகப்பன்,—கமலத்தோன் - தாமரையில்வசிக்கும் பிரமனுக்கு,—அக்கமலத்தில்இருந்தான் - அந்தத்தாமரைக்கமல த்திலிருந்த பிரமனது,—தந்தை - பிதா,—அரங்கேசனென்று - திருவரங்கநாதனென்று,—தொல்லை - பழமையாகிய,—மறையு ள் - வேதங்களுள்,—அறையாநின்றமையால் - சொல்லுகையா ல்,—உள்ளமே - மனமே,—கள்ளம் இன்றி - கரவடமில்லாம ல்,—வெள்ளறையான் - திருவெள்ளறையென்னும் திவ்விய தே சத்தையுடையவனது,—தாள் - பாதங்களை,—விரும்பு - ஆசை கொள்ளுவாயாக—எ-று. ஏ-முன்னையது - அசை—பின்னைய து - தேற்றம்,

(க - து.) உள்ளமே! வெள்ளறையான் றாளை விரும்பு— எ-ம். (௬)

## திருப்புள்ளம்பூதங்குடி.

விரும்பினவை யெய்தும் வினையனைத்துந் தீரும்
அரும்பரம வீடு மடைவீர் - பெரும்பொறிகொள்
கள்ளம்பூ தங்குடிகொள் காயமுடை யீரடிகள்
புள்ளம்பூ தங்குடியிற் போம்.

(இ-ள்) விரும்பினவை - இச்சித்தவைகள்,—எய்தும் - வந் தகூடும்,—வினை அனைத்தும் - வினைகள்யாவும்,—தீரும் - நீங் கும்,—அரு - அரிய,—பரமவீடும் - மேலாகிய மோக்ஷமும்,—அ டைவீர் - சேருவீர்கள் (ஆதலால்),—பெரு - பெரிய,—பொறி - ஐம்பொறிகளை,—கொள் - கொண்ட,—கள்ளம் - கரவடமும்,— பூதம் - பூதங்களும்,—குடிகொள் - வாசமாயிருக்கிற,— காயம் - தேகத்தை,—உடையீர் - உடையவர்களே,—அடிகள் - எம்பெருமானது,—புள்ளம் பூதங்குடியில் - திருப்புள்ளம் பூத

ங்குடி யென்னும் திவ்யதேசத்துக்கு,—போம் - ஏகுங்கள்—ஏ-று.

(க-து.) புள்ளம் பூதங்குடியிற் சேர்கில் விரும்பினவை யாவும் கிடைக்கும்—எ-ம்.

(எ)

## திருப்பேர்நகர்.

போமானை யெய்து பொருமானைக் கொம்புபறித்
தாமானை மேய்த்துவந்த வம்மானை - தாமச்
செழுந்திருப்பே ரானைச் சிறுகாலைச் சிந்தித்
தெழுந்திருப்பேற் குண்டோ விடர்.

(இ-ள்) போம் - தனக்குமுன்னதாகச்சென்ற,—மானை - (மாரீசனென்னும்) மானை,—எய்து - அஸ்திரப்பிரயோகஞ்செய்து,—பொரும் - யுத்தஞ்செய்த,—ஆனை - (குவலயாபீடமென்னும்) யானையினது,—கொம்பு - தந்தங்களை,—பறித்து - கவர்ந்து,—ஆம் - விருத்தியாகின்ற,—ஆனை - பசுக்கூட்டத்தை,—மேய்த்துவந்த - மேய்த்துவந்த,—அம்மானை - சுவாமியை,—தாமம் - மாலையணிந்த,—செழு - வளவிய,—திருப்பேரானை - திருப்பேரென்னுந் திவ்விய தேசத்தையுடையவனை,—சிறுகாலை - பிராதகாலத்தில்,—சிந்தித்து - தியானித்து,—எழுந்திருப்பேற்கு - எழுந்திருக்குமெனக்கு,—இடர் - துன்பமானது,—உண்டோ - உள்ளதோ (இல்லை)—எ-று. ஓ-எதிர்மறை.

(க-து.) திருப்பேர்நகரானைச் சிந்தித் தெழுந்திருப்பவனுக்கு இடர் இல்லை—எ-ம்.

(அ)

## திருவாதனூர்.

இடரான வாக்கை யிருக்க முயலார்
மடவார் மயக்கின் மயங்கார் - கடவுளர்க்கு
காதனை ராதரியார் காளனெனதென் னூரமலன்
சீதனை சேர்ந்தடி யார்.

யில்தோறும் - முன்றில்தோறும்,—நின்று நின்று - நெடுநேரம் நின்று,—தூங்கும் - உறங்கிவிழும்,—மடம் - அறியாமையாகி ய,—நெஞ்சே - மனமே!—இன் - இனிமையாகிய,—தமிழை - தமிழ்ச்செய்யுளை—கூறைக்கும் - வஸ்திரத்திற்கும்,—சோற்று க்கும் - அன்னத்திற்கும்,—கூறுதே - பாடாதே,—பேறு ஆக - பயன் உண்டாக,—சேறைக்கு - திருச்சேறையென்னும் திவ்விய தேசத்துக்கு,—நாயகன் - தலைவனது,—பேர் - திருநாமத் தை,—செப்பு - சொல்லுவாயாக—எ-று. கூறுதே என்று மு ற்றை எச்சமாக்கிப் பாடாமல் எனவுரைப்பினுமமையும்—

(க-று) நெஞ்சே! இன் தமிழால் சேறைக்குநாதன் பேரே கூறு—எ-ம். (கஉ)

## திருத்தலைச்சங்கநாண்மதியம்.

செப்புங்கா லாதவனுந் திங்களும்வா னுந்தரையும்
அப்புங்கா லுங்கனலு மாய்நின்றான் - கைப்பால்
அலைச்சங்க மேந்து மணியரங்கத் தம்மான்
தலைச்சங்க நாண்மதியத் தான்.

(இ-ள்) கைப்பால்-கையினிடத்தில்,—அலை - (சத்துருக்களை) அலையச்செய்யும்,—சங்கம்-பாஞ்சசன்னியத்தை,—ஏந்தும்- தாங் கிய,—அணி - அழகிய,—அரங்கத்து - திருவரங்கத்திலெழுந்த ருளிய,—அம்மான் - சுவாமியும்,—தலைச்சங்கநாண்மதியத்தா ன்-திருத்தலைச்சங்கநாண்மதியமென்னுந்திவ்வியதேசத்திலெழு ந்தருளியிருக்கின்றவனுமாகிய (ஸ்ரீயப்பதி),—செப்புங்கால் - சொ ல்லுமிடத்தில்,—ஆதவனும் - சூரியனும்,—திங்களும் - சந்திரனு ம்,—வானும் - ஆகாயமும்,—தரையும் - பூமியும்,—அப்பும் - ஜ லமும்,—காலும் - காற்றும்,—கனலும் - அக்கினியும்,—ஆய்நின்

றான் - ஆகின்றனன் — எ-று. அலை சங்கம் - சமுத்திரத்திலுண்டாகிய சங்கம் எனினுமமையும்.

(க-து.) திருத்தலைச்சங்கநாண்மதியத்தான் அட்டமூர்த்தமுமாய் நின்றான் — எ-ம். (க௩)

## திருக்குடந்தை.

தானே படைத்துலகைத் தானே யளித்துநீ
தானே யழிக்குந் தனிச்சியோ - வானிற்
திருமகுடந் தைச்சிறுகுறளாய் நீண்ட
பெருமகுடந் தைக்கிடந்தாய் பேசு.

(இ-ள்) உலகை - உலகத்தை, — நீதானே படைத்து - நீயே சிருஷ்டித்து — நீதானே அளித்து - நீயே இரக்ஷித்து, — நீதானே - நீயே, — அழிக்கும் - சம்மரிக்கும், — தனிச்சியோ - இளைப்பிறேலோ, — வானில் - ஆகாயத்தில், — திருமகுடம் - அழகிய கிரீடமானது, — தைக்க - பொருந்த, — சிறு - சிறிய, — குறளாய் — வாமனாவதாரமாகி, — நீண்ட - பின் திருவிக்கிரம அவதாரங்கொண்ட, — பெரும - பெருமானே, — குடந்தை - திருக்குடந்தையென்னுந் திவ்வியதேசத்தில், — கிடந்தாய - சயனித்திருக்கின்றனே, — பேசு - சொல்லுவாயாக. — எ-று.

(க-து) நெடியோனே! நீர் திருக்குடந்தையிற் பள்ளிகொண்டது சிருட்டி திதி சம்மாரஞ் செய்ததனாலுண்டாகிய ஆயாசமோ — எ-ம். (க௪)

## திருக்கண்டியூர்.

பேசவரிற் றென்னரங்கன் பேரெல்லாம் பேசுகவாய்
சேவையைக் காண்கவிழி கேட்கசெவி - நேசனார்
கண்டியூர் தோளு முழுஞ்சிரவா மற்றனிர்த்தான்
கண்டியூர் கூட்டுகவென் கை.

(இ-ள்) வாய் - என்வாயானது,—பேசவரில் - பேசவேண்டி
ல்,—தென் - தெற்கின்கணுள்ள,—அரங்கன் - திருவரங்கநாதன
து,—பேர் எல்லாம் - திருநாமங்களையெல்லாம்,—பேசுக - பே
சக்கடவது,—விழி - என் கண்களானவை,—கேசவனை - கேச
வனென்னுந் திருநாமத்தையுடையவனை,—காண்க - காணக்கட
வது,—செவி - என் காதுகள்,—கேட்க - அவன்(புகழையே)கே
ட்கக்கடவது,—ஈசனார் - ருத்திரனார்,—உண்டி - உணவை,—
ஊர் தோறும் - ஊர்கடோறும்,—உழன்று - வருந்திச்சென்று,—
இரவாமல் - யாசியாமல்,—தவிர்த்தான் - நீக்கியவனுடைய,—
கண்டியூர் - திருக்கண்டியூரென்னுந்திவ்வியதேசத்தை,—என்
கை - என்கரங்களானவை,—கூப்புக - குவித்துவணங்கக்கடவ
ன—எ-று.

(க-து.) எனது வாய் முதலிய வென்னரங்கன்புகழ் கூறுதல்
முதலியவற்றிற் குபயோகமாகுக—எ-ம். (கரு)

திருவிண்ணகரம்

கையு முரையுங் கருத்துமுனக் கேயடிமை
செய்யும்படிநீ திருத்தினாய் - ஐயா
திருவிண் ணகராளா சிந்தையிலு மெண்ணேன்
பெருவிண் ணகராளும் பேறு.

(இ-ள்) கையும் - கரங்களும்,—உரையும் - சொல்லும்,—கரு
த்தும் - நினைப்பும்,—உனக்கே - நினக்கே,—அடிமைசெய்யும்
படி - தொண்டுபுரியும்வண்ணம்,—நீ - நீயே,—திருத்தினாய் - தி
ருத்தஞ்செய்தாய்,(ஆதலால் உன்னைத் தியானிப்பதை விட்டு),—
ஐயா - ஐயனே,—திருவிண்ணகர்ஆளா - திருவிண்ணகரமென்
னுந் திவ்வியதேசத்தை ஆளப்பட்டவனே,—பெரு - பெரிய,—
விண்ணகர் - தேவலோகத்தை,—ஆளும் - அரசுசெய்யும்,—பே

று - செல்வத்தை,—சிந்தையிலும் - மனதிலும் —எண்ணேன் - (கிஞ்சித்தேனு) நினையேன்—எ-று.

(க-து.) திருவிண்ணகரானே! நினக்குத் தொண்டு செய்வதை விட்டு தேவலோகத்தை ஆளும் பேறு எண்ணேன்—எ-ம்.(கசா)

திருக்கண்ணபுரம்

பேறு தரினும் பிறப்பிறப்பு நோய்மூப்பு
வேறுதரினும் விடேன்கண்டாய் - ஏறுநீர்
வண்ணபுரத் தடியன் மனம்புகுந்தாய் வைகுந்தா
கண்ணபுரத் தாயுன் கழல்.

(இ-ள்) ஏறுநீர் - சமுத்திரம்போலும்,— வண்ணம் - நிறத்தையுடைய,—புரத்தாய் - திருமேனியையுடையவனே,—என எனது,—மனம் - கருத்தில்,—புகுந்தாய்-பிரவேசித்தவனே,—வைகுந்தா - பரமபதத்தையுடையவனே,—கண்ணபுரத்தாய் - திருக்கண்ண புரமென்னுந்திவ்விய தேசத்தையுடையவனே,—உன்கழல் - நின் திருவடிகளை,—பேறுதரினும் - செல்வத்தைக் கொடுத்தாலும், — பிறப்புஇறப்பு - ஜனனமரணத்தையும்,—நோய் - வியாதியையும். — மூப்பு - விருத்தாப்பியத்தையும்,—வேறுதரினும் - இன்னும்வேறுமெவற்றைக் கொடுப்பினும்,—விடேன் - விடுநீங்கேன—எ-று. கண்டாய் - முன்னிலையசை.

(க-து.) திருக்கண்ணபுரத்தாய்! நன்மைவரினும் தீமைவரினும் நின் கழலை மறவேன்—எ-ம். (கஎ)

திருவாலி.

கழன்றுபோம் வாயுவினைக் கட்டாம தீர்த்தம்
உழன்றுபோ யாடாம லுய்ந்தேன் - அழன்று

பொருவாலி காலன் பரகாலன் போற்றும்
திருவாலி மாயனையே சேர்ந்து.

(இ-ள்) அழன்று - கோபித்து,—பொரு - யுத்தஞ்செய்த,—வாலி - வாலிக்கு,—காலன் - இயமனும்,— பரகாலன் - திருமங்கையாழ்வார்,—போற்றும் - துதிக்கின்ற,—திருவாலி - திருவாலியெனனும் திவ்விய தேசத்திலெழுந்தருளியிருக்குர்,—மாயனை - மாயனென்னுந்திருநாமத்தையுடையவனுமாகிய விஷ்ணுவை,—சேர்ந்து - அடைந்து,—கழன்றுபோம்,- உடலைவிட்டு நீங்கிப்போகின்ற,—வாயுவினை - பிராணவாயுவினை,—கட்டாமல்-பந்திக்காமலும்,— தீர்த்தம்,—புண்ணிய நதிகளில்,—உழன்று போய் - வருந்திச்சென்று,—ஆடாமல் - ஸ்நாநஞ்செய்யாமலும்,—உய்ந்தேன் - உச்சீவித்தேன்—எ-று.

(க-து) திருவாலிமாயனைச் சேர்ந்து பிராணயாம முதலிய செய்யாமலே உய்ந்தேன்—எ-ம். (சஅ)

## திருநாகை.

சேர்ந்துனக்குக் குற்றேவல் செய்திலனென் சிந்தையினீ
ஆர்ந்ததற்கோர்கைம்மாறறிகிலேன்-பூந்துவரை
மன்னாகை யாழி வலவா வலம்புரியாய்
தென்னாகை யாயருளிச் செய்.

(இ-ள்) சேர்ந்து - நின்னை அடைந்து,—உனக்கு - உந்தனுக்கு,—குற்றேவல் - சிறியபணிவிடையை,—செய்திலன் - செய்யாதவனாகிய,—என்சிந்தையில் - என் மனதில்,— நீ ஆர்ந்ததற்கு - நீர் எழுந்தருளியதற்கு,—ஓர் கைம்மாறு - ஓர் பிரதியுபகாரமும்.—அறிகிலேன் - தெரிந்திலேன்,— (ஆயினும்) பூம் - அழகிய,—துவரை - துவாரகாபுரிக்கு,— மன்னா - அரசனே,—கை - கரத்தில்,—ஆழி - சக்கரத்தையுடைய,—வலவா - வெற்

றிடையுடையவனே,—வலம்புரியாய் - பாஞ்சசந்நியத்தையுடை யவனே,—தென் - தெற்கின்கணுள்ள,—நாகையாய் - திருநா கைபென்னும் திவ்விய தேசத்தையுடையவனே,—அருளிச்செ ய் - கிருபைசெய்வாயாக—எ-று.

(க-து.) தென்நாகையாய்! நீ என் மனம்புகுந்ததற் கோர்கை ம்மாறின்றென மருள்புரிக—எ-ம். (கசு)

## திருநறையூர்.

செய்ய சடையோன் றிசைமுகத்தோன் வானவர்கோன்
ஐயமறுத் தின்ன மறியாரே - துய்ய
மருநறையூர் வண்டுழாய் மாயோன்செவ் வாயோன்
திருநறையூர் நின்றான் செயல்.

(இ-ள்) துய்ய - பரிசுத்தமாகிய,—மரு-வாசனை தங்கிய,—ந றை-தேன்,—ஊர்-பரவுகின்ற,—வண்-வளப்பம்பொருந்திய,— துழாய் - திருத்துழாய் மாலையையுடைய,—மாயோன் - மா யோனென்னுந் திருநாமத்தையுடையவனும், —செவ் வாயோ ன் - செந்தாமரைபோன்ற வாயையுடையவனும்,—திருநறையூ ர் - திருநறையூரென்னுந் திவ்விய தேசத்தில்,—நின்றான் - நின்ற திருக்கோலங் கொண்டவனுமாகிய திருமாலின்,— செயல் - செயலை,—செய்ய - சிவந்த,—சடையோன் - சடை யினையுடைய ருத்திரனும்,—திசைமுகத்தோன் - பிரமனும்,— வானவர்கோன் - தேவேந்திரனும்,—ஐயம் அறுத்து - சந்தே கத்தை நீக்கி,—இன்னம் - இன்னும்,—அறியார் - தெளியார் கள் - எ-று. ஏ-தேற்றம்.

(க-து.) திருநறையூர் நின்றான் செயலை ஒருவராலுமுணர தல் கூடாது—எ-ம். (கஎ)

## திருநந்திபுர விண்ணகரம்.

செயற்கரிய செய்வோமைச் செய்யாம னெஞ்சே
மயக்குவா ரைவர் வலியால்- நயக்கல்வி
சிந்திபுர விண்ணகர வென்பர்திருச் செங்கண்மால்
நந்திபுர விண்ணகர நாடு.

(இ-ள்) செயற்கு - செய்தற்கு,—அரிய - அருமையானவை களை,—செய்வோமை - செய்யுந்தன்மையையுடைய எம்மை,—செய்யாமல் - செய்யவொட்டாமல்,—ஐவர் - பஞ்சேந்திரியங் களாவார்,—வலியால் - வன்மையால்,—மயக்குவர் - மயக் குவார்கள் (அன்றியும்),—நயகல்வி-நயம்பொருந்தியகல்வியை,—சிந்தி - தெறித்து (பாடி)—விண்ணகர- தேவேந்திரனுக்குச்சமா னமானவனே,—புர - காப்பாயாக,—என்பர் என்றிரக்கும்படி செய்வர் (ஆதலால் - அங்ஙனம் பஞ்சேந்திரியங்களின் வயத்தாய்ச் செல்வதைவிட்டு),—நெஞ்சே - மனமே,—நந்திபுரவிண்ணகர ம் - திருநந்திபுரவிண்ணகர மென்னுந் திவ்வியதேசத்தை,—நா டு - தியானிப்பாயாக. எ-று.

(க-நு.) பஞ்சேந்திரியங்களின் வயத்தாய்ச் செல்வதைவிட்டு திருநந்திபுரவிண்ணகரம் நாடு—எ-ம். (உக)

## திருவிந்தளூர்.

நாடுதும்வா நெஞ்சமே நாராய ணன்பதிகள்
கூடுதும்வா மெய்யடியார கூட்டங்கள் - சூடுதும்வா
வீதியிந்த ளத்தகிலின் விசுபுகை வாசமெழும்
ஆதியிந்த ளூரா னடி.

(இ-ள்) நெஞ்சமே - மனமே,—நாராயணன் - நாராயணனு டைய,—பதிகள் -திருப்பதிகளை,—நாடுதும் வா - தரிசிப்போம்

வா,—மெய் - உண்மையாகிய,—அடியார் கூட்டங்கள் - தாச கோஷ்டியில்,—கூடுதும் வா - சேர்வோம் வா,—வீதி - வீதி களில்,—இநதளத்து - தூபக்கால்களில்,—அகிலின் - அகிற் கட்டைகளின்,—வீசு - வீசுகின்ற,—புகை - தூமத்தின்,—வா சம் - கந்தமானது,—எழும் - எழுகின்ற,—ஆதி - முதன்மை யாகிய,—இந்தளூரான் - திருவிந்தளூரென்னுந் திவ்வியதேசத் தையுடையவனது,—அடி - பாதங்களை,—சூடுதும் வா - தரி த்துக் கொள்ளுவோம் வா. எ-று.

(க-து.) நெஞ்சே! நாராயணன் பதிகள் நாடி, மெய்யடியா ர்கூட்டத்துடன்கூடி, அடிசூடிக்கொள்ளுவம் வா—எ-ம். (உஉ)

## திருச்சித்திரகூடம்.

அடியா லுலகெல்லா மன்றளந்து கொண்ட
நெடியானைக் கூடுதியேனெஞ்சே - கொடிதாய
குத்திரகூ டங்கி கொளுந்தாமுன் கோவிந்தன்
சித்திரகூ டங்கருதிச் செல்.

(இ-ள்) நெஞ்சே - மனமே,—அடியால் - திருவடியினால்,— உலகு எல்லாம் - உலகங்களை எல்லாம்,—அன்று - வாமனாவ தாரங் கொண்டகாலத்து,—அளந்து கொண்ட - அளவிட்டு வாங்கிக்கொண்ட,—நெடியானை - (பின்)திருவிக்கிரமாவதாரங் கொண்டவனை,—கூடுதியேல் - கூடக்கருதினால்,—கொடிதாய- கொடுமையாகிய,— குத்திரம் - வஞ்சனையையுடைய,—கூடு - தேகமானது,—அங்கி - அக்கினியில்,—கொளுந்தாமுன் - வே காமுன்னம்,—கோவிந்தன் - கோவிந்தனுடைய,—சித்திரகூட ம் - திருச்சித்திரகூடமென்னும் திவ்வியதேசத்தை,—கருதி - நி

னைத்து,—செல் - ஏகுவாயாக—எ-று.

(க-து.) நெஞ்சே! தேகம் தகனப்படுவதற்குமுன் திருச்சித்திரகூடங்கருதிச் செல்—எ-ம். (உக)

## திருச்சீராமவிண்ணகரம்.

செல்லுந் தொறுமுயிர்பின் செல்லு மிருவினையை
வெல்லு முபாயம் விரும்புவீர் - தொல்லரங்கர்
சீராம விண்ணகரஞ் சேர்மினபின் மீளாத
ஊராம விண்ணகர முண்டு.

(இ-ள்) செல்லும் தொறும் - (உடலைவிட் டுயிர்)நீங்கிப்போகுந்தோறும்,—உயிர்பின் - உயிரின்பின்,—செல்லும் - போகாநின்ற,—இருவினையை-(நல்வினை தீவினையென்னும்)இரண்டு வினைகளையும்,—வெல்லும் - செயிக்கின்ற,—உபாயம் - உபாயத்தை,—விரும்புவீர் - இச்சிக்கின்றவர்களே,—தொல் - புராதனமாகிய,—அரங்கர் - திருவரங்கநாதருடைய,—சீராமவிண்ணகரம் - திருச்சீராம விண்ணகரமென்னுந் திவ்வியதேசத்தை,—சேர்மின் - அடையுங்கள்,—பின் - மறுபடியும்,—மீளாத - திரும்பக்கூடாத,—ஊராம் - திருநாடாகிய,—அ விண்ணகரம் - அந்தப்பரமபதமானது,—உண்டு - கிடைக்கும்—எ-று.

(க-து.) சீராமவிண்ணகரம்சேர்ந்தால் பரமபதம் கிடைக்கும்—எ-ம். (உஉ)

## திருக்கூடலூர்.

உண்டோகேட் டிற்றுமோர் துப்பார்க்கு மைவர்க்கே
தொண்டுபட லாமோவுன் றொண்டனேன் - விண்டிலங்கும்
ஆடலூர் வேயிமுத லம்படையா யன்புடையாய்
கூடலூ ராயிதனைக் கூறு.

(இ-ள்) உன் தொண்டனேன் - உனது அடிமையாகிய யான்,—உண்டு - புசித்து,—கேட்டு - கேட்டு,—உற்று - பரிசித்து,—மோந்து - வாசனைபார்த்து,—பார்க்கும் - காண்கின்ற,—ஐவர்க்கே - பஞ்சேந்திரியாதியர்க்கே—தொண்டுபடல் ஆமோ- அடிமைப்படலாகுமோ.—விண்டு - ஒளிவிட்டு,—இலங்கும் - பிரகாசிக்கின்ற,—ஆடல் ஊர் - போர்புரியும்,—நேமிமுதல் - சக்கரமுதலாகிய,— ஐம்படையாய் - பஞ்சாயுதங்களையுடையவனே,—அன்பு உடையாய் - தயையுடையவனே,—கூடலூராய் - திருக்கூடலூரென்னுந் திவ்விய தேசத்தை யுடையவனே,—இதனைக்கூறு - இதனைச் சொல்லுவாயாக—எ - று.

(க-து.) திருக்கூடலூராய்! உன் தொண்டன் பஞ்சேந்திரியாதியர் வசத்தாதல் தகுதியன்று—எ-ம். (உரு)

## திருக்கண்ணங் குடி.

கூறுபுகழ்த் தன்னடிக்கே கூட்டுவரோ வின்னமென்னை
வேறுபடப் பல்பிறவில் வீழ்த்துவரோ - தேறுகிலேன்
எண்ணங் குடியா யிருந்தானின் றான்கிடந்தான்
கண்ணங் குடியான் கருத்து.

(இ-ள்) எண்ணம்-என்மனதில்,—குடியாயிருந்தான்-வாசமாகவிருந்தவனும்,—நின்றான் - நின்றகோலங் கொண்டிருந்தவனும்,—கிடந்தான் - சயனித்த கோலங்கொண்டவனுமாகிய,—கண்ணங்குடியான் - திருக்கண்ணங்குடியென்னுந் திவ்வியதேசத்தையுடையவராது,—கருத்து - எண்ணமானது,— கூறு - சொல்லுகின்ற,—புகழ் - கீர்த்தியினையுடைய,—தன் அடிக்கே - தனது சரணங்களுக்கே,—கூட்டுவரோ - சேர்ப்பாரோ,—இன்னம் - இனிமேலும்,—என்னை - அடியேனை,—வேறுபட - காறு

விதப்பட,—பல் பிறப்பில் - பலஜனனங்களில்,— வீழ்த்துவ
ரோ - விழும்படி செய்வாரோ,—தேறுகிலேன் - ஒன்று மறியே
ன்—எ-று.

(க-து.) திருக்கண்ணங்குடியான் என்னம் யாதோ யானறி
கிலேன்—எ-ம். (உசு)

## திருக்கண்ணமங்கை.

கருத்தினால் வாக்கினா னான்மறையுங் காணா
வொருத்தனைநீ நெஞ்சே யுணரிற் - பெருத்தமுகில்
வண்ணமங்கை கண்கால் வனசந் திருவரங்கம்
கண்ணமங்கை யூரென்று காண்.

(இ-ள்) கருத்தினால் - மனதினாலும்,—வாக்கினால் - வாக்கி
னாலும்,—நால்மறையும் - நான்குவேதங்களும்,—காணா - தெரி
யொணாத,—ஒருத்தனை - ஒருத்தனாகிய விஷ்ணுவை,—நெஞ்
சே - மனமே,—நீ உணரில் - நீ அறியில்,—வண்ணம் - நிறமான
து,—பெருத்த - பெரிதாகிய,—முகில் - மேகமென்றும்,—அம் -
அழகிய,—கை - கரங்களும்,—கண் - நேத்திரங்களும்,—கால் -
திருவடிகளும்,—வனசம் - தாமரைகளென்றும்,—திருவரங்க
ம் - திருவரங்கமும்,—கண்ணமங்கை - திருக்கண்ணமங்கையு
ம்,—ஊர் - அவனது திவ்வியதேசங்களென்றும்,—காண் - அறி
வாயாக—எ-று.

(க-து.) நெஞ்சே! நமது பெருமானை யுணரவேண்டில் முகில்
வண்ணனென்றும், வனசம்போன்ற அங்கை கண் காலுடையவ
னென்று மறிக—எ-ம். (உஎ)

## திருக்கவித் தலம்

காணியு மில்லமுங் கைப்பொருளு மீன்றோரும்
பேணிய வாழ்க்கையும் பேருறவும் - சேணில்

புவித்தலத்தி லின்பமும் பொங்கரவ மேறிக்
கவித்தலத்திற் கண்டுயில்வோன் கால்.

(இ-ள்) காணியும் - பூமியும்,—இல்லமும் - வீடும்,—கைப் பொருளும் - கரத்திலுள்ள திரவியமும்,—பேணிய - விரும்பிய,—வாழ்க்கையும் - வாழ்வும்,—போ உறவும் - மிக்க சுற்றமும்,—சேணில் - தெய்வலோகத்திலும்.—புவித்தலத்தில் - பூலோகத்திலு(முண்டாகிய),—இன்பமும் - சுகமும்,—பொங்கு- கோபமுள்ள,—அரவம் ஏறி - ஆதிசேடன்மீ தேறி,—கவித்தலத்தில்,—திருக்கவித்தலமென்னுந் திவ்வியதேசத்தில்,—கண்துயில்வோன் - திருக்கண்வளர்ந் தருளுகின்றவனுடைய,—கால - திருவடியேயாம்—எ-று.

(க-து) திருக்கவித்தலத்தில் கண்துயில்வோன் கால்களே எனது சமஸ்த சம்பத்தும்—எ-ம் (உ௮)

## திருவெள்ளியங்குடி.

காலளவு போதாக் கடன்ஞாலத் தோர்கற்ற
நூலளவே யன்றி நுவல்வாரார் - கோலப்
பருவெள்ளி யங்குடியான பாதகனுள் மாய்த்த
திருவெள்ளி யங்குடியான் சீர்.

(இ-) கோலம் - அழகிய,—வெள்ளியங் குடியான் - திருவெள்ளியங்குடி யென்னுந் திவ்விய தேசத்தை யுடையவனது,—சீர் - சிறப்பை,—கால் - திருவடியினால்,—அளவுபோதா- அளவிடுதற்குப்போதாத,—கடல் - சமுத்திரஞ்சூழ்ந்த,—ஞாலத்தோர் - உலகத்தவர்கள்,—கற்ற - வாசித்துக்கொண்ட,—நூல் - சாஸ்திரங்களின்,—அளவு அன்றி - வரையறையில்லாமல்,—நுவல்வாரார் - (அந்நூலளவுக்குமேம்பட்டு) சொல்வ

வல்லவர்கள்யாவருளர்—எ-று.

(க-து.) திருவெள்ளறையான் சீர் யாவர் நுவலவல்லவர்—எ-ம். (உக)

## திருமணிமாடக்கோயில்.

சீரே தருங்கதியிற் சேருகைக்கு நானுன்னை
நேரே வணங்கினே னெஞ்சேநீ - பாரில்
அணிமாடக் கோயி லரங்கனூர் நாங்கூர்
மணிமாடக் கோயில் வணங்கு.

(இ-ள்) நெஞ்சே - மனமே,— நீ - நீ,—சீரே - சிறப்பையே,—தரும் - கொடுக்கின்ற,—கதியில் - மோக்ஷபதவியில்,—சேருகைக்கு - அடையும் வண்ணம்,—நான் - யான்,—உன்னை - நின்னை,—நேரேவணங்கினேன் - சாஷ்டாங்கமாக வணங்கினேன்.—பாரில் - பூமியில்,—அணி - அழகிய,—மாடம் - உப்பரிகைகளையுடைய,—கோயில் - திருவரங்கம்பெரியகோயிலிலெழுந்தருளிய,—அரங்கர் - திருவரங்கநாதனுடைய,—நாங்கூர் - திருநாங்கூரின் கண்ணதாகிய,—மணிமாடக்கோயில் - திருமணிமாடக்கோயிலென்னுந் திவ்வியதேசத்தை,—வணங்கு - நமஸ்கரிப்பாயாக—எ-று. நாங்கூர் எ-கு நாம்கூர=அச்சத்தைவிளைக்கும் எனினு மமையும்.

(க-து.) நெஞ்சே திருமணிமாடக்கோயில் வணங்கு—எ-ம்.

## திருவைகுந்த விண்ணகரம்.

வணங்கேன் பிறதெய்வ மாலடியா ரல்லார்க்
குணங்கேடர் தங்களுடன் கூடேன் - இணங்கிநின்று
வைகுந்த விண்ணகரம் வாழ்த்துவே னீதன்றோ
வைகுந்த விண்ணகர வாழ்வு.

(இ-ள்) பிறதெய்வம் - இதர தெய்வங்களை,—வணங்கேன் - பணியேன்,— மால் - விஷ்ணுவினுடைய,—அடியார் அல்லா - தாசபூதராகாத,—குணம்கெட்டார்தங்களுடன் - நற்குணமில்லாத கயவருடன்,— கூடேன் - சேரேன்,—இணங்கிநின்று - இயைந்திருந்து,—வைகுந்த விண்ணகரம் - திருவைகுந்தவிண்ணகரமென்னுந் திவ்யதேசத்தை,—வாழ்த்துவேன் - துதிப்பேன்,—ஈது அன்றே - இஃதல்லவோ,—வைகுந்தவிண்ணகரம் - திருவைகுந்த விண்ணகரத்தினுடைய,—வாழ்வு - வாழ்வாவது.

(க-து.) நான்பகவத்விஷயங்களுக்கே யுரியவனுவன்—எ-ம்.

## திருவரிமேயவிண்ணகரம்.

வாழு மடியார் மடநெஞ்சே நம்மளவோ
தாழுஞ் சடையோன் சதுமுகத்தோன் - பாழிக்
கரிமேய விண்ணகரக் காவலோன் கண்டாய்
அரிமேய விண்ணகரத் தார்க்கு.

(இ-ள்) அரிமேய விண்ணகரத்தார்க்கு - திருவரிமேயவிண்ணகரமென்னும் திவ்யதேசத்தையுடையவருக்கு,—மடம் - அறியாமையையுடைய,—நெஞ்சே - மனமே,—வாழும் - வாழ்கின்ற,—அடியார் - பாகவதர்கள்,—நம் அளவோ - நமமட்டேதானோ? அன்று,—தாழும் - தாழ்ந்த,—சடையோன் - சடையினையுடைய ருத்திரனும்,—சதுமுகத்தோன் - பிரமனும்,—பாழி - பலம் பொருந்திய,—கரி - அயிராவதமென்னும் யானையின்மேல்,—மேய - பொருந்திய,—விண்ணகரம் காவலோன் - தேவலோகத்துக்கு அரசனுகிய இந்திரனுமாகும்—எ-று. கண்டாய்—முன்னிலை யசை.

(க-து) திருவரிமேயவிண்ணகரத்தார்க்கு அடியவராவார் இவரிவரெனக் கூறியது—எ-ம். (கஉ)

## திருத்தேவனார் தொகை.

ஆர்க்கும் வலம்புரியா லண்டமு மெண்டிசையுங்
கார்க்கடலும் வெற்புங் கலங்கினவால் - சீர்க்கும்
திருத்தேவ னார்தொகைமால் செவ்வாய்வைத் தூதத்
தருத்தேவனார் தொகையுஞ் சாய்ந்து.

(இ-ள்) சீர்க்கும் -சிறப்புவாய்ந்த,—திருத்தேவனார்தொகை- திருத்தேவனார்தொகை யென்னுந்திவ்வியதேசத்திலெழுந்தருளிய,—மால் - விஷ்ணுவானவர்,—ஆர்க்கும் - சத்திக்கின்ற,—வலம்புரியால்-பாஞ்சசந்நியத்தினால்,—செவ்வாய்வைத்து,—செந்தாமரைபோன்ற வாயில்வைத்து,—ஊத - தொனிக்க,—அண்டமும் - அண்டங்களும்,—எண் திசையும் - அஷ்ட திக்குகளும்,—கார் - கரிய,—கடலும் - சமுத்திரமும்,—வெற்பும - மலையும்,—தரு தேவனார் - கற்பகத்தருவையுடைய தேவர்களுடைய,—தொகையும் - கூட்டமும்,—சாய்ந்து - மூர்ச்சித்து வீழ்ந்து,—கலங்கின - கலக்கமுற்றன—எ-று. ஆல் - அசை.

(க-து.) திருத்தேவனார்தொகை மால் வலம்புரி வைத்தூத யாவுங் கலங்கின—எ-ம். (கூஉ)

## திருவண்புருடோத்தமம்.

சாய்ந்த திருவரங்கந் தண்வேங் கடங்குடந்தை
ஏய்ந்த திருமா லிருஞ்சோலை - பூந்துவரை
வண்புரு டோத்தமமாம் வானவர்க்கும் வானவனும்
ஒண்புரு டோத்தமன்ற னூர்.

(இ-ள்.) சாய்ந்த - சயனித்த கோலங்கொண்ட,—திருவரங்கம் - திருவரங்கமும்,—தண்-குளிர்ச்சிபொருந்திய,—வேங்கடம்- திருவேங்கடமும்,—குடந்தை - திருக்குடந்தையும்,—ஏய்ந்த - பொருந்திய,—திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலை மலை

யும்:—பூ - அழகிய,—துவரை - துவாரகாபுரியும்,—வண்புருடோத்தமம் - திருவண்புருடோத்தமமும்,—வானவர்க்கும்-தேவாகளுக்கும்,—வானவன்னும் - தேவனுகிய,—ஒள் - ஒள்ளிய,—புருடோத்தமன்றன் - புருஷோத்தமனுடைய,—ஊர் - திவ்விய தேசங்களாகும்—எ-று

(க-து.) ஒள்ளிய புருடோத்தமன் ஊர் இவை யெனக் கூறியது—எ-ம். (௩௪)

## திருச்செம்பொன்செய்கோயில்.

ஊர் வேன் மடலை யொழிவேன் மடநாணம்
சேர்வேன் கரிய திருமாலைப் - பாரறிய
வம்பொன்செய் கோயி லரங்கனணி நாங்கூர்ச்
செம்பொன்செய் கோயிலினிற் சென்று.

(இ-ள்.) அம் - அழகிய,—பொன் - பொன்னாற்செய்த,—கோயில் - கோயிலையுடைய,—அரங்கன் - திருவரங்கநாதனது,—அணி - அழகிய,—நாங்கூர் - நாங்கூரின்கணுள்ள,—செம்பொனசெய்கோயில் - திருச்செம்பொன்செய்கோயி லெனனும் திவ்வியதேசத்தில்,—சென்று - போய்,—பார் - பூமியிலுள்ளவாகள்,—அறிய - தெரிந்துகொள்ளும்படி,—ஊர்வேன்மடலை - மடலின் மேலேறுவேன்,—மடம் - அறியாமையையும்,—நாணம் - வெட்கத்தையும்,—ஒழிவேன் - விட்டுவிடுவேன்,—கரிய - கார்நிறைத்தையுடைய,—திருமாலை - விஷ்ணுவை,—சேர்வேன் - அடைவேன—எ-று.

(க-து.) திருச்செம்பொன்செய்கோயிலில் சென்று மடலூர்தல் செய்வேன்—எ-ம். (௩௫)

## திருத்தெற்றியம்பலம்.

சென்றதுகாலந் திரைநரைமூப் பானவினி
என்றுகொல் சாவறியோ மென்னெஞ்சே - கன்றாற்

உருத்தெற்றி யம்பலத்தை யோர்விளவின் வீழ்த்தான்
திருத்தெற்றி யம்பலத்தைச் சேர்.

(இ-ள்) என் நெஞ்சே - என்மனமே — சென்றது காலம் - காலம் கழிந்தது, — திரை - தேகங்களர்ந்து சுருங்குதலும், — நரை - மயிர்வெளுத்தலும், — மூப்பு - வயோதிகமும், — ஆன - ஆயின, — இனி - இனிமேல், — சாவு - மரணம், — என்றுகொல் - என்றைக்கோ, — அறியோம் - தெளியோம், — (ஆதலால்) கன்றூல் - கன்றுக்குட்டியினால், — உருத்து - கோபித்து, — எற்றி - மோதி, — அம் - அழகிய, — பலத்தை - பழத்தை, — ஓர் விளவின் - ஓர் விளாமரத்திலின்றும், — வீழ்த்தான் - விழச்செய்தவனது, — திருத்தெற்றியம்பலத்தை - திருத்தெற்றியம்பல மென்னுந்திவ்வியதேசத்தை, — சேர் - சென்று அடைவாயாக-எ-று.

(க-ரு.) நெஞ்சே! நரை - திரை - மூப்புவந்தன, இனி சாக்காடு என்று வருமோ, ஆதலால் திருத்தெற்றியம்பலத்தைச் சேர்—எ-ம். (௩௩)

## திருமணிக்கூடம்.

சேராது முன்செய்த தீவினைபின் செய்வதுவும்
வாரா தினிநீ மடநெஞ்சே - நேராக்
குருமணிக்கூடத்தானைக் கொம்புபறித் தானைத்
திருமணிக் கூடத்தானைச் செப்பு.

(இ-ள்) மடம் - அறியாமையையுடைய, — நெஞ்சே - மனமே, — நீ முன் - நீ பூர்வத்தில், — செய்த - புரிந்த, — தீவினை - தீயவினையானது, — சேராது - அணுகாது, — பின் - இனிமேல், — செய்வதுவும் - செய்யுந்தீவினையும், — இனிவாராது - இனிவந்துசேராது, — (ஆதலால்) நேரா - எதிர்த்த, — குரு - நிறத்தையுடைய, — மணி - ரத்தினகசிதமாகிய, — கூடத்து - கூடத்

திற்கட்டிய,—ஆனை - குவலயாபீடமென்னும்யானையின்,—கொம்பு - மருப்பை,—பறித்தானை ஒடித்தவனை,—திருமணிக்கூடத்தானை - திருமணிக்கூடமென்னும் திவ்வியதேசத்தையுடையவனை,—செப்பு - துதிசெய்வாயாக—எ-று.

(க-து.) நெஞ்சே! திருமணிக்கூடத்தானைச் செப்பின் சஞ்சித பிராரத்த ஆகாமிய கன்மங்கள்நீங்கும்—எ-ம். (கஎ)

## திருக்காவளம்பாடி.

செப்பேன் மனிதருக்கென் செஞ்சொற் றமிழ்மாலை
கைப்பேன் பிறதெய்வங் காண்பாரை - எப்போதும்
காவளம்பா டித்திருமால் காற்று மரைதொழுது
நாவளம்பா டித்திரிவே னன்.

(இ-ள்) என் - என்னுடைய,—செஞ்சொல் - செவ்வியமொழிகளாலாகிய,—தமிழ்மாலை - தமிழ்மாலையை,—மனிதருக்கு - மானிடர்மேல் (நான்),—செப்பேன - சொல்லேன்,—பிறதெய்வம் - அந்நியதேவதாந்தரங்களை,—காண்பாரை - தரிசிக்கின்றவர்களை,—கைப்பேன் - வெறுப்பேன்,—எப்போதும் - எக்காலத்தும்,—காவளம்பாடி - திருக்காவளம்பாடி யென்னும் திவ்வியதேசத்திலெழுந்தருளிய,—திருமால் - விஷ்ணுவினுடைய,—கால்தாமரை - திருவடித்தாமரைகளை,—தொழுது - வணங்கி,—நா - நாவினால்,—வளம் - வளப்பமுற,—பாடித்திரிவேன - பாடிச்சஞ்சரிப்பேன்—எ-று.

(க-து.) திருக்காவளம்பாடிமாலைத் தொழுது நாவளமுறப் பாடித் திரிவேன்—எ-ம். (கஅ)

## திருவெள்ளக்குளம்.

காணடிமை செய்யவிடாய் நாளுனே செம்பெருமான்
தான டிமை கொள்ளவிடாய் தானுனன் - ஆனதற்பின்

வெள்ளக் குளத்தே விடாயிருவ ருந்தணிந்தோம்
உள்ளக் குளத்தேனை யொத்து.

(இ-ள்) நான் - யான்,—அடிமைசெய்ய - தொண்டுசெய்வதற்கு,—விடாய் நான் ஆனேன் - நான் தாகங்கொண்டவனாயினேன்,—எம்பெருமான் - எமது பெருமானானவர்,—தான் அடிமைகொள்ள,—தான் தொண்டுகொள்ள,—விடாய் தான் ஆனான் - தானுந்தாகங்கொண்டார்,—ஆனதன்பின் - இங்ஙனமிருவரும் விடாய்கொண்டதற்குப்பின்,—வெள்ளக்குளத்தே - திருவெள்ளக்குளமென்னுந் திவ்வியதேசத்தின்கண்,—இருவரும் - யாங்களிருவரும்,—உள்ளம் - மனதில்,—குளம் - வெல்லத்தையும்,—தேன் - தேனையும்,—ஒத்து - ஒப்பாய்,—விடாய் தணிந்தோம் - தாக நீங்கினோம்—எ-று.

(க-து) திருவெள்ளக்குள நாதனு நானு மாசையுற்று தாசனுமாண்டானு மாகினோம்—எ-ம். (௩௧)

## திருப்பார்த்தன்பள்ளி.

ஒத்தமரரேத்து மொளிவிசும்பும் பாற்கடலும்
இத்தலத்திற் காண்பரிய வென்னெஞ்சே - சித்துணர்ந்த
தீர்த்தன்பள் ளிக்கிருந்து செப்பவெளி நின்றானைப்
பார்த்தன் பள்ளிக்குட் பணி.

(இ-ள்) ஒத்து - ஒன்று சேர்ந்து,—அமரர் - தேவர்கள்,—ஏத்தும் - துதிக்கின்ற,—ஒளி - பிரகாசம்பொருந்திய,—விசும்பும் - பரமபதமும்,—பார்கடலும் - திருப்பாற்கடலும்,—இத்தலத்தில் - இப்பூமியின் கண்,—காண்பு அரிய - காணுதற்கரியன (ஆயினும்),—என் - எனது,—நெஞ்சே - மனமே,—சித்து - உண்மையை,—உணர்ந்த - அறிந்த,—தீர்த்தன் - பரிசுத்தனாகிய பிரகலாத ஆழ்வான்,—பள்ளிக்கு இருந்து - பள்ளிக்கூடத்திலிருந்து,—செப்ப - சொல்ல,—வெளிநின்றானை - பிரசன்னமானவ

வை,—பார்த்தன் பள்ளிக்குள் - திருப்பார்த்தன்பள்ளி யென்னும் திவ்வியதேசத்தில்,—பணி - வணங்குவாயாக—எ-று.

(க-து.) நெஞ்சே! திருப்பார்த்தன்பள்ளியில் பிரகலாத ஆழ்வானுக்குப் பிரசநநமானவனை வணங்கு—எ-ம். (௪0)

சோழநாடு - முற்றிற்று.

---

## பாண்டிநாட்டுத் திருப்பதிகள். ௧௮.

### திருமாலிருஞ்சோலைமலை.

பணிந்தேன் றிருமாலைப் பாமாலை தாளில்
அணிந்தே னருட்டஞ்ச மாகத் - துணிந்தேன்
திருமா லிருஞ்சோலை சேர்ந்தே னெனக்கு
வருமா லிருஞ்சோதி வான்.

(இ-ள்) திருமாலை - பெரியபிராட்டியை மார்பிலுடைய விஷ்ணுவை,—பணிந்தேன் - வணங்கினேன்,—பாமாலை - பாக்களாலாகியமாலையை,—தாளில்-திருவடிகளில்,—அணிந்தேன் - தரித்தேன்,—அருள் - அவனது கிருபையே,—தஞ்சம் என - பற்றுகோடென்று,—துணிந்தேன் - நிச்சயங்கொண்டேன்,—திருமாலிருஞ்சோலை - திருமாலிருஞ்சோலைமலையென்னும் திவ்வியதேசத்தை,—சேர்ந்தேன் - அடைந்தேன்,—(ஆதலால்) எனக்கு - என்றனுக்கு,—இரு - பெரிய,—சோதி - பிரகாசமுள்ள,—வான் - பரமபதமானது,—வரும் - சித்திக்கும்—எ-று.

(க-து.) திருமாலிருஞ்சோலைமலை சேர்ந்து பணிந்ததால் எனக்குச் சோதிவான்வரும்—எ-ம். (௪௧)

## திருக்கோட்டியூர்

வான்பார்க்கும் பைங்கூழ்போல் வாளா வுனதருளை
யான்பார்க்க நீபார்த் திரங்கினாய் - தேன்பார்ப்பின்
ஓசைத் திருக்கோட்டி யூரானே யின்னமுமென்
ஆசைத் திருக்கோட்டி யாள்.

(இ-ள்.) வான் - மழையை,—பார்க்கும் - எதிர்நோக்குகின்ற,—பைங்கூழ்போல் - பசியபயிரைப்போல்;—வாளா - செடாது,—உனது அருளை - உன்னுடைய கிருபையையே,—யான்பார்க்க - நான் எதிர்பார்க்க,—நீ - நீர்,—பார்த்து - கடாக்ஷித்து,—இரங்கினாய் - தயைகூர்ந்தீர்,—தேன்பார்ப்பின் - இளம் வண்டுகளினுடைய,—ஓசை - ஒலி மருவிய,—திருக்கோட்டியூரானே - திருக்கோட்டியூரென்னுந் திவ்வியதேசத்தெழுந்தருளியிருப்பவனே,—இன்னமும் - இனியாகிலும்,—என் - என்னுடைய,—ஆசை - இச்சையாகிய,—திருக்கு - குற்றத்தை.—ஓட்டி - நீக்கி,—ஆள் - அடிமைகொள்ளுவாயாக—எ-று.

(க-து.) திருக்கோட்டியூரானே! இனி என் குற்றத்தை நீக்கி ஆள்வாயாக—எ-ம். (௪௨)

## திருமெய்யம்.

ஆளாயுனக்கன்பா யாசையாய் நாணிலியாய்
வாளா மனைவியென்று வாழ்வேனைக் - கேளாய்
திருமெய்ய மாயா சிலகால் வளைத்து
வருமெய்ய மாயா மதன்.

(இ-ள்) உனக்கு - உந்தனுக்கு,—ஆளாய் - தாசபூதனாகி,—அன்பு ஆய் - பிரீதியுடையவனாகியும்,—ஆசையாய் - ஆர்வமுடையவனாகியும்,—நாணிலியாய் - வெட்கமில்லாதவனாகியும்,—வா

னா - வினைக,—மனைவியென்று - களத்திரமென்று,—வாழ்வேனை - வாழ்கின்ற என்னை,—திருமெய்யம் - திருமெய்ய மெனனுந் திவ்வியதேசத்தி லெழுந்தருளியிருக்கும்,—மாயா - மாயனே,—கேளாய் - கேட்பாயாக,—சிலை - வில்லை,—கால் வளைத்து - காலால் வளைத்து,—மாயா - கெடுதலில்லாத,—மதன் - மன்மதனானவன,—எய்ய - பாணப்பிரயோகஞ்செய்ய,—வரும் - வருகின்றான், (ஆதலால் என்னைக் காத்தருள்க)—எ-று.

(க-து.) என்னை மையலிற் சிக்கவொட்டாது காத்தருள்.எ-ம்.

## திருப்புல்லாணி.

மதயானைக் கோள்விடுத்து மாமுதலை கொன்ற
கதையா லிதயங் கரையு - முதலாய
புல்லாணி மாலே புறத்தோர் புகழிருப்பு
வல்லாணி யென்செவிக்கு மாறு.

(இ-ள்) மதம் - மும்மதங்களைப் பொழிகின்ற,—யானை - கஜேந்திரனென்னும் யானையினது,—கோள் - இடையூற்றை,—விடுத்து - நீக்கி,—மா - பெரிய,—முதலை - முதலையை,—கொன்ற - சம்மரித்த,—கதையால் - சரித்திரத்தினால்,—இதயம் - மனமானது.—கரையும் - உருகும்,—முதல்ஆய - தலைமையாகிய,—புல்லாணி - திருப்புல்லாணியென்னுந் திவ்வியதேசத்தி லெழுந்தருளிய,—மாலே - மஹாவிஷ்ணுவே,— புறத்தோர் - இதர தேவதைகளை,—புகழ் - சிறப்பித்துச்சொல்லுஞ்சொல்,—என் செவிக்கு - என் காதுகளுக்கு,—இருப்பு வல்லாணி - வலிய இருப்பாணியும்,—மாறு - விரோதமுமாகும்—எ-று.

(க-து.) திருப்புல்லாணிமாலே! நின் புகழையன்றி வேறொன்றையுங் கேளேன்—எ-ம். (௩௪)

## திருத்தண்காலூர்.

மாறுபட வாடையெனும் வன்காலிவந் தென்முலைமேல்
ஊறுபட வூர்ந்த வுலைவெல்லாம் - மாறத்
திருத்தண்கா லூரான் றிருத்தண் டுழாயின
மருத்தண்கா லூராதோ வாய்ந்து.

(இ-ள்) மாறுபட - வேற்றுமையுண்டாக,—வாடைஎனும் - வாடை யென்கின்ற,— வன் கால் - வலிய காற்றானது,— வந்து - வந்து,—என் முலைமேல் - என் தனங்களின் மீது,—ஊறுபட - தீமை விளைய,—ஊர்ந்த - பொருந்திய,— உலைவு எல்லாம் - கெடுதி எல்லாம்,—மாற - நீங்க,— திருத்தண்காலூரான் - திருத்தண்காலூ ரென்னுந் திவ்விய தேசத்தையுடையவனது,—திரு - அழகிய,— தண் - குளிர்ந்த,— துழாயின் - திருத்துழாய்மாலையின்,—மரு - வாசனைபொருந்திய,—தண் - குளிர்ந்த,—கால் - காற்றானது,—வாய்ந்து - பொருந்தி,—ஊராதோ - தவழ்ந்ராதோ—எ-று.

(க-து.) திருத்தண்காலூரான் திருத்துழாயின் தண்ணிய காற்று என் தனங்களின்மீது வீசின் முன் வாடைக்காற்று லுண்டாகிய துன்பம் நீங்கும்—எ-ம். (௪௫)

## திருமோகூர்.

வாயான் மலர்கோதி வாவிதொறு மேயுமோ
மேயாம லப்பால் விரையுமோ - மாயன்
திருமோகூர் வாயின்று சேருமோ நாளை
வருமோகூர் வாயன்னம் வாழ்ந்து.

(இ-ள்) கூர் - கூர்மையான,—வாய் - வாயையுடைய,—அன்னம் - அன்னப்பக்ஷியானது,—வாழ்ந்து - வாழ்ந்திருந்து,—

வாயால் - வாயினால்,—மலர் - புஷ்பங்களை,—கோதி - கொந்தியருத்து,—வாவிதொறும் - தடாகங்கள்தோறும்,—ஏயுமோ - பொருந்துமோ,—மேயாமல் - இரைதேடாமல்,—அப்பால் - அப்புறம்,—விரையுமோ - வேகமாகச்செல்லுமோ,—மாயன் - திருமாலினுடைய,—திருமோகூர்வாய் - திருமோகூரென்னும் திவ்வியதேசத்தில்,—இன்று - இன்றைத்தினம்,— சேருமோ - அடையுமோ,—நாளை - நாளையதினம்,—வருமோ - வருமோ அறிகிலேன்)—எ-று.

(க-து.) தூதனுப்பிய அன்னத்தின் தன்மை கூறியது—எ-ம்.

திருக்கூடல்.

வாழ்விப்பா னெண்ணமோ வல்வினையி னின்னமென்னை
ஆழ்விப்பா னெண்ணமோ வஃதறியேன் - தாழ்விலாப்
பாடலழ கார்புதுவைப் பட்டர்பிரான் கொண்டாடும்
கூடலழ காநின் குறிப்பு.

(இ-ள்) தாழ்வு இலா - மேன்மையாகிய,—பாடல் - பாசுரங்களின்,—அழகு - அழகானது,—ஆர் - பொருந்திய,—புதுவை - புதுவையி லெழுந்தருளிய.—பட்டர்பிரான் - பெரியாழ்வார்.—கொண்டாடும் - புகழ்ந்த,—கூடல் - திருக்கூடலென்னுந் திவ்வியதேசத்தி லெழுந்தருளிய,—அழகா - அழகனென்னுந் திருநாமத்தையுடையவனே,—நின் - உனது,—குறிப்பு - திருவுளப்பாங்கு,— வாழ்விப்பான் - வாழும்படி,— எண்ணமோ - கருத்தோ,—வல் - கொடிய,—வினையில் - வினையில்,—இன்னம் - இன்னும்,—என்னை - அடியேனை,—ஆழ்விப்பான் - அழுந்தும்படிசெய்ய,—எண்ணமோ - கருத்தோ,—அஃது அறியேன் - அதனைத தெரியகில்லேன்—எ-று.

(க-து.) திருக்கூடலழகா! நின் திருவுளப்பாங் கின்னதென அறியேன்—எ-ம். (௩௭)

## ஸ்ரீவில்லிபுத்தூர்.

குறித்தொருவர் கொண்டாடுங் கொள்கைத்தோ கோதை
பிறந்தவூர் விண்டுசித்தர் பேரூர் - பிறப்பிலியூர்
தாழ்வில்லி புத்தூரென் றைவர்க்குத் தாலிரந்தான்
வாழ்வில்லி புத்தூர் வளம்.

(இ-ள்) கோதை - சூடிக்கொடுத்த நாச்சியார்,—பிறந்த ஊர் - விளங்கிய ஊராகும்,—விண்டு சித்தர் - பெரியாழ்வார்,—பேரூ ஊரா - விளங்கிய ஊராகும்,—பிறப்பு இலி - ஜனனமில்லாத எம்பெருமானது,—ஊர் - ஊராகும்,—தாழ்வு - இழிவையுடைய,—புத்தூர் - புதிய (ஐந்து) ஊராகிலும்,—இல் - (ஐந்து) வீடாகிலும்,— ஈ என்று - கொடுவென்று,—ஐவர்க்கு - பஞ்ச பாண்டவர்களுக்காக,—தான் - தானே,—இரந்தான் - யாசித்தவராகிய விஷ்ணுவானவர்,—வாழ் - நிவாசஞ் செய்கின்ற—வில்லிபுத்தூர் - ஸ்ரீ வில்லிபுத்தூரென்னும் திவ்யதேசத்தின்,—வளம் - வளத்தை,—குறித்து - இத்தன்மைத்தென்றுமதித்து,—ஒருவர் - ஒருவர்,—கொண்டாடும் - புகழ்கின்ற,—கொள்கைத்தோ - தன்மையையுடையதோ—எ-று. ஈ-இ எனக் கூறுகின்றது.

(க-து.) ஸ்ரீ வில்லிபுத்தூரின் சிறப்பித்தன்மைத்தென ஒருவராலுஞ் சொல்லி முடியாது—எ-ம். (௬அ)

## திருக்குருகூர்.

வளந்தழைக்க வுண்டாலென் வாசமணந் தாலென்
தெளிந்தகலை கற்றாலென் சீசீ - குளிர்ந்தபொழில்
தண்குருகூர் வாவிச் சடகோப னூரெங்கள்
வண்குருகூ ரென்னுத வாய்.

(இ-ள்) குளிர்ந்த - குளிர்ச்சிபொருந்திய,—பொழில் - சோலைசூழ்ந்த,—குருகு ஊர் - நாரைகள் சஞ்சரிக்கின்ற,—தண் -

குளிர்ந்த,—வாவி - தடாகங்களுள்ள,—சடகோபன் - சடகோ பாழ்வாரது,—ஊர் - நாடாகிய,—வண் - வளப்பம் பொருந்தி ய,—குருகூர் - திருக்குருகூர்,—என்னாத - என்று சொல்லா த,—வாய் - வாயானது,—சீசீ - சிச்சீ,—வளம் தழைக்க - வ ண்மை பெருக.—உண்டால் - புசித்ததனால்,—என் - என்னபிர யோசனம்,—வாசம் - பரிமளம்,—மணத்தால் என் - கமழ்வத னால் தான் என்ன,—தெளிந்த - தெளிவாகிய,—கலை - சாஸ் திரத்தை,—கற்றால் என் - பயின்றதனால்தான் என்ன பிரயோ சனம்—எ-று.

(க-து.) திருக்குருகூர் என்று சொல்லாத வாய் பிரயோசன மற்றது—எ-ம். (௨௧)

## திருத்தொலைவில்லிமங்கலம்.

வாயு மனைவியர்பூ மங்கையர்க ளெம்பிராற்
காயுதங்க ளாழிமுதல் லைம்படைகள் - தூய
தொலைவில்லி மங்கலமூர் தோள்புருவமேனி
மலைவில் லிமங்கலந்த வான.

(இ-ள்) எம்பிராற்கு - எமது சுவாமிக்கு,—வாயும் - பொரு ந்திய,—மனைவியர் - தேவியராவார்,—பூமங்கையர்கள் - பூமி தேவியும் இலக்ஷ்மிதேவியுமாம்,—ஆயுதங்கள் - படைக்கலங் களாவன,—ஆழிமுதல் - சக்கரமுதலாகிய,—ஐம்படைகள் - ப ஞ்சாயுதங்களாம்,—தூய - பரிசுத்தமாகிய,—தொலைவில்லிமங் கலம்,—திருத்தொலைவில்லிமங்கலமென்னும்திவ்விய தேசமான து,—ஊர் - நாடாம்,—தோள் - புயமும்,—புருவம் - புருவமு ம்,—மேனி - நிறமும்,—(முறையே) மலை - பர்வதமும்,—வில்- தனுசும்,—இமம் கலந்த வான் - நிருண்ட மேசமும் (ஒக்கும்)—

எ-று. ஐம்படைகளாவன:—சங்கு, சக்கரம், கோதண்டம், வாள், தண்டு.

(க-து.) நம்பெருமானுடைய தேவியர் ஆயுதம் நாடு நிற முதலியவை யிவை—எ-ம். (ருo)

## ஸ்ரீவரமங்கை.

வானோர் முதலா மரமளவா வெப்பிறப்பும்
ஆனேற் கவதியிட லாகாதோ - தேனேயும்
பூவர மங்கை புவிமங்கை நாயகனே
சீவர மங்கையரசே.

(இ-ள்) தேன் - மது,—ஏயும் - பொருந்திய,— பூ - தாமரைக்கமலத்தில் வசிக்கும்,—வர மங்கை - பெரிய பிராட்டியாருக்கும்,—புவிமங்கை - பூமிதேவிக்கும்,—நாயகனே - தலைவனே,—சீவரமங்கை - ஸ்ரீ வரமங்கையென்னுந் திவ்வியதேசத்திலெழுந்தருளிய,—அரசே - இறைவனே,—வானோர் முதல் ஆ - தேவர்கள் முதலாக,—மரம்அளவு ஆ - தாவரம்வரையுமுள்ள,—எபிறப்பும் - எவ்வகைப் பிறவியினும்,—ஆனேற்கு - ஜனித்துவந்த எனக்கு,—அவதி இடல் ஆகாதோ - (இனியேனும்) முடிவு ஏற்படுத்தக்கூடாதோ—எ-று. முதலா அளவா என்பவற்றினீற்றுக்ககரம் தொகுத்தல்.

(க-து.) ஸ்ரீவரமங்கையரசனே! இனி ஜனனம் ஒழித்தல் வேண்டும்—எ-ம். (ருக)

## திருப்பேரை.

அரசாகி வையமுழு தாண்டாலு மின்பக்
கரைசார மாட்டார்கள் கண்டீர் - முரைசாருந்
தென்திருப்பே ரைப்பதியான் சீர்கேட்டு நாவிலவன்
றன்திருப்பே ரைப்பதியா தார்.

(இ-ள்) முரசு அதிரும் - வாத்தியங்கள் கோஷிக்கின்ற,— தென் - தெற்கின்கணுள்ள,—திருப்பேரைப்பதியான் - திருப்பேரையென்னும் திவ்வியதேசத்தையுடைய விஷ்ணுவினது,—சீர் - சிறப்பை,—கேட்டு - சிரவணஞ்செய்து,—அவன்தன் - அவனுடைய,—திருப்பேரை - திவ்விய திருநாமங்களை,—பதியாதார் - தரிக்கச்செய்யாதவர்கள்,—அரசு ஆகி - இராஜாவாகி,— வையம் முழுதும் - பூமி முழுவதும்,—ஆண்டாலும் - அரசாட்சிசெய்தாலும்,—இன்பம் - சுகத்தின்,—கரை - கரையை,—சாரமாட்டார்கள் - சேரமாட்டார்கள்—எ-று. கண்டீர்-அசை.

(க-து.) திருப்பேரைப்பதியான் திருநாமங்களை மனதிற் றரிக்கச் செய்யாதவர்கள் இன்பக்கரை சேரார்—எ-ம். (௫௨)

## ஸ்ரீவைகுந்தம்.

தாருடுத்துத் தூசு தலைக்கணியும் பேதையிவ
ணேருடுத்த சிந்தை நிலையறியேன் - போருடுத்த
பாவைகுந்தம் பண்டொசித்தான் பச்சைத் துழாய்நாடுஞ்
சீவைகுந்தம் பாடுந் தெளிந்து.

(இ-ள்) தார் - மாலையை,—உடுத்து - அரையிலணிந்து,—தூசு - வஸ்திரத்தை,— தலைக்கு - சிரசில்,—அணியும் - தரித்துக்கொள்ளும்,—பேதை - அறிவில்லாதவளாகிய,—இவள் - இப்பெண்,—நேர் உடுத்த - நேராகக்கொண்ட,—சிந்தை நிலை - மனதின் தன்மையை,—அறியேன் - தெளியமாட்டேன்,—(ஆயினும்) போர் உடுத்த - யுத்தத்திற்கு நெருங்கிய,— பாவை - பெண்ணாகிய தாடகையின்,—குந்தம் - சூலத்தை,—பண்டு - பூர்வத்தில்,—ஒசித்தான் - ஒடித்தவனுடைய,— பச்சை - பசுமையாகிய,—துழாய் - திருத்துழாய் மாலையை,— நாடும் - விரும்பு

வள்,—(ஆகலால்) தெளிந்து - இவ்வுளவைத்தெரிந்து,—ஸ்ரீவை குந்தம் - ஸ்ரீவைகுந்தமென்னும் திவ்விய தேசத்தை,—பாடும் - பாடுங்கள்—எ-று.

(க-து) நமது பெண்ணுக்கு தாடகை சம்மாரராது திருத்துழாய் மாலையின்மீது ஆசை ஆகலால் அவரது ஸ்ரீவைகுந்தம் பாடுங்கள்—எ-ம். (ருங)

## திருப்புளிங்குடி.

தெளியும் பசும்பொற் சிறைக்காற்று வீச
விளியுந் துயர்போய் விடுமே - வெளியேற்
கருளப் புளிங்குடிவா ழச்சுதனை கொண்டு
கருளப்பு ளிங்குவந்தக் கால்.

(இ-ள்) எளியேற்கு - ஏழைபனுகிய எனக்கு,— அருள - கிருபை செய்ய,— புளிங்குடிவாழ் - திருப்புளிங்குடி யென்னும் திவ்வியதேசத்தி லெழுந்தருளியிருக்கும்,—அச்சுதனை - விஷ்ணுவை,—கொண்டு - எடுத்துக்கொண்டு,—கருளப்புள் - கருடப்பக்ஷியானது,—இங்கு வந்தக்கால் - இங்கு வந்தால்,—தெளியும் - தெளிந்த,—பசும் - பசிய,— பொன் - அழகிய,—சிறை - அகன் இறகினது,—காற்று - காற்றானது,—வீச - வீச,—விளியும் - இறக்கும்,—துயர் - துன்பமானது,—போய்விடும் - நீங்கும்—எ-று.

(க-து) நம் பெருமானை எடுத்துக்கொண்டு வரும் கருடனது சிறகுக் காற்றுபட்டால் எனது காமநோய் தீரும்—எ-ம்.

## திருவரகுணமங்கை.

காலரு நோயுங் கருகாத வண்ணமீர்
வேலன் வெறியை விலக்குமின்கள் - மாலாம்

வரகுண மங்கையன்றாள் வண்டுழாய் மேலா
தரகுண மங்கை தனக்கு.

(இ-ள்) மங்கை தனக்கு - நமது பெண்ணுக்கு,—மாலாம் - விஷ்ணுவாகிய,— வரகுணமங்கையன் - திருவரகுணமங்கை யென்னுந் திவ்வியதேசத்தி லெழுந்தருளியவனது,—தாள் - திருவடிகளிற் (சாத்திய),—வண்டு ழாய் மேல் - வளவிய திருத்துழாய்களின்மீது,—ஆதரகுணம் - ஆசையாகிய குணமுண்டு (ஆகலால்),—காலமும் - பருவத்தையும்,—நோயும் - வியாதியையும்,—கருதாத - நினையாத,—அன்னை மீர் - தாய்மார்களே,—வேலன் - வெறியாட்டாளனது,— வெறியை - ஆவேசத்தை,—விலக்குமின்கள் - நீக்குங்கள்—எ-று. ஆதரகுணமங்கை எ-ச. - ஆசையாகிய குணத்தையுடைய பெண்ணுக்கு என வுரைப்பினு மமையும்.

(க-து.) அன்னைமீர்! நமது பெண்ணுக்குப் பெருமான் திருத்துழாய்மேல் ஆசை யாதலின் வேலன் வெறியாடலை விலக்குங்கள்—எ-ம். (ருரு)

## திருக்குளந்தை.

தனக்குடலம் வேறன் றன்மை யுணரான்
மனக்கவலை தீர்ந் துய்ய மாட்டா - னினைக்கிற
திருக்குளந்தை யாருரைத்த சீர்க்கீதை பாடுந்
தருக்குளந்தை யாமலிருந் தால்.

(இ-ள்) நினைக்கில் - ஆலோசிக்குமிடத்தில்,—திருக்குளந்தையார் - திருக்குளந்தையென்னுந் திவ்வியதேசத்தையுடையவர்,—உரைத்த - சொல்லிய,—சீர்கீதை - சிறந்தபகவத்கீதைய,—பாடும் - பாடுகின்ற,—தருக்கு - சந்தோஷமானது,—உளம் - ஒருவன் மனதில்,—தையாமலிருந்தால் - பதியாமலிருந்தால்,—

தனக்கு - தனக்கு,—உடலம் - தேகமானது,—வேறு ஆன த ன்மை,—பிரத்தியேகமான குணங்களை,—உணரான் - அறியா ன்,—மனம் - நெஞ்சத்திலுள்ள,—கவலை - கிலேசமானது—தீர் ந்து - நீங்கி,—உய்யமாட்டான் உச்சீவிக்கவுமாட்டான்-எ-று.

(க-து.) பகவற்கீதையை வாசித்துணர்ந்தவனே ஆன்மக்கி யானமுற்று முத்தியையடைவன—எ-ம். (௩௯)

## திருக்குறுங்குடி.

தாலத் திழிகுலத்துச் சண்டாள மானாலு
மேலத் தவரதனின் மேன்மைத்தே - கோலக்
குறுங்குடிவாழ் மாயன் குரைகழற்கா ளாகப்
பெறுங்குடியாய் வாழ்வார் பிறப்பு.

(இ-ள்) கோலம் - அழகிய,—குறுங்குடி வாழ் - திருக்குறுங் குடியென்னுந் திவ்வியதேசத்தில் எழுந்தருளிய,—மாயன் - வி ஷ்ணுவினது,—குரை - சத்திக்கின்ற,—கழற்கு - சிலம்பணிந்த திருவடிகளுக்கு,—ஆள் ஆகப்பெறும் - அடிமையாகப்பெறுகின் ற,—குடியாய் - வாழ்க்கையினராக,—வாழ்வார் - வாழ்கின்ற வர்களுடைய,—பிறப்பு - ஜனனமானது,—தாலத்து - பூமியின் கண்,—இழிகுலத்து - கீழ்ச்சாதியிற் பிறந்த,— சண்டாளம் ஆ னாலும் - புலைத்தன்மையினதாயினும்,— மேல - மேன்மையா கிய,—தவரதனின் - தவசிகளைப்பார்க்கிலும்,—மேன்மைத்து - மேன்மையுடையதாகும்—எ-று.

(க-து.) மாயன் கழற்காளானவர் புலையரேனும் தவசிகளினு மேலோராக மதிக்கப்படுவர்—எ-ம். (௪௦)

## திருக்கோளூர்.

பிறப்பற்று மூப்புப் பிணியற்று நாளு
மிறப்பற்று வாழ விருப்பீர் - புறப்பற்று

தள்ளுங்கோ ளூரரவிற் றாமோ தரன்பள்ளி
கொள்ளுங்கோ ளூர்மருவுங் கோள்.

(இ-ள்) பிறப்பு அற்று - ஜனனம்நீங்கி,—மூப்பு - விருத்தா ப்பியமும்,—பிணி - வியாதியும்,—அறு - நீங்கி,—நாளும் - எப்போதும்,—இறப்பு அற்று - மரணமும் நீங்கி,—வாழ இருப்பீர் - வாழும்படியிருக்கின்றவர்களே,— புறப்பற்று - வெளிப்பற்றுகளை,—தள்ளுங்கோள் - நீக்குங்கள்,—ஊர்-நகருகின்ற,—அரவில் - ஆதிசேடன்மீது,—தாமோதரன் - விஷ்ணுவானவர்,—பள்ளிகொள்ளும் - சயனித்திராநின்ற,— கோளூர் - திருக்கோளூரென்னுந் திவ்வியதேசத்தை,— மருவுங்கோள் - சேருங்கள்—எ-று.

(க-து.) பிறப்பு, மூப்பு, பிணி, மரண மற்றுவாழ விருப்பீர் திருக்கோளூரைச் சேருங்கள்—எ-ம். (ரு௩)

பாண்டிநாடு முற்றிற்று.

---

## மலைநாட்டுத் திருப்பதிகள். கங.

### திருவனந்தபுரம்.

கோளார் பொறியைந்துங் குன்றியுடலம் பழுத்து
மாளாமுன் னெஞ்சே வணங்குதியால் - கேளார்
சினந்தபுரஞ் சுட்டான்றிசை முகத்தான் போற்று
மனந்தபுரஞ் சேர்ந்தா னடி.

(இ-ள்) நெஞ்சே - மனமே,—கேளார் - பகைவராது,—சினந்த - கோபித்த,—புரம்சுட்டான் - திரிபுரத்தைத் தகித்த ருத்திரனும்,—திசை முகத்தான் - பிரமனும்,—போற்றும் - துதிக்

கும்,—அனந்தபுரம் - திருவனந்தபுரமென்னுந் திவ்வியதேசத்தை,—சேர்ந்தான - சேர்ந்த சுவாமியின்,—அடி - சரணங்களை,—கோள் ஆர் - திமைபொருந்திய,—பொறி ஐந்தும் - ஐம்பொறிகளும்,—குன்றி - அழிந்து,—உடலம் - தேகமானது,—பழுத்து - தளர்ச்சியடைந்து,—மாளாமுன் - இறக்குமுன்னம்,—வணங்குதி - நமஸ்கரிப்பாயாக—எ-று. ஆல்-அசை.

(க-து.) நெஞ்சே! திருவனந்தபுரஞ் சேர்ந்தானடிகளை உடலமாளாமுன் வணங்கு—எ-ம். (நிக)

## திருவண்பரிசாரம்.

அடியுங் குளிர்ந்தா ளறிவுங் குலைந்தாண்
முடிகின்றா ளூச்சடங்கு முன்னே - கடிதோடிப்
பெண்பரிசா ரங்குப் பிறப்பித்து மீளுவார்
வண்பரிசா ரங்கிடந்த மாற்கு.

(இ-ள்) அடியும் குளிர்ந்தாள் - பாதமுங்குளிர்ந்தாள்,—அறிவும குலைந்தாள் - உணர்வும் அழிந்தாள்,—முடிகின்றாள் - இறக்கின்றவளுடைய,—மூச்சு அடங்கு முன்னே - சுவாசம் ஒடுங்குவதற்கு முன்னம்,—கடிது ஓடி - தீவிரமாகச்சென்று,—வண்பரிசாரம் - திருவண்பரிசாரமென்னுந திவ்வியதேசத்தில்,—கிடந்த - சயனித்த கோலங்கொண்ட,—மாற்கு - மஹாவிஷ்ணுவுக்கு,—பெண்பரிசு - பெண்ணினது தன்மையை,—அங்கு - அவ்விடத்து,—பிறப்பித்து - விளங்கும்படிசொல்லி,—மீளுவார் - திரும்பவல்லவர்,—ஆர - யாவர்—எ-று.

(க-து) நமது பெண்ணிறக்குமுன் திருவண்பரிசாரத் திருமாலுக்கு விளங்க வுரைத்துத் திரும்ப வல்லவ ரியாவர்—எ-ம்.

## திருக்காட்கரை.

மார்க்கமுந் தாந்தாம் வழிபடுந் தெய்வமு
மேற்க வுரைப்பார்சொ லெண்ணாதே - தோற்குரம்பை

காட்கரையா முன்னமே நன்னெஞ்சே நாரணனுங்
காட்கரையாற் காளாகாய் காண்.

(இ-ள்) நல் நெஞ்சே - நல்ல மனமே,—மார்க்கமும் - அவரவர் சமயத்தையும்,—தாம்தாம் - அவ்வவர்,—வழிபடும் - வணங்கும்,—தெய்வமும் - கடவுளையும்,—ஏற்க - பொருந்த,—உரைப்பார் - யசனிக்கின்றவர்களுடைய,—சொல் - வார்த்தையை,—என்னுதே - மதியாதே,—சோல் குரம்பை - சருமமூடிய வுடலின்,—நாள் - ஆயுர் நாட்கள்,—கரையாமுன்னமே - கழிவதற்குமுன்னமே,—நாரணன் ஆம் - ஸ்ரீமந்நாராயணனாகிய,— காட்கரையாற்கு - திருக்காட்கரை யென்னுந் திவ்விய தேசத்தெழுந்தருளியவருக்கு,—ஆள் ஆகாய் - அடிமையாகக் கடவாய்—எ-று.

(க-து) நெஞ்சே! ஆயுர் நாட்கள் கழியுமுன்னம் திருக்காட்கரையானுக்கு ஆளாகுவாய்—எ-ம். (சுக)

திருமூழிக்களம்.

காண்கின்ற வைம்பூதங் கட்குமிரு சுடர்க்குஞ்
சேண்கலந்த விந்திரர்க்குந் தேவர்க்கு - மாண்சரிய
பாழிக் களத்தார்க்கும் பங்கயத்து நான்முகர்க்கு
மூழிக் களத்தான் முதல்.

(இ-ள்) காண்கின்ற - பார்க்கின்ற,—ஐம்பூதங்கட்கும் - பஞ்சபூதங்களுக்கும்,—இருசுடர்க்கும் - சூரிய சந்திரர்களாகிய இருவருக்கும்,—சேண் கலந்த,—தேவலோகத்திலிருக்கும்,—இந்திரர்க்கும் - தேவேந்திரனுக்கும்,—தேவர்க்கும் - கடவுளர்க்கும்,—மாண் - மாட்சிமைபொருந்திய,—சரிய - கருத்த,—பாழி - சிறந்த,—களத்தார்க்கும் - கண்டத்தையுடைய ருத்திரனுக்கும்,—பங்கயத்து - தாமரையில் வசிக்கும்,—நான்முகர்க்கும் - பிரமனு

க்கும்,— மூழிக்களத்தான் - திருமூழிக்களத்திலெழுந்தருளிய ஸ்ரீ அப்பதியே,—முதல் - முதன்மையானவன்—எ-று.

(க-து.) திருமூழிக்களத்தானே யாவர்க்கும் முதற் றெய்வம்—எ-ம். (௪௨)

திருப்புலியூர்.

முதல் வண்ணமாமே முலைவண்ண முன்னே
விதிவண்ண நீங்கி விடுமே - சதுரத்
திருப்புலியூர் நின்றான் றிருத்தண் டுழாயின்
மருப்புலியூர் தென்றல் வரின்.

(இ-ள்) சதுரம் - பெருமை பொருந்திய,—திருப்புலியூர் - திருப்புலியூரென்னுந் திவ்விய தேசத்தில்,—நின்றான் - நின்ற திருக்கோலங் கொண்டவனுடைய,—திரு - சிறந்த,—தண்டுழாயின - குளிர்ந்த துழாய் மாலையினது,— மரு - வாசனையை,—புலி=புல்லி - பொருந்தி,—ஊர் - தவழ்கின்ற,—தென்றல் - தென்றற் காற்றானது,—வரின் - வந்தால்,—முலைவண்ணம் - (நமது பெண்ணுக்கு) தனத்தின் நிறமும்,—முதல் வண்ணம் - முன்னிருந்த நிறம்,— ஆம் - வரும்,—முன்னே விதி வண்ணம - பூர்வ விதிவசமும்,—நீங்கிவிடும் - நீங்கும்—எ-று.

(க-து.) திருப்புலியூரானுடைய துழாய்மணம் படிந்த தென்றல் வீசின் நம்பெண்ணுக்கு முலையின் நிறம் முன்னிறமாம் அவள் விதிவசமும் ஒழியும்—எ-ம். (௪௩)

திருச்செங்குன்றூர்.

வரவேண்டுங் கண்டாய் மதிகலங்கி விக்குள்
பொரவே யுயிர்மாயும் போழ்து - பரமேட்டி
செங்குன்றூர் மாலேகிரைப் பரவைமேற் கனகப்
பைங்குன்றூர் கார்போற் பறந்து.

(இ-ள்) பரமேட்டி - மிக்கதயாளுவே!,—செங்குன்றூர்மாலே - திருச்செங்குன்றூரி லெழுந்தருளிய விஷ்ணுவே,—மதி

- புக்தியானது,—கலங்கி - மயங்கி,—விக்குள் - விக்கலானது,—பொர - போர்செய்ய (வருத்த),—உயிர் - பிராணனானது,—மாயும்போழ்து - நசிக்கும்போது,—சிறை - இறகுகளையுடைய,—பறவைமேல் - கருடன் மீது,—கனகமலைபைம் குன்று - பசிய பொன் மலையின்மேல்,—ஊரா - தவழ்கின்ற,—காரபோல் - மேகம்போல,—பறந்து - விரைந்து,—வரவேண்டும் - தரிசனந்தரவரவேண்டும்—எ-று. கண்டாய் - அசை.

(க-து.) திருச்செங்குன்றூர் மாலே ! உயிர்மாயும்போது கருடன் மீது விரைந்து வரவேண்டும்—எ-ம். (சச)

## திருநாவாய்.

பறந்து திரிதரினும் பாவியே னுள்ள
மறந்தும் பிறிதறிய மாட்டா - சிறந்த
திருநாவாய் வாழ்கின்ற தேவனையல் லாலெ
னொருநாவாய் வாழ்த்தா துகந்து.

(இ-ள் பறந்து - விரைவாகச் சென்று,—திரிதரினும - திரிந்தாலும்,—பாவியேன் - தீவினையினேனாகிய எனது,—உள்ளம் - மனமானது,—மறந்தும் - பொசசாந்தும்,—பிறிது - வேறொன்றையும்,—அறியமாட்டா - தெரிந்து கொள்ளாது,—சிறந்த - மேன்மைதங்கிய,—திருநாவாய் வாழ்கின்ற - திருநாவாயெனனும் திவ்விய தேசத்தி லெழுந்தருளி யிருக்கின்ற,—தேவனை அல்லால் - திருமாலையல்லாமல்,—என - எனது,—ஒரு நாவாய் - ஒன்றாகிய நாவோடுகூடிய வாயானது,—உகந்து - விரும்பி,—வாழ்த்தாது - துதியாது—எ-று.

(க-து.) எனது வாய் திருநாவாய்த் தேவனையல்லாது பிறிதொன்றையும் துதியாது—எ-ம். (சரு)

திருவல்லவாழ்.

உகந்தார்க்கென் ஞான்று முளனா யுகவா
திகந்தார்க் கென்ஞான்று மிலனாய்த் - திகழ்ந்திட்
டருவல்ல வாழுருவமல்ல வெனநின்றான
றிருவல்ல வாழுறையுந் தே.

(இ-ள்) திருவல்லவாழ உறையும் - திருவல்லவாழ் என்னுந் திவ்யதேசத்தெழுந்தருளிய,—தே - சுவாமியானவர்,—உகந்தார்க்கு -(தன்னை) விரும்பினவர்களுக்கு,—என் ஞான்றும் - எக்காலத்தும்,—உளன ஆய் - உள்ளவனாயும்,—உகவாது - விசுவாசியாது,—இகந்தார்க்கு - பழித்தவர்களுக்கு,—என் ஞான்றும் - எக்காலத்தும்,—இலன் ஆய் - இல்லாதவனாகியும்,—திகழ்ந்திட்டு - விளங்கி,—அரு அல்ல - அருவமுமல்ல,—வாழ் - வாழ்கின்ற,—உருவம் அல்ல - உருவமும் அல்ல,— என - என்றுசொல்லும் படி,— நின்றான் - நின்றனன்—எ-று.

(க-து.) திருவல்லவாழிலெழுந்தருளியகடவுள் அவரவர்க்குதக்கபடிநிற்பன.—எ-ம். (௬௬)

திருவண்வண்டூர்.

தேவு முலகு முயிருந் திரிந்துநிற்கும்
யாவும் படைத்த விறைகண்டீர் - பூவிற்
றிருவண்வண் டூருறையுந் தேவாதி தேவன்
மருவண்வண் டூர்துளப மால்.

(இ-ள்) பூவில் - பூமியின் கண்,—திருவண்வண்டூர் - திருவண்வண்டூ ரென்னுந் திவ்யதேசத்தில்,— உறையும் - எழுந்தருளியிருக்கும்,—தேவாதி தேவன் - தேவர்களுக் கெல்லா முதன்மையாகிய கடவுளும்,—மரு - வாசனை தங்கிய,—வண் - வளப்பம் பொருந்திய,—வண்டு ஊர் - வண்டுகளூலவும்,—துளவம்-

துளப மாலையை யணிந்த,—மால் - விஷ்ணுவே,—தேவும் - தேவர்களையும்,—உலகும் - உலகங்களையும்,—திரிந்து நிற்கும் - சஞ்சரித்து நிற்கும்,—யாவும் - எல்லாவற்றையும்,—படைத்த - சிருஷ்டித்த,—இறை - கடவுளாகும்—எ-று. கண்டீர் - அசை. க்ஷேத்திரத்தின் பெயர் வண்டூர் எனக்கொண்டு - பூவில் - திரு அண் வண்டூர்—எ-ரு. பூமியின்கண் இலக்ஷுமி விலாசம் பொருந்திய திருவண்டூர் என வுரைப்பாரு முளர்.

(க-து.) திருவண்வண்டூர் மாலே யாவும் படைத்தவர்-எ-ம்.

## திருவாட்டாறு.

மாலைமுடி நீத்து மலர்ப்பொன் னடிநோவப்
பாலைவன நீபுகுந்தாய் பண்டென்று - சாலவுநான்
கேட்டாற் றுயிலேன்காண் கேசவனே பாம்பணைமேல்
வாட்டாற்றுக் கண்டுயில்கொள் வாய்.

(இ-ள்) கேசவனே - கேசவனென்னுந் திருநாமத்தை வாய்ந்தவனே,—பாம்பு அணைமேல் - சேஷ சயனத்தின் மீது,—வாட்டாற்று - திருவாட்டாறு என்னுந் திவ்விய தேசத்தில்,—கண் துயில் கொள்வாய் - திருக்கண்வளர்பவனே,—மாலை - பூமாலையையும்,—முடி - கிரீடத்தையும்,—நீத்து - நீக்கிவிட்டு,—மலர் பொன் அடி - அழகிய தாமரைமலர்போன்ற பாதங்கள்,—நோவ - வருந்த,—பாலை வனம் - பாலைவனத்தில்,—பண்டு நீ புகுந்தாய் - முன்னம் நீ சென்றனை,—என்று - என்றுசொல்ல,—சாலவும் - மிகவும்,—நான் - யான்,—கேட்டால் - கேள்விப்பட்டால்,—துயிலேன் - நித்திரை செய்யேன்—எ-று.
காண் - அசை.

(க-து,) திருவாட்டாற்றுத் திருக்கண்வளர்பவனே! நீ முன் வனம்புகுந்தமையைக்கேள்விப்பட்டால்துயிலேன்—எ-ம்.(கூ அ)

## திருவிற்றுவக்கோடு.

வாய்த்த கருமமினி மற்றில்லை நெஞ்சமே
தோய்த்த தயிர்வெண்ணெய் தொட்டுண்ட - கூத்தன்
றிருவிற் றுவக்கோடு சேர்ந்தாற் பிறவி
கருவிற் றுவக்கோடுங் காண்.

(இ-ள்) நெஞ்சமே - மனமே!,—வாய்த்த - செய்யக்கிடைத்த,—கருமம் - தொழில்,—இனி மற்று இல்லை - இனி வேறொன்றுமில்லை,—தோய்த்த தயிர - உறைந்த ததியையும்,—வெண்ணெய் - நவநீதத்தையும்,—தொட்டு - கையால் எடுத்து,—உண்ட - புசித்த,—கூத்தன் - திருவிளையாட்டை யுடையவனது,—திருவிற்றுவக்கோடு - திருவிற்றுவக்கோடு என்னுந் திவ்விய தேசத்தை,—சேர்ந்தால் - அடைந்தால்,—பிறவி - ஜனனத்தை விளைக்கும்,—கருவின் - கருவினது,—துவக்கு - தொந்தனை யானது,—ஓடும் - நீங்கும்—எ-று. காண் - அசை.

(க-து.) நெஞ்சமே! திருவிற்றுவக்கோடு சேர்ந்தால் கருவின தொந்தனைநீங்கும்—எ-ம் (கக)

## திருக்கடித்தானம்.

காண விரும்புமென் கண் கையுந்தொழ விரும்பும்
பூண விரும்புமென்றன் புன்றலைதான் - வாணன்
றிருக்கடித்தா னத்தான் றிகிரியான் றண்டான்
றிருக்கடித்தா னத்தானைச் சென்று.

(இ-ள் வாணன் - வாணசூரனது,—திருக்கு - மாறுபாட்டை,—அடித்தான் - ஒழித்தவனும்,—சத்தான் - பாஞ்சசந்நியத்தை யுடையவனும்,—திகிரியான் - சக்கரத்தை யுடையவனும்,—தண்டான் - தண்டையுடையவனும்,—திருக்கடித்தானத்தானை - திருக்கடித்தானமென்னுந் திவ்யதேசத்தை யுடையவனு

மாகிய விஷ்ணுவை,—சென்று - போய்,—என்கண் - எனது நே த்திரங்களானவை,—காண - தரிசிக்க,—விரும்பும் - ஆசை கொளளும்.—கையும் - எனது கரங்களும்,—தொழ - அஞ்சலி செய்ய,—விரும்பும் - இச்சிக்கும்,—என்னுடைய - என்னுடைய,—புல் தலைதான - அற்பமாகியசிரசும்,—பூண - (அவரது திருவடியைச்) சூடிக்கொள்ள,—விரும்பும் - ஆவல்கொள்ளும்—எ-று.

(க-நு.) திருக்கடித்தானத்தானைச் சென்று காண என்கண்ணும், தொழ என்கையும், சூடிக்கொள்ள என்சிரசும், விருப்பங் கொள்ளும்—எ-ம். (எ)

திருவாறன்விளை.

சென்று புனன்மூழ்கிச் செய்தவங்கள் செய்தாலும்
வென்று புலனைந்தடக்கி விட்டாலு - மின்றமிழான்
மாறன் விளைத்த மறையோதார்க் கில்லையே
யாறன் விளைத்திருமா லன்பு.

(இ-ள்) சென்று - (நதிதீரங்களிற்) போய்,—புனல் - ஜலத்தில்,—மூழ்கி - குளித்து,—செய் தவங்கள் - உருற்றுந்தபசுகளை,—செய்தாலும் - புரிந்தாலும்,—வென்று - (ஆசோத்திரயங்களிற் செல்வதினின்றும்)ஜயித்து,—புலனைந்து - ஐம்புலன்களையும் - அடக்கிவிட்டாலும் - செல்லாமற் றவிர்த்தாலும்,—இன் தமிழால் - இனிய தமிழ்ப்பாசுரங்களினால்,— மாறன் - நம்மாழ்வார்,—விளைத்த - (உறபத்திசெய்த) சொல்லிய,—மறை - வேதத்தை,— ஓதார்க்கு - பாராயணஞ் செய்யாதவர்களுக்கு,—ஆறன் விளை - திருஆறன்விளை யென்னுந் திவ்யதேசத்தி லெழுந்தருளி யிருக்கும்,—திருமால் - மஹாவிஷ்ணுவுக்கு,—அன்பு - பத்தி செலுத்துதல்,—இல்லை - இல்லையாகும்—எ-று.

(க-ரு.) திருவாரன்விளைத் திருமாலன்பு நம்மாழ்வாரது தமிழைப் பாராயணஞ் செய்யாதார்க் கில்லை—எ-ம். (௭௧)

மலைநாடு முற்றிற்று.

---

## நடுநாட்டுத்திருப்பதிகள். ௨.

### திருவயிந்திரபுரம்.

அன்பணிந்த சிந்தையரா யாய்ந்தமலா தூவி
முன்பணிந்து நீரெமக்கு மூர்த்தியரோ - வென்ப
ரெமையிந்திர புரத்தார்க் கின்றொண்ட ராளூர்
தமையிந்திரபுரத்தார் தாம்,

(இ-ள்) எம் - எமது,—வயிந்திரபுரத்தார்க்கு - திருவயிந்திரபுர மென்னுந் திவ்விய தேசத்தி லெழுந்தருளியவருக்கு,—இன் - (இனிய) உகந்த,—தொண்டர் ஆளூர்தமை - தாசபூதரானவர்களை,—இந்திர புரத்தார் தாம் - தேவலோகத்திலுள்ளவர்கள்,—அன்பு அணிந்த - பத்தியோடுகூடிய,—சிந்தையராய் - உள்ளத்தை யுடையவர்களாய்,—ஆய்ந்த - ஆராய்ந்தெடுத்த,—மலர் - புஷ்பங்களை,—தூவி - சொரிந்து,—முன்பணிந்து - முன்னே நமஸ்கரித்து,—நீர் - தேவரீரோ,—எமக்கு - எங்களுக்கு,—மூர்த்தியர் - கடவுளராவார்,—என்பர் - என்று துதிப்பார்கள்.

(க-து.) திருவயிந்திரபுரத்தார்க் கடியராவாரை இந்திரபுரத்தார்வணங்குவா—எ-ம். (௭௨)

### திருக்கோவலூர்.

தாமரையா ளுறியாய்த் தாவரங்க ளிருள
சேம வுயிருஞ் செகமனைத்தும் - பூமடந்தைக்

காங்கோவ லாயுதன்பின் ளாக வவதரித்த
பூங்கோவ லாயன் பொருள்.

(இ-ள்) தாமரையான்ஆதியா - பிரமனமுதலாக,—தாவர
ங்கள்ஈறுஆன - தாவரங்களிறுதியாகிய,—சேமம் - காவலோ
டுகூடிய,—உயிரும் - பிராணிகளும்,—செக மனைத்தும் - எல்லா
வுலகங்களும்,—பூமடந்தைக்கு - தாமரைக் கமலத்தில் வசிக்கு
ம் மஹாலக்ஷ்மிக்கு,—ஆம்கோ - உகந்த தலைவரும்,—அலா
யுதன்பின்னாக-கலப்பையாயுதத்தையுடையபலராமருக்குப் பின
ளாக,—அவதரித்த - திருவவதாரஞ்செய்த,—பூம் - அழகிய,—
கோவல் - திருக்கோவலூரென்னும் திவ்யதேசத்தி லெழுந்
தருளியிருக்கும்,—ஆயன - (கோபாலராகிய) விஷ்ணுவினது,—
பொருள் - திருவடிப்பொருளாகும் - எ-று.

(க-து.) பிரமனமுதல்தாவரமீறுய்ப்பூங்கோவல் ஆயன் திரு
வடிப்பொருள்கள்—எ-ம். (எக)

நடுநாடு முற்றிற்று.

---

## தொண்டைநாட்டுத்திருப்பதிகள். உஉ

### திருக்கச்சி - அத்திகிரி.

பொருளாசை மண்ணாசை பூங்குழலார் போகத்
திருளாசை சிந்தித்திராதே - யருளாளன்
கச்சித் திருப்பதியா மத்தியூர் கண்ணன்று
யிச்சித் திருப்பதியா மென்று.

(இ-ள்) அருள் ஆளன் - கிருபாளுவும்,—கச்சித் திருப்பதியா
ம்அத்தியூர் - காஞ்சிக்ஷேத்திரமாகிய அத்திகிரியி லெழுந்தருளி

ய,—கண்ணன் - கமலலோசனனது,—தாள் - திருவடியை,—யாம் - நாம்,—இச்சித் திருப்பது - விரும்பியிருக்க வேண்டிவது,—என்று - என்று கருதி,—பொருள் ஆசை - திரவிய இச்சையையும்,—மண் ஆசை - பூமி இச்சையையும்,—பூம் - அழகிய,—குழலார் - கூந்தலையுடைய மடவாரது,—போகத்து - சம்போகத்தினது,—இருள்ஆசை - அந்தகாரமாகிய இச்சையையும்,—சிந்தித்து - நினைத்து,—இராதே - இருக்கவேண்டாம்—எ-று.

சிந்தித்திராதே எ-கு. நினையாமல் — எ-ம். இச்சித் திருப்பது யாம் என்று எ-கு. யாம் விரும்பியிருப்பது எக்காலம்—எ-ம். பொருளுரைப்பினு மமையும்.

(க-து) பொன், நிலம், மாதர் ஆகிய மூன்றி லாசையையும் ஒழித்துவிடு நாம் விரும்பியிருக்கக் கடவது கண்ணனையேயென்று கருது—எ-ம். (எச)

## திருவட்டபுயங்கம்.

என்றுந் துயருழக்கு மேழைகா ணீங்களன்
றன்றுபோற் றுள்ளிக் களிக்கிரி - நன்றுநட
மிட்டபுயங்கத் திருசரண மேசரணென்
றட்டபுயங் கத்தர்க் காளாய்.

(இ-ள்) என்றும் - எக்காலத்தும்,—துயர் - துன்பமான து.—உழக்கும் - வருந்துகின்ற,— ஏழைகாள் - ஏழைகளே,—நீங்கள் - நீங்கள்,—அன்று - முற்காலத்தில்,— புயங்கத்து - காளிங்க னென்னுஞ் சர்ப்பத்தின்மீது,—நடம் இட்ட - நிருத்தஞ் செய்த,—இரு சரணமே - உபய பாதங்களே,—சரண் என்று - புகலிடமென்று,—அட்டபுயங்கத்தர்க்கு - திருவட்டபுயமென்னுந் திவ்விய தேசத்தையுடையவருக்கு,—ஆள் ஆய் -

அடிமையாசி,—இளம்கன்றுபோல் - இளம்பொருந்தியகன்றைப்போல்,—துள்ளி - குதித்து,—களித்து இரீர் - சந்தோஷித்திருக்கமாட்டீர்கள் (எனவே)—எ-று.

(க-து.) ஏழைகாள்! திரு அட்டபுயங்கத்தார்க் காளாய்க் களித்திராதகாரணம் யாது? எ-ம். (எ௫)

## திருத்தண்கா.

ஆட்பட்டே னைம்பொறியா லாசைப்பட்டே னறிவுங்
கோட்பட்டு நாணங் குறைபட்டேன் - சேட்பட்ட
வண்காவை வண்டுவரை வைத்த விளக்கொளிக்குத்
தண்காவைச் சேர்ந்தான் றனக்கு.

(இ-ள்) சேண்பட்ட - தேவலோகத்தி லுள்ள,—வண்காவை - வளவிய கற்பகவிருக்ஷத்தை,—வண் - அழகிய,—துவரை - துவாரகாபுரியில்,—வைத்த - கொண்டுவந்துநட்ட,—விளக்கு ஒளிக்கு - தீபச்சுடரபோன்றவனும்,—தண்காவை - திருத்தண்காவென்னுந திவ்யதேசத்தை,—சேர்ந்தான்றனக்கு - சேர்ந்தவனுமாகிய சுவாமிக்கு,—ஆட்பட்டேன் - அடிமைப்பட்டேன்,—ஐம்பொறியால் - மெய், வாய், கண், மூக்கு, செவி யெனும் பஞ்சேந்திரியங்களாலும்,—ஆசைப்பட்டேன் - விருப்பங்கொண்டேன்,—அறிவும் - புத்தியும்,—கோள்பட்டு - குழப்பமடைந்து,—நாணம் - வெட்கமும்,—குறைபட்டேன் - குறைந்தவனாயினேன்—எ-று.

(க-து.) திருத்தண்காவைச் சேர்ந்தசுவாமியின் மீது காதல் கொண்டு அடிமைப்பட்ட யான் அறிவு கோட்பட்டு நாணமுங் குறைந்தவனாயினேன்—எ-ம். (எ௬)

## திருவேளுக்கை.

தனக்குரிய வோயமைந்த தானவர்கோன் கெட்டா
னுனக்குரிய னாயமைந்த னுய்ந்தா - னினைக்குங்கால்

வேளுக்கை யாளரியே வேறுதவி யுண்டோவுன்
றாளுக்கா ளாகா தவர்க்கு.

(இ-ள்) தனக்கு உரியனாய் (சர்வ சுதந்தரமும்) தனக்கே யுடையவனாய்,—அமைந்த - பொருந்திய,—தானவர்கோன் - அசுரேந்திரனாகிய இரணியன்,—கெட்டான் - அழிந்தான்,—உனக்கு - தேவரீருக்கே - உரியன்ஆய - உரித்தானவனாகிய,—மைந்தன் - பிரகலாதாழ்வான்,—உய்ந்தான் - பிழைத்தான்,— (ஆகலால்) - நினைக்குங்கால் - யோசிக்குமளவில்,—வேளுக்கை - திருவேளுக்கையென்னுந் திவ்வியதேசத்தி லெழுந்தருளிய,—ஆள்அரியே - நரசிம்மமூர்த்தியே,—உன் - உனது,—தாளுக்கு - திருவடிக்கு,—ஆள் ஆகாதவர்க்கு - தொண்டராகாதவர்களுக்கு,—வேறு உதவி - வேறு துணை,—உண்டோ - உள்ளதோ—எ-று.

(க-து) திருவேளுக்கை நாசிம்மமூர்த்தியே! உன் திருவடிக்காளாகா தவர்க்கு வேறு துணை இல்லை—எ-ம். (எஎ)

## திருப்பாடகம்.

தவம்புரிந்த சேதனரைச் சந்திரனா திக்கன்
சிவன்பிரம னிந்திரனாச் செய்கை - யுவந்து
திருப்பா டகமருவுஞ் செங்கண்மா றன்மார்
பிருப்பா டகவுரையா லே.

(இ-ள்) தவம்புரிந்த - தவத்தைச்செய்த,—சேதனரை - அறிவுடையோரை,—சந்திரன்ஆ - மதியமாகவும்,—ஆதித்தன்ஆ - சூரியனாகவும்,—சிவன்ஆ - உருத்திரனாகவும்,—பிரமன்ஆ - பிரமனாகவும்,—இந்திரன்ஆ - தேவேந்திரனாகவும்,—செய்கை - செய்குதல்,—உவந்து - சந்தோஷித்து,—திருப்பாடகம் - திருப்பாடக மென்னுந் திவ்வியதேசத்தை,—மருவும் - பொருந்

திய,—செங்கண்மால்தன் - செங்கமலநேத்திரனாகிய விஷ்ணுவி னது,—மாரபு இருப்பாள் - வக்ஷஸ்தானத்து நிவாசஞ்செய்யும் பி ராட்டியினுடைய,—தக - தகுதியாகிய,—உரையாலே - சொல் லினாலேயாம்—எ-று. சேதனை... எ-கு. ஆன்மாக்களை எ னிறு மடையும். அவை நான் கிடத்துங்கூட்டுக.

(க-து.) திருப்பாடகமருவுமால் பிராட்டியாரு ரையினாலே யே தவம்புரிவோரைச் சூரியன் சந்திரன் முதலியோராகச் செ ய்குவர்—எ-ம் (எஅ)

## திருநீரகம்.

ஆலத் திலைசேர்ந் தழியுலகை யுட்புகுந்த
காலத்தி லெவ்வகைநீ காட்டினாய் - ஞாலத்துள்
ணீரகத்தாய் நின்னடியே னெஞ்சகத்தாய் நீண்மறையின்
வேரகத்தாய் வேதியர்கு மீண்டு.

(இ-ள்) ஞாலத்துள் - பூமியில்,—நீரகத்தாய் - திருநீரகமெ ன்னுந் திவ்வியதேசத்தையுடையவனே,—நின் அடியேன் - நின து தாசனாகிய எனது,—நெஞ்சகத்தாய் - மனதி னிடமானவ னே,—நீள் மறையின் - நெடிய வேதங்களினது,—வேர் அகத்தா ய் - மூலப்பொருளானவனே,—வேதியர்கு - மார்க்கண்டேய முனிவருக்கு,—மீண்டு - மறுபடியும்,—ஆலத்து இலை - வடபத்தி ரத்தில்,—சேர்ந்து - பொருந்தி,—அழி - அழிந்த,—உலகை - உ லகத்தை,—உள்புகுந்த காலத்தில் - உள்ளேபிரவேசித்தகாலத்தி ல்,—எவ்வகை - எந்தப்பிரகாரம்,—நீ காட்டினாய் - நீ தரிசன ப்படுத்தினாய்—எ-று.

(க-து.) திருநீரகத்தாய்! நீ வடபத்திர சாயியா யிருந்தகால த்து உனக்குட்புகுந்த மார்க்கண்டேயருக்கு அழிந்த வுலகத்தை எங்ஙனம் காட்டினாய்—எ-ம். (எகூ)

## திருநிலாத்திங்கட்டுண்டம்.

மீண்டுந் தெளியார்கண் மேதினியோர் நின்னடிப்பூ
பாண்டரங்க மாடி படர்சடைமேற் - றீண்டிக்
கலாத்திங்கட் டுண்டத்தின் மீதிருப்பக் கண்டு
நிலாத்திங்கட் டுண்டத்தானே.

(இ-ள்) நிலாத்திங்கட்டுண்டத்தானே - திருநிலாத்திங்கட்டுண்டமென்னுந் திவ்விய தேசத்தை யுடையவனே,—நின் அடி - உன்னுடைய திருவடிகளிற் (அருச்சுனனால் அருச்சிக்கப்பட்ட),—பூ - பூக்களானவை,— பாண்டரங்கம் ஆடி - பாண்டரங்கமெனனுங் கூத்தினை யாடிய ருத்திரனது,— படர் - பரந்த,— சடைமேல் - சடாபாரத்தின்மீது,— தீண்டி - பொருந்தி,—கலா - கலைகளையுடைய,— திங்கள் துண்டத்தின் மீது - மூன்றாம் பிறைச் சந்திரனுக்குமேல்,— இருப்ப - இருக்க,—கண்டும் - பார்த்திருந்தும்,—மேதினியோர் - பூமியிலுள்ளவர்கள்,—மீண்டும் - மறுபடியும்,— தெளியார்கள் - தெரிந்து கொள்ளார்கள்—எ-று.

(க-து.) திருநிலாத்திங்கட்டுண்டத்தானே! நின்னடியிற் சாத்திய பூவானது ருத்திரனுடைய சடையின்மீ திருக்கக்கண்டும் மேதினியோர் தெளியாத காரணம் யாதோ?—எ-ம். (அ)

## திருவூரகம்.

தேசத்தா லன்றுலகை நீரவார்க்க வைத்தரசந்
வாசத்தா ளொன்றலைமேல் வைத்திலையே - நேசத்தாற்
பாரகத்துள் ளன்றி காண்பாழ்நரகில் வீழ்ந்த தேஞ்சொ
லூரகத்துள் ளின்று புகா.

(இ-ள்) நேசத்தால் - அன்பினால்,—அன்று - வாமநாவதாரங்கொண்டகாலத்து,—உலகை - உலகத்தை,—நீர்வார்க்க - தாரைநீர் வார்க்க,—வைத்து அளந்த - வைத்து அளவிட்ட,—வாசம் - பரிமளம் பொருந்திய,—தாள் - பாதப்போதை,—என் தலைமேல் - எனது சிரசின்மீது,—வைத்திலையேல் - வைக்காமல் விடுவையாமாகில்,—நாசத்தால் - நாசத்தினால்,—பாரகத்து அன்றி - பூமியில் மாத்திரமல்லாமல்,—நான் - யான்,—பாழ் - பாழாகிய,—நரகில் - நரகத்திலும்,—வீழ்வேன் - விழுந்திடுவேன்,—ஊரகத்தாய் - திருவூரகமென்னுந் திவ்விய தேசத்தில்,—நின்றாய் - நின்ற திருக்கோலங்கொண்டவனே,—உரை - சொல்லுவாயாக—எ-று. வாசத்தாள் என்றதனால் போது வருவிக்கப்பட்டது. கொல் அசை.

(க-து) திருவூரகத்தாய்! உன் திருவடிப்போதை என் முடியிற் சூட்டின் உய்வேன்—எ-ர். (௮௪)

திருவெஃகா.

உரைகலந்த நூலெல்லா மோதி யுணர்ந்தாலுந்
திரைகலந்த பால்போற் பிறிதாந் - தரையிற்
றிருவெஃகா மாயனுக்கே சீருறவாந் தங்க
ளுருவெஃகா வுள்ளத்தி னோர்க்கு.

(இ-ள்) தரையில் - பூமியில்,—திருவெஃகா - திருவெஃகாவென்னுந் திவ்வியதேசத்தி லெழுந்தருளிய,—மாயனுக்கே - மாயனென்னுந் திருநாமத்தினை யுடையவனுக்கே,—சீர் உறவாம் - சிறந்தவுறவாகிய,—தங்கள் - தங்களது,—உரு - உடலை,—வெஃகா - விரும்பாத,—உள்ளத்தினோர்க்கு - மனத்தை யுடையவருக்கு,—உரைகலந்த - உரையோடுகூடிய,—நூல் எல்லாம் - சாத்திரங்களை யெல்லாம்,—ஓதி - கற்று,—உணர்ந்தா

ஆம் - அறிந்தாலும்,—பிணைகலந்த - பிணைசேர்ந்த,—பால்போல் - க்ஷீரத்தைப்போல,—பிறிது ஆம் - வேறாகும்—எ-று.

(க-து.) தேகாபிமானம் விட்டு திருவெஃகா மாயனுக் குற வாகுமவர் உணைகலந்த நூலெல்லாம் ஓதி யுணர்ந்தாலும் பிணை கலந்த பால்போற் பிறிதாவர்—எ-ம். (அஉ)

## திருக்காரகம்.

ஓராதார் கல்வியுடையேங் குலமுடையே
மாரா தனமுடையேம் யாமென்று - சீராயன்
பூங்கார கங்காணப் போதுவார் தாடலைமேற்
றாங்கா ரகங்காரத் தால்.

(இ-ள்) ஓராதார் - தெளிவில்லாதவர்கள்,—கல்வியுடையேம் - யாம்வாசித்திருக்கின்றேம்,—குலமுடையேம்-யாம் உயர்க் குலஸ்தர்,—யாம் ஆரா தனம் உடையேம் - யாம் மிக்க செல்வமுடையோம்,—என்று - என்று கருதி,—சீர் - சிறந்த,—ஆயன் - கோபால கிருஷ்ணரது,—பூம் - அழகிய,—காரகம் - திருக்காரக மென்னும் திவ்விய தேசத்தை,— காண - தரிசிக்க,—போதுவார் - போகின்ற தாசர்களது,—தாள் - பாதங்களை,—தலைமேல் - சிரசின்மேல்,—அகங்காரத்தால் - மமதையினால்,— தாங்கார் - தாங்கமாட்டார்கள் —எ-று. ஆராதனம் உடையேம் எ-கு. திருவாராதனத்தை யுடையேம் எனினு மமையும்.

(க-து.) ஓராதார் யாம் கல்வியும் உயர்குலமும் செல்வமு முடையோமென்று கர்வத்தினால் திருக்காரகம்போவார் திரு வடிகளைச் சிரசின்மேல் சூடிக்கொள்ளார்—எ-ம். (அக)

## திருக்கார்வானம்.

தாலேலோ வென்றுரய்ச்சி தாலாட்டித் தன்முலைப்பா
லாலேயெவ் வாறுபசியாற்றினாண்முன் - மாலேபூங்
காரவானத் துள்ளாய் கடலோடு மலைபோடும்
பார்வான முண்டாய் நீபண்டு.

(இ-ள்) மாலே - மஹாவிஷ்ணுவே,—பூம் - அழகிய,—கா ர்வானத்து உள்ளாய் - திருக்காரவானமென்னுந் திவ்வியதேச த்தி லிருக்கின்றவனே,—கடலோடும் - சமுத்திரத்துடன்,— வெற்போடும் - மலைகளோடும்,—பார் - பூமியையும்,—வான ம் - ஆகாயத்தையும்,—பண்டு - பூர்வத்தில்,—உண்டாய்நீ - புசித்தவனாகியநீ,—ஆய்ச்சி - யசோதையானவள்,—தாலேலோ வென்று - தாலேலோவென்று,—தாலாட்டி - தாலாட்டி,—தன் முலைப்பாலாலே - தனது தனப்பாலினால்,—பசி - பசியை,—முன் - பண்டு,—எவ்வாறு ஆற்றினள் - எவ்விதந்தணித்தாள்—எ-று.

(க-து.) திருக்கார்வானத் துள்ளவனே! கடலோடு மலை யையும் பூமியையும் வானத்தையும் கவளீகரித்த உன் பசியை ய சோதை தன்முலைப்பாலால் எவ்விதந்தணித்தனள்-எ-ம். (அச)

## திருக்கள்வனூர்.

பண்டேயுன் றொண்டாம் பழவுயிரை யென்னதென்று
கொண்டேனைக் கள்வனென்று கூறாதே - மண்டலத்தோர்
புள்வாய்பிளந்த புயலேயுனைக் கச்சிக்
கள்வாவென் றோதுவதென் கண்டு.

(இ-ள்) மண்டலத்தோர் - பூமியிலுள்ளவர்கள்,—பண்டே - பூர்வமே,—உன் - உனது,—தொண்டு ஆம் - அடிமையாகிய,— பழ உயிரை - பழய ஜீவனை,—என்னதென்று - எனதுடைய

தென்று, — கொண்டேனை - கருத்தையுடைய என்னை,—கள்வன் என்று - திருடனென்று,—கூறாது - சொல்லாமல்,—புள் - (பகாசுரன்) கொக்குப்பக்ஷியினது,—வாய் - வாயினை,—பிளந்த - பிளவுசெய்த,—பயல - மேகவண்ணனே,—உனை - உன்னை,—கச்சி கள்வா என்று (-காஞ்சியில்வசிக்கும் திருடா என்று), காஞ்சியின்கண்ணதாகிய திருக்கள்வனூரென்னுந் திவ்விய தேசத்தையுடையவனென்று,—ஓதுவது - சொல்லுவது,—என்கண்டு - எதனைப்பார்த்து—எ-று.

(க-து.) மேகவண்ணா! தொன்றுதொட்டு உனக்கு அடிமையான உயிரை எனதென நினைக்குமெனனைக் கள்வனென்னாது உனனைக்கள்வனென்பதென்னகாரணம்—எ-ம். (அரு)

## திருப்பவளவண்ணம்.

கண்டறிந்துங் கேட்டறிந்துந் தொட்டறிந்துங் காதலா
லுண்டறிந்து மோந்தறிந்து முய்யேனை - பண்டைத்
தவளவண்ணா கார்வண்ணா சாமவண்ணா கச்சிப்
பவளவண்ணா நின்பொற் பதம்.

(இ-ள்) பண்டை - பழமையாகிய,—தவளவண்ணா - சுவேத வண்ணனே,—கார்வண்ணா - மேகவண்ணனே,—சாமவண்ணா - பச்சைவண்ணனே,—கச்சி - காஞ்சியின்கண்ணதாகிய,—பவளவண்ணா - திருப்பவளவண்ணமென்னுந் திவ்வியதேசத்தை யுடையவனே,—நின் - உனது,—பொன் - அழகிய,—பதம் - திருவடிகளை,— கண்டு அறிந்தும் - தரிசித்துணர்ந்தும்,— கேட்டு அறிந்தும் - கேட்டுணர்ந்தும்,—தொட்டு அறிந்தும் - பரிசித்துணர்ந்தும்,—காதலால் - ஆசையினால்,— உண்டு அறிந்தும் - புசித்தருசித்துணர்ந்தும்,—மோந்து அறிந்தும்-வாசனைபார்த்துணர்ந்தும்,—உய்யேன் - பிழைக்கமாட்டேன்,—எ-று.-அமா...

(க-து.) திருப்பவளவண்ணா ! நின் பொற்பதத்தைக் கண்டு கேட்டு உண்டு மோந்து பரிசித்து அறிந்து நான் பிழையேன்.

## திருப்பரமேச்சுரவிண்ணகரம்.

பதத்தமிழாற் றன்னையே பாடுவித்தென் னைத்தன்
பதத்தடியார்க் கேபாட் படுத்தா - னிதத்த
பரமேச் சுரவிண் ணகரான் பலவான்
வரமேச் சுர லணைந்த மால்.

(இ-ள்) இதத்த - நன்மையினையுடைய,— பரமேச்சுரவிண்ணகரான் - திருப்பரமேச்சுரவிண்ணகரமென்னுந் திவ்விய தேசத்தை யுடையவனும்,—பல ஆன் - பலபசுக்கள்,—வர - வருபடியாக,—மேச்சு - மேய்த்து,—உரல் - உரலில்,—அணைந்த - கட்டுண்டவனுமாகிய,—மால் - விஷ்ணுவானவர்,—பதம் தமிழால் - இன்பமாகியதமிழினால்,—தன்னையே பாடுவித்து - தன்னையே பாடச்செய்து,—என்னை - என்னை,—தன் பதத்து -தன் பாதங்களுக்கு,— அடியார்க்கே - தாசராகியவருக்கே,— ஆட்படுத்தான் - தொண்டனாக்கினான்—எ-று. பதத் தமிழால் வே-கு. தமிழ்மொழியினால் - எனினு மமையும்.

(க-து) திருப்பரமேச்சுர விண்ணகரமால் தன்னைத் தமிழால் பாடச்செய்து தன்னடியார்க் கடியனாக்கினான் —எ-ம். (அ)

## திருப்புட்குழி.

மால்வே ழமுமரவு மாயையும்வெற் பும்கடலு
மேல்வீழ் டையும் விடமும்போய்ப் - பால
னெருப்புட் குழிகுளிர நின்றதுங் கேட்டோதார்
திருப்புட் குழியமலன் சீர்.

(இ-ள்) மால் - பெரிய,—வேழமும் - யானையும்,—அரவும் - பாம்பும்,—மாயையும் - மாயமும்,—வெற்பும்-மலையும்,—கடலு

ம் - சமுத்திரமும்,—மேல் - மேலே,—வீழ் - விழுந்த,—படையு
ம் - ஆயுதமும்,—விடமும் - விஷமும்,—போய் - நீங்கி,—பால
ன் - பிரகலாதாழ்வான்,—நெருப்பு குழியுள் - அக்கினிக்கு
ண்டத்தில்,—குளிர நின்றதும் - குளிர இருந்ததையும்,—கே
டு - கேள்வியுற்று,—திருப்புட்குழி - திருப்புட்குழி யென்னுந
திவ்வியதேசத்தி லெழுந்தருளிய,—அமலனை - மலமில்லாதவனு
டைய,—சீர் - கீர்த்தியை,—ஓதார் - சொல்லார்கள் (என்னே?)
—எ-று. நெருப்புட்குழி எ-தை. நெருப்பு - உள் - குழி என
ப் பிரித்து நெருப்புக் குழியுள் என அநுவயப் படுத்துக.

(க-று.) பிரகலாதன் சரித்திரத்தைக் கேட்டிருந்தும் திருப்புட்குழி யமலனது சீரை யோதார்கள் என்னே—எ-ம்.

## திருநின்றவூர்.

சீரறிந்து தோழிமீர் சென்றுகொணர்ந் தெனக்குப்
போரமுலை முகட்டிற் பூட்டுமினோ - நேரவுணர்
பொன்றவூர் புட்கழுத்திற் பொன்னைமா ணிக்கத்தை
நின்றவூர் நித்திலத்தை நீர்.

(இ-ள்.) தோழிமீர் - தோழிமார்களே,—நீர் - நீங்கள்,—நேர் - (யுத்தத்தில்) எதிர்த்த,—அவுணர் - இராக்ஷதர்கள்,—பொன்ற - அழிய,—புள்கழுத்தில் - கருடாழ்வான் கழுத்தில்,—ஊர - ஆரோகணித்துலாவும்,—பொன்னை - பொன்னையும்,—மாணிக்கத்தை - மாணிக்கத்தையும்,—நின்றவூர் - திருநின்றவூ ரென்னுந் திவ்வியதேசத்தி லெழுந்தருளிய,—நித்திலத்தை - முத்தையும்,—சீர் - சிறப்பினை,—அறிந்து - தெரிந்து,—சென்று - போய்,—கொணர்ந்து - கொண்டுவந்து,—எனக்கு - எனக்கு,—போர - மிகவும்,—முலைமுகட்டில் - தனங்களின் உச்சியில்,—பூட்டுமின் - அணியுங்கள்—எ-று. ஓ - அசை.

(க-ரை.) தோழிமார்களே! நீங்கள் திருநின்றவூர் முத்தையும் மாணிக்கத்தையும் பொன்னையுஞ் சீர்அறிந்து கொணர்ந்து என் முலைமுகட்டில் பூட்டுமின்—எ-ம். (அக)

## திருவெவ்வுளூர்.

நீர்மைகெட வைதாரு நின்னோ டெதிர்த்தாருஞ்
சீர்மைபெற நின்னடிக்கீழ்ச் சேர்கையா - னேர்மையிலா
வெவ்வுளத்த னேன்செய் பிழைகளைப் பொறுத்தருளி
யெவ்வுளத்தனே நீயிரங்கு.

(இ-ள்) நீர்மை கெட - தன்மையழிய,—வைதாரும் - ஏசினவர்களும்,—நின்னோடு - உன்னுடன்,—எதிர்த்தாரும் - மாறுகொண்டவர்களும்,—சீர்மை பெற - சிறப்பையடைய,—நின அடிக்கீழ் - உனது சரணங்களின் கீழ்,—சேர்கையால் - சேர்தலினால்,—நேர்மையிலா - ஒழுங்கில்லாத,—வெவ்வுளத்தனேன் - கொடிய சிந்தையையுடைய யான்,—செய் - புரிகின்ற,—பிழைகை - குற்றத்தை,—பொறுத்து அருளி - க்ஷமித்தருளி,—எவ்வுள் அத்தனே - திருவெவ்வுளூரென்னுந் திவ்விய தேசத்தையுடையவனே,—நீ இரங்கு - நீ கிருபைசெய்வாயாக—எ-று.

(க-ரை.) திருவெவ்வுளூரத்தனே! என் பிழைகளைப் பொறுத்துக் கிருபை செய்வாயாக—எ-ம். (கூ)

## திருநீர்மலை.

இரங்கு முயிரனைத்து மின்னருளாற் காப்பா
னருங்க ளொருவனுமே யாதல் - கரங்களாற்
போ[illegible] மலைவான் வந்த புகழ்வாணன் காட்டினா
னீர்மலைவா ழெந்தையெதிர் நின்று.

(இ-ள்) இரங்கும் - வருந்துகின்ற,—உயிர் அனைத்தும் - எல்லா ஆன்மாக்களையும்,— இன் அருளால் - இனிய கிருபையினு

ல்,—காப்பான் - காக்கின்றவன்,—அரங்கன் ஒருவனுமே - திருவரங்கநாதன் ஒருவனே,—ஆதல் - ஆகியிருத்தலை,—கரங்களால் - கைகளினால்,—போர் மலை - யுத்தஞ்செய்த,—வானவந்த - ஆகாயம் வரையினும் பரவிய,—புகழ - கீர்த்தி வாய்ந்த,—வாணன் - வாணாசுரன்,—நீர் மலைவாழ் - திருநீர்மலை யென்னுந் திவ்விய தேசத்தெழுந்தருளிய,—எந்தை - என்தந்தையின,—எதிர் நின்று - எதிரே நின்று,—காட்டினான் - தெரிவித்தான்—எ-று. போர்மலைவான் வந்த - எ-கு. யுத்தஞ்செய்யும்படி வந்த என் றுரைப்பினுமமையும்.

(க-து.) எல்லா ஆன்மாக்களையுங் காப்பான் அரங்கனொருவனாதலை எதிர்நின்று வாணாசுரன் விளக்கினான். எ-ம். (௬௭)

## திருவிடவெந்தை.

நின்று திரியும் பிறவியெல்லா நேர்வித்துக்
கொன்று திரியுங் கொடுவினையார் - இன்று
வெருவிடவெந் தைக்கே விழைந்தகொண்டனே னென்
திருவிடவெந் தைக்கே செறிந்து.

(இ-ள்) திருவிடவெந்தைக்கே - திருவிடவெந்தையென்னுந் திவ்வியதேசத்தே,—செறிந்து - சேர்ந்து,—நின்று திரியும் - அசரமும் சரமுமாகிய,—பிறவி எல்லாம் - ஜனனங்களையெல்லாம்,—நேர்வித்து - சம்பவிப்பித்து,—கொன்று திரியும் - சம்மரித்துத்திரிகின்ற,—கொடு வினையார் - கொடிய தொழிலையுடையவராகிய பிரமனும்இயமனும்,—இன்று-இப்போது,—வெருவிட - பயப்படும்படியாக,— எந்தைக்கே - என் தந்தைக்கே,—விழைந்த - சிறந்த,—தொண்டனேன் - அடியவனயினேன் —எ-று.

(க-து.) திருவிடவெந்தையைச் சேர்ந்து பிரமனும் இயமனும் பயப்பட எந்தைக்கே சிறந்த தொண்டனானேன்—எ-ம். (௬௮)

## திருக்கடன்மல்லை.

செறிந்த பணைபறித்துத் திண்களிற்றைச் சாடி
முறிந்துவிழப் பாகனையு மோதி - யெறிந்த
திருக்கடன்மல்லைக் குமைத்தான் தஞ்சமென்று நெஞ்சே
திருக்கடன் மல்லைக்குட் டிரி.

(இ-ள்) செறிந்த - நெருங்கிய, — பணைபறித்து - பணைகளைக்கவர்ந்து, — திண் - வலிய, — களிற்றை - குவலயாபீடமென்னும் யானையை, — சாடி மோதி — பாகனையும் - மாவுத்தனையும், — முறிந்துவிழ - முதுகுமுறிந்துவிழும்படி, — மோதி - அடித்து, — எறிந்த - தூக்கிவீசி, — திருக்கு - இருமாப்பையும், — அடல் - பராக்கிரமத்தையுமுடைய, — மல்லை - மல்லர்களை, — குமைத்தான் - அழித்தவனாகிய விஷ்ணுவே, — தஞ்சம் என்று - சரணகதி யென்று, — நெஞ்சே - மனமே, — திருக்கடன்மல்லைக்குள் - திருக்கடன்மல்லை யென்னுந் திவ்யதேசத்தில், — திரி - சஞ்சரிப்பாயாக — எ-று.

(க-து) நெஞ்சே! வலிய மல்லர்களைக்கொன்ற விஷ்ணுவே தஞ்சமென்று திருக்கடன் மல்லையில் சஞ்சரிப்பாயாக — எ-ம்.

## திருவல்லிக்கேணி.

திரிந்துழலுஞ் சிந்தைதனைச் செவ்வே நிறுத்திப்
புரிந்து புகல்மின் புகன்றான் - மருந்தாங்
கருவல்லிக் கேணியா மாக்கதிக்குங் கண்ணன்
திருவல்லிக் கேணியான் சீர்.

(இ-ள்) கண்ணன் - கிருஷ்ணனாகிய, — திருவல்லிக்கேணியான் - திருவல்லிக்கேணி யெனனுந்திவ்விய தேசத்தையுடையவனுடைய, — சீர் - கீர்த்தியை, — திரிந்து - சஞ்சரித்து, — உழலுஞ் - சுழலுகின்ற, — சிந்தைதனை - மனதை, — செவ்வே நிறுத்தி - நேராகத் தரிப்பித்து, — புரிந்து - விரும்பி, — புகல்மின் - சொல்

னுங்கள்,—புகன்றால் - (அவ்வாறு)சொல்லினால்,—கருவல்லிக்கு-கருவாகிய கொடிக்கு,—மருந்தாம் -(நசிப்பிக்கும்)ஔடதமாகும்,—மா - மகத்தாகிய,—கதிக்கு - மோக்ஷத்திற்கு,—ஏணியாம் - ஏணியுமாகும்—எ-று. கருவல்லி எ-கு. ஜனனமாகிய விலங்கு எனினு மமையும்.

(க-து.) மானிடரே! திருவல்லிக்கேணியான் சீனாச்சொல்லின உம்மை ஜனிக்க வொட்டாது மோக்ஷத்தில் சேர்க்கும்—எ - ம்.

திருக்கடிகை.

சீரருளா னம்மைத்திருத்திநா முன்னறியாக்
கூரறிவுந் தந்தடிமை கொண்டதற்கே - நேரே
யொருகடிகையும் மனமே யுள்ளுகிலாய் முத்தி
தருகடிகை மாயவனைத் தான்.

(இ-ள்) மனமே - நெஞ்சமே,—சீர் - சிறந்த,— அருளால் - கிருபையினால்,—நம்மை - நம்மை,—திருத்தி - செவ்வன் செய்து,— நாம் - யாம்,— முன் அறியா - முன்னே தெரியாத,— கூர் அறிவும் - நுண்ணிய விவேகமும்,— தந்து - கொடுத்து,—அடிமை கொண்டதற்கு - தொண்டு கொண்டதற்கு,—நேரே - சரியாக,—ஒரு கடிகையும் - ஒரு நாழிகையும்,—முத்திதரு - மோக்ஷத்தைக்கொடுக்கும்,—கடிகை-திருக்கடிகை யென்னுந் திவ்விய தேசத்தெழுந்தருளிய,—மாயவனைத்தான் - மாயவனென்னுந் திருநாமத்தையுடையவனைத்தான்,—உள்ளுகிலாய் - நினைக்கமாட்டாய்—(என்னே?)—எ-று.

(க-து.) மனமே! நம்மைத் திருத்தியாண்டதற்காக ஒரு கடிகையேனும் திருக்கடிகை மாயவனை நினைக்காததென்ன நன்றிக்கேடு—எ-ம்.

தொண்டைநாடு முற்றிற்று.

## வடநாட்டுத் திருப்பதிகள்—௧௨.

### திருவேங்கடம்.

தானே சரணமுமாய்த் தானே பலமுமாய்த்
தானேகுறைமுடிக்குந் தன்மையான் – தேனேய்
திருவேங்கடந் தொழுதேந் தீயவிபூதிக்குள்
மருவேங்கடந்தனெமிவ் வாழ்வு.

(இ-ள்) தானே சரணமுமாய் - தானே புகலிடமாகியும்,—தானே பலமுமாய் - தானே ஆதாரமுமாகியும்,—தானேகுறை - தானே மனவேண்டுகோளை,—முடிக்கும் - பூர்த்தியாக்குகின்ற,—தன்மையான் - குணபூதனது,—தேனேய் - தேன் பொருந்திய,—திருவேங்கடம் - திருவேங்கடமென்னுந் திவ்விய தேசத்தை,—தொழுதேம் - வணங்கினோம்,—தீய - கொடிதாகிய,—விபூதிக்குள் - லீலாவிபூதிக்குள்,—மருவேம் - பொருந்தோம்,—இவ்வாழ்வு - இந்த வாழ்வை,—கடந்தனெம் - கடந்தோம்—எ-று.

(க-து.) தானே சரணமும் பலமுமாய்க் குறைகளை முடிக்குங் குணபூதனானவனது திருவேங்கடம் தொழுததால் இவ்வாழ்வைக் கடந்தோம்—எ-ம். (௧௭)

### திருச்சிங்கவேள் குன்றம்.

வாழ்குமரன் மேற்கனக வஞ்சகன்மே லோர்முகத்தே
சூழ்கருணையும் முனிவுந் தோன்றியவால் – கேழ்கிளரு
மங்கவேள் குன்ற வழன்சரபத் தைப்பிளந்த
சிங்கவேள் குன்றத்தி னார்க்கு. ௧

(இ-ள்) கேழ் - நிறம்,—கிளரும் - விளங்குகின்ற,—அங்கம் - தேகத்தையுடைய,—வேள் - மன்மதனானவன்,—குன்ற - நசிக்க,—அழல் - கோபித்த,—சரபத்தை - சரபப்பட்சியை,—பிளந்த - போழ்ந்த,—சிங்கவேள் குன்றத்தினார்க்கு - திருச்சிங்கவேள் குன்றமென்னுந் திவ்விய தேசத்தை யுடையவருக்கு,—வா

ழ் - உச்சீவித் திராநின்ற,—குமரன்மேல் - பிரகலாதன்மீது,—கருணையும் - சிறுமையும்,—கனக வஞ்சகன மேல் - கபடனாகிய இரணியன் மீது,—முனிவும் - கோபம்,—ஓர் முகத்தே - ஒரு முகத்திலிடத்திலே,—தோன்றிய-உதித்தன —எ-று-ஆல்-அசை

(க-து.) திருச்சிங்கவேள்குன்றத்திலார்க்கு ஓர் முகத்திலேதானே கருணையுங் கோபமும் முறையே பிரகலாதன் மீதும் இரணியன் மீதுந் தோன்றின—எ-ம். (கூ)

## திருவயோத்தி.

ஆர்க்குமிது நன்றுதீ தானாலு நெஞ்சேநீ
பார்க்கும் பலகலையும் பன்னாதே - சீர்க்குந
திருவையோத்திப் புயலைச் சீரிய மெய்ஞ்ஞானத
துருவையோதத்திற் பொருளையோர்.

(இ-ள்.) ஆர்க்கும் - எவருக்கும்,—இது - யான் சொல்லுவது,— நன்று தீது ஆனாலும் - நன்றேயாயினுந் தீதேயாயினும்,—நெஞ்சே - மனமே,—நீ - நீ,— பார்க்கும் - பார்க்கின்ற,—பலகலையும் - பல சாஸ்திரங்களையும்,— பன்னாதே -தேராமல்,—சீர்க்கும் - சிறப்பினையுடைய,—திருஅயோத்தி - திருவயோத்தியென்னுந் திவ்வியதேசத் தெழுந்தருளிய,— புயலை - மேகவண்ணனை,—சீரிய - சிறந்த,—மெய் ஞானத்து உருவை - சத்திய ஞானசொரூபியை,— ஓத்தின் - வேதத்தின்,—பொருளை - அருத்தமானவனை,—ஓர் - அறிவாயாக—எ-று.

(க-து.) நெஞ்சே! நீ பல கலையும் பன்னாமல் திருவயோத்தியி லெழுந்தருளிய ஞான சொரூபனை அறிவாயாக—எ-ம்.

## திருநைமிசாரணியம்.

ஓரறிவு மில்லாத வென்போல்வார்க் குய்யலாம்
பேரறிவுண் டேனும் பிறர்க்கரிது - பாரறிய

ரத்தையும் வெளியிட்ட கேசவனைத் திருவதரியாச்சிரமத்துச் சென்று வணங்குவோம்—எ-ம். (௧0௧)

## திருக்கங்கைக்கரைக்கண்டம்.

மந்தரத்தாற் கடல்கடைந்து வானோர்க் கமுதளித்த
வந்தா வெனக்குன் னடிப்போதிற் - புந்தமுதைக்
கங்கைக் கரைசேருங் கண்டத்தாய் புண்டரிக
மங்கைக் கரசே வழங்கு.

(இ-ள்) கங்கைக்கரை சேரும் கண்டத்தாய் - திருக்கங்கைக் கரைக்கண்டமென்னுந் திவ்வியக்ஷேத்திரத்தையுடையவனே,— புண்டரிகம் - தாமரையில் வசிக்கும்,—மங்கைக்கு - இலக்ஷுமிக்கு,—அரசே—நாயகனே,— மந்தரத்தால் - மந்தரமென்னு மந்திரத்தால்,—கடல் கடைந்து - திருப்பாற்கடலை மதித்து,—வானோர்க்கு - தேவர்களுக்கு — அமுது அளித்த - அமுதைக் கொடுத்த,—அத்தா - இறைவனே,—எனக்கு - அடியேனுக்கு,—உன் - உன்னுடைய,—அடிப்போதில் - பாத மலரிலிருக்கும்,—புந்து அமுதை - புதிய அமுதத்தை,—வழங்கு - கொடுப்பாயாக.

(க-து) திருக்கங்கைக்கரைக்கண்டத்தாய்! உன் அடிப்போதிலுள்ள புத்தமுதை எனக்கு வழங்குவாயாக—எ-ம். (௧0௨)

## திருப்பிருதி.

வழங்கு முயிரனைத்தும் வாரிவாய்ப் பெய்து
விழுங்குங் கவந்தன் விறற்றோட் - செழுங்கைப்
பொருப்பிருதிக் குஞ்சிடத்தாற் போர் துணித்து வீழ்த்தான்
திருப்பிருதிக் கென்னெஞ்சே செல்.

(இ-ள்) வழங்கும் - இயங்குகின்ற,—உயிர் அனைத்தும் - எல்லாவுயிரையும்,—வாரி - கவர்ந்து,—வாய் பெய்து - வாய்க்

குள் இடு,—விழுங்கும் - விழுங்கிய,—கவந்தன் - கவந்தனது,—விறல் - வெற்றிபொருந்திய,—தோள் கிழங்கை - தோளாகிய கிழங்கை,—பொருப்பு - பர்வதமானது,—இருதிக்கும் - இரண்டு திக்கிலும்,—கிடந்தாற்போல் - கிடந்ததுபோலும்,—துணித்து - துண்டமாக்கி,—வீழ்த்தான் - விழச்செய்தவனது,—திருப்பிருதிக்கு - திருப்பிருதி யென்னுந் திவ்யதேசத்துக்கு,—என் நெஞ்சே - என் மனமே,—செல் - போவாயாக.

(க-ரை.) என் நெஞ்சே! கவந்தனது தோளைப்பிளந்தவனது திருப்பிருதிக்குச் செல்லுவாயாக—எ-ம். (௧௦௫)

## திருவடமதுரை.

செல்வ முயிருடம்பு சேர வுரித்தாக்கி
வல்வினையி னீங்கினோ மாந்தர்காள் - தொல்லை
வடமதுரை யான்கழலை வாய்த்ததஞ்ச மென்று
திடமதுரை செய்தான் றிறத்து.

(இ-ள்) மாந்தர்காள் - மனிதர்களே,— தொல்லை - பழமையாகிய,—வடமதுரையான் - திருவடமதுரை யென்னுந் திவ்விய தேசத்தையுடையவனது,— கழலை - திருவடிகளை,—வாய்த்த - பொருந்திய,—தஞ்சம் என்று - சரணமென்று,—திடமது - உறுதியை,—உரை செய்தானை - சொல்லினவனது,—திறத்து - வசத்து,—செல்வம் - பொருளும்,—உயிர் - ஆவியும்,—உடம்பு - உடலும்,—சேர - ஒருமிக்க,—உரித்து ஆக்கி - உரிமையாக்கி,—வல்வினையின் - கொடியவினையினின்றும்,—நீங்கினோம் - நிவர்த்தியாயினோம்—எ-று.

(க-ரை.) மாந்தர்காள்! யாம் திருவடமதுரையான் கழலை தஞ்சமென் றுரைசெய் தவன்வசத்தில் உடல் பொருளாவி மூன்றையும் தத்தஞ்செய்து வல்வினையினின்று நீங்கினோம்—எ-ம்.

## திருத்துவாரகை.

திறந்திறமாத் தாந்துய்க்குந் தீஞ்சுவையை நாடி
யறந்திறம்பிப் பாதகரா னைவர் - நறுந்துளவ
மாதுவரை யோனே மனந்துணையாக் கொண்டென்னைக்
காதுவரையோ மெய் கலந்து.

(இ-ள்) நறுந்துளவம் - வாசனையுள்ள துளசிமாலையையணிந்த,— மா - பெருமை பொருந்திய,— துவரையோனே - துவாரகாபுரியென்னுந் திவ்வியதேசத்தையுடையவனே,— திறந் திறமா - விதம் விதமாக,— தாம் துய்க்கும் - தாம் அனுபவிக்கும்,— தீம் - மதுரமான,— சுவையை - உருசியை,— நாடி - தேடி,— அறம் - தருமத்தினின்றும்,— திறம்பி - தப்பி,— பாதகர் - தீவினையையுடையவராகிய,— ஓரைவர் - பஞ்சேந்திரியாதிகள்,— மனம் - எனது நெஞ்சத்தை,— துணையாக்கொண்டு - சகாயமாகக்கொண்டு,— என்னை - என்னை,— மெய் கலந்து - சரீரத்துட்சேர்ந்து,— ஐயோ - ஐயோ,— காதுவர் - வருத்துவார்கள்— எ-று.

(க-து.) மாதுவரையோனே! பஞ்சேந்திரியாதியர் என சரீரத்துட் கலந்து என்னை வருத்துவதற்கு ஐயோ யானென் செய்வேன்— எ-ம். (௧௦௫)

## திருவாய்ப்பாடி.

கலந் தமரரோடுங் கலைகண்டா ரோடும்
பொலிந்த திருநாட்டிருக்கப் போவீர் - மலிந்தபுக
ழண்டராய்ப்பாடி யமல ரடியாரடியார்
தொண்டராய்ப் பாடித் தொழும்.

(இ-ள்) மலிந்த புகழ் - புகழ் மிக்க,— அண்டர் - இடையர்களது,— ஆய்ப்பாடி - திருவாய்ப்பாடி யென்னுந் திவ்வியதேசத்தெழுந்தருளியிருக்கும்,— அமலர் - மலமில்லாதவருடைய,—

அடியார் அடியார் - தாசர்களுக்குத் தாசரது,—தொண்டரா ய் - தாசராய்,—பாடி - பாடி,—தொழும் - வணங்குங்கள்,—(அங்ஙனம் வணங்கினால்) அட்டபேரோடும் - தேவர்களோடும்,—கலை கண்டாரோடும் - சாஸ்திரங்களைக் கண்டறிந்தவர்களோடும்,—கலந்து - சேர்ந்து,—பொலிந்து - சிறந்து,—திருநாட்டு - திருவைகுந்தத்து,—இருக்கப்போவீர் - தங்கியிருக்க வருவீர்கள்—எ-று.

(க-து.) திருவாய்ப்பாடி யமலரது தாசர்களுக்குத் தாசரது தாசராய்ப் பாடித் தொழுதால் திருவைகுந்தத்துத் தெள்ளியோரோடு தேவரோடும் கலந்திருக்கலாகும்—எ-ம். (எஅ)

## திருப்பாற்கடல்.

தொழும்பாய நானல்ல தறிந்து கொண்டேன்
செழும்பா யலைமுத்தஞ் சிந்தி - முழங்குந்
திருப்பாற் கடலான்றாள் சேர்ந்தா ரடிசேர்ந்
திருப்பார்க் கடலா மிடர்.

(இ-ள்) செழு-செழுமையாகிய,—பாய்அலை - பரம்புகின்ற அலையானது,—முத்தம் - முத்துகளை,—சிந்தி - சிதறி,—முழங்கும் - சத்திக்கும்,—திருப்பாற் கடலான் - திருப்பாற் கடலென்னுந் திவ்விய க்ஷேத்திரத்தெழுந்தருளியிருப்பவனது,—தாள்-திருவடிகளை,—சேர்ந்தார் - அடைந்தவரது,—அடி சேர்ந்து - திருப்பாதங்களைப் பொருந்தி,—இருப்பார்க்கு - இருப்பவனுக்கு,—இடர் - துன்பங்களை,—அடல் ஆம் - நசிப்பித்தல் முடியும் (என்கின்ற),—நல்லது - நல்லஉளவை,—தொழும் பாய நான் - அடிமையாகிய யான்,—அறிந்து கொண்டேன் - தெளிந்து கொண்டேன்—எ-று.

(க-து.) திருப்பாற் கடலான் றாள்சேர்ந்தா ரடிசேர்ந்திருப் பீர்க்கு இடரில்லாமென்னு நல்ல குறிப்பினை யானறிந்து கொண் டனை—எ-ம். (கoஎ)

வடநாடு முற்றிற்று

---

## திருநாட்டுத் திருப்பதி-க.

### பரமபதம்.

இடருடையேன் சொல்ல வெளிதோ பிரம
னடரும்விடை யோருக் [illegible]தே - தொடருங்
கருவைகுந் தம்பிறவி கட்டறுத்து மீளாத்
திருவைகுந்தம் பெறுவார் சீர்

(இ-ள்) தொடரும் - தொடர்ந்து வருகின்ற,—கருவைகும் - கருவினிடத்துப் பொருந்தும்,—கம்பிறவி - தமது ஜனனத்தி னது,—கட்டு அறுத்து - தளைகளைச் சேதித்து,—மீளா - திரும் பாத,—திருவைகுந்தம் - திருவைகுந்தமென்னுந் திவ்யதேச த்தை,—பெறுவார்-அடையப்பெறுவாரது,—சீர் - சிறப்பை,— பிரமன - பிரமனுக்கும்,—அடரும் விடையோருக்கும்,—[illegible] தும் ரிடபத்தையுடைய வுருத்திரனுக்கும்,—[illegible] - சொல்லமு டியாதாயின்,—இடருடையேன் - துன்பத்தையுடையவனாகிய யான்,—சொல்ல - புகழ,—எளிதோ - இல்லையோ—எ-று.

(க-து.) திருவைகுந்தம் பெறுவார் சீர் இடருடையேன் சொல்ல வெளிதோ—எ-ம். (கoஅ)

திருநாடு முற்றிற்று.

---

கணபதி துணை

திருக்கைலாசபரம்பரைப்

பொம்மையபுராதீனம்

ஸ்ரீசிவஞானபாலையதேசிகாதீனத்து

நல்லாற்றூர் அல்லது துறைமங்கலம்

சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# பழமலையந்தாதி.

இஃது,

ஷை ஆதீனத்துச் சிதம்பரம்

## இராமலிங்கசுவாமிகளால்

திருத்தமாகப் புதுக்கப்பட்ட உரையோடு,

தண்டையார்பேடு

க. வ. திருவேங்கடநாயுடுவால்

சென்னை:

ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விய ஹு ஆனிமீ.

கணபதிதுணை.

# பழமலையந்தாதியுரை.

காப்பு.

சீரதங்கோட்டுமுனிகேட்டநூற்படிசெங்கரும்பா
லேரதங்கோட்டுவயல்சூழ்முதுகுன்றிறையவனைப்
பூரதங்கோட்டுமலையானைப்பாடப்புரந்தருளும்
பாரதங்கோட்டுநுதியாலெழுதியபண்ணவனே.

(இதன்பொருள்.) பாரதம் கோட்டு நுதியால் எழுதிய பண்ணவன் - (ஐந்தாம்வேதமென்னும்) பாரதகதையைத் (தனது) கொம்பு நுனியாகிய எழுத்தாணிக்கூரினால் (மேருமலையென்னும் ஏட்டில் சில சாதனமாக) எழுதிவைத்த விநாயகக்கடவுள்,— செங்கரும்பால் ஏர் ஓட்டு வயல் சூழ் முதுகுன்று இறையவனை - (பள்ளர்கள்) சிவந்த கரும்பாகிய தாற்றுக்கோலினால் உழும்பகட்டை (அடித்து) நடத்துகின்ற கழனிகள் புடைவளைந்த பழமலையென்னும் தலத்தில்வாழும் தலைவரும்—பூ ரதம் கோட்டும் மலையானை-பூமியாகிய இரதத்தையும்வில்லாகவளைத்த மேருமலையையும் உடையவருமாகிய சிவபெருமானை— சீர் அதங்கோட்டுமுனி கேட்ட நூற்படி பாட-(உலகத்திலே) சீர்த்தி பெற்ற அதங்கோட்டு மகாமுனிவரால் கேட்கப்பட்டு விளங்கும் தொல்காப்பிய இலக்கணப்படியே (யான் தமிழினாலே) துதித்தற்கு,— புரந்தருளும்-இடையூறு வாராமற் காத்தருளுவர். என்றவாறு. அது பகுதிப்பொருள் விகுதி. அங்கு அசை.

திருவருந்தங்கவருங்கல்விமாதுசிறப்புவருங்
கருவருந்தங்கநிலையாதென்றுள்ளங்கரைந்திறைஞ்சிற்
பொருவருந்தங்கமலைபோலுங்குன்றைப்புராதனனை
யிருவருந்தங்கடலையாலிறைஞ்சுமிறைவனையே.

(இ-ள்.) பொருவரும் தங்கமலை போலும் குன்றை புராதனனை- ஒப்பில்லாத மேருமலையைப்போலும் (உயர்ச்சிபெற்ற) பழமலைநாதரும்—இருவரும் தங்கள் தலையால் இறைஞ்சும் இறைவனை - பிரமவிட்டுணுக்களாகிய இருவரும் தங்களுடைய சிரங்களால் வணங்கும் முதல்வருமாகிய சிவபெருமானை,—கரு வருந்த அங்கம் நிலையாது என்று உள்ளம் கரைந்து இறைஞ்சில் - கருப்பாசயத்திலே துன்பத்தையடைந்துபிறக்கும் இச்சரீரம் நிலையல்லவென்றறிந்து, மனமுருகி வணங்கினால்,—திரு தங்க வரும் - சிதேவி தங்கும்படி வந்து சேர்வள்;—கல்வி மாது தங்க வரும் - கலைமகளும் தங்கும்படி வந்து சேர்வள்;—சிறப்பு தங்க வரும் - முத்தியும் நிலைபெற வந்து சித்திக்கும். எ-று. தங்க என்பது இடைநிலைத்தீபகமாக ஏனையிடங்களினும் கூட்டப்பட்டது. பழமலைநாதரை வணங்கில், இம்மையிலே கல்வி செல்வங்களையன்றி தேகாந்தியத்திலே முத்தியுஞ் சித்திக்குமென்பது கருத்து. (க)

இறைக்குவளையுமிளங்கிள்ளையுமழகென்பவர்சேர்
துறைக்குவளையுமெனமும்வாவிக்குத்தூயவிதழ்
நறைக்குவளையுமழகாமுதுகிரிநாதர்க்கின்றிப்
பிறைக்குவளையுமுடல்வந்தவாறென்கொல்பேசுகவே.

(இ-ள்.) இறைக்கு வளையும் இளம் கிள்ளையும் அழகு என்பவர்- கைகளுக்கு வளையலும் இளமையாகிய கிளிப்பிள்ளையும் அழ

காரும் என்று சொல்லப்பட்ட மகளிர்கள் சேர்ந்து விளையாடா நின்ற—துறைக்கு வளையும் எகினமும் - மணிமுத்தநதித் துறைகளுக்குச் சங்குகளும் அன்னங்களும்—வாவிக்கு துய இதழ் நறை குவளையும் அழகு ஆம் - தடாகங்களுக்குத் தூய்மையாகிய மடலையுடைய தேன்பொருந்திய செங்கழுநீரும் அழகாக அமைந்திருக்கின்ற—முதுகிரிநாதர்க்கு வளையும் உடல் இன்றி - பழமலைநாதராகிய இவ்விருத்தருக்குக் கூனியவுடலம் இல்லாமல்,—பிறைக்கு வந்த ஆறு என பேசுக-(இந்த) இளம்பிறைக்கு (கூனியவுடலம்) வந்தகாரணம் யாது? சொல்வீராக. எ-று. [இது பழமலைநாதர் பவனிவரக்கண்டு மால்கொண்டுநின்ற மகளிர் ஒருவரையொருவர் வினவியது.] இறை கைவிரலின் சிற்று. அது கையை யுணர்த்தலின் ஆகுபெயர். என்பவர் என்பதில் செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும் படுவிகுதி தொக்கது. கொல் அசைநிலை. (உ)

பேசுகவீரவருநாளென்றொல்லைப்பெருங்கடல்சே
ராசுகவீரபழமலைவாணவென றன்பளைந்து
பூசுகவீரமதிவேணிநீற்றைப்புலவிர்பிறர்
[illegible]வலையுகவீர்மெய்க்கதிதருமே.

(இ-ள்.) புலவிர் - புலவர்களே,—ஈர வருநாள் என்று - (இயமன் வாளினால்) அரிய வருங்காலம் (இதுவே) என்று கருதி,—பெருங்கடல் சேர் ஆசுக - பெரிய பாற்கடலினிடத்தே தங்கிய பாணத்தையுடையவரே,—வீர - வீரரே,—பழமலை வாண - முதுகுன்றத்தில் வாழ்பவரே,—என்று ஒல்லை பேசுக - என்று விரையத் துதிப்பீராக.—ஈர மதி வேணி நீற்றை அன்பு அளைந்து பூசுக - குளிர்ச்சியையுடைய சந்திரனைத்தரித்த சடைமுடியையுடையவரது விபூதியை அன்போடு கலந்து தரிப்பீராக.—பிறர் காசு உகவீர் அவலை உக

சீரியமோனச்செழுங்கனியேசெம்பாகே
கூரியவேற்கைக்குமரகுருமாமணியே. (௧௭)

மணியேமணிவிளக்கேமலையமுனிவற்கருளு
மணியேயெமையுமின்றாட்கொண்டாலாகாதோ
எணியேயுருகுநருக்கின்பசுகமேவிடங்கொள்
பணியேபுனையும்பரனுதவும்போரியனே. (௧௮)

போனகஞ்சுண்டபுராரிக்கன்றுமொழியில்
ஆனபொருணவின்றவாறிரண்டுதோளானே
வானமுதேபோரிநகர்வாணனேயென்றுநினை
யானறிவிற்கண்டின்புறுவேனோவெம்மிறையே (௧௯)

இறைநிலையுமென்னிலையும்யான்கண்டிறுமாக்க
முறையினுணர்த்துவையோமூவிரண்டுமாமுகனே
குறையகன்றோருள்ளங்குலவுஞ்சமரபுரி
யுறையுங்கருணையொருபரமசாகரமே. (௨௦)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கரிசுலாங்கொடும்பவக்கடற்கணோர்துரும்பெனு
விரவிநின்றுமாழ்கினேன்வியந்துனைப்பணிந்திடேன்
கருதியென்னையாள்வையோகனிந்துபோரியாண்டவா
புரிவதென்னைபுரிவதென்னைபுரிவதென்னைபுந்தியான். (௨௧)

புங்கமானபோகமேபுராந்தகன்பயந்திடுஞ்
செங்கைவேற்கரத்தினாய்செகத்தினின்றுமாழ்கினேன்
கங்கைமைந்தபோரியாய்கடவதொன்றுமோர்ந்திலேன்
எங்குசெல்வதெங்குசெல்வதெங்குசெல்வதெந்தையே. (௨௨)

செல்லணைந்திடும்பொழிற்செயந்திமேவுகந்தனே
நல்லவன்பர்நாடுபோரிநகரமர்ந்தசெல்வமே
தில்லைமன்றிலாடுவோன்றிருப்புதல்வநின்சரண்
புல்லுவேன்கொல்புல்லுவேன்கொல்புல்லுவேன்கொல்போதனே. ()

போதன்மாலுணர்ந்திடாப்புராரிவார்செவிக்கணே
வேதவாய்மையோதுபோரிமேவுமாதிகாரணா
மாதரார்மயக்ககன்றுன்வார்கழல்வணங்கிடேன்
ஏதுசெய்வதேதுசெய்வதேதுசெய்வதேழையே. (௨௪)

செய்வதொன்றுமோர்கிலேன்றிருவருட்புறத்ததா
மைவிளங்குகண்ணினார்மயக்கமெய்திமாழ்கினேன்
ஐயநின்னருட்பெருக்களித்திபோரியண்ணலே
யுய்வனேகொலுய்வனேகொலுய்வனேகொலுண்மையான். (௨௫)

உண்ணயந்தவன்பரோத்துகந்தபோரிமாநகர்
நண்ணுசேவலங்கொடிநலத்தநின்னருளினான்
மண்ணிலேபிறந்தைதீர்ந்துமம்மர்நீங்குவேன்கொனின்
எண்ணமென்னையெண்ணமென்னையெண்ணமென்னையிங்கரோ. ()

என்னினின்னைநின்னிலென்னையேழைகாண்கிலாதியண்
பொன்னைமாதரைப்புவித்தலந்தனைப்பொருளெனா
உன்னிமாழ்கினேன்றென்போரியோங்குவேற்கரத்தனே
என்செய்கிற்பதென்செய்கிற்பதென்செய்கிற்பதீசனே. (௨௭)

ஈவதென்பதொன்றிலேனேரின்சொலேனுமோதிலேன்
பாவகாரியரலார்பராவநின்றபோரியாய்
காவினானினாதுநாமநானுரைக்கவல்லனோ
தேவதேவமதவதேவதேவதேவதேரினே. (௨௮)

தேன்செறிந்தசெங்கடம்பணிந்ததிண்புயத்தனே
வான்பராவுபோரியாய்வயங்குவேற்கரத்தினாய்
கான்செய்கூந்தலார்மயற்கடற்படிந்தழுந்தினேன்
யான்செய்பாவம்யான்செய்பாவம்யான்செய்பாவமெந்தையே. (௨[illegible]

பாவகங்கடர்துநின்றபண்பநின்கழற்பதம்
தூவிமாமலர்கொடுதுதித்திடேன்சொலற்கருந்
தூவிமாமயிலினாய்துலங்குபோரிவாழ்க்கையாய்

## திருப்போரூர் ஆண்டவர்

### கலிவிருத்தம்.

ஐயநின்றனடி மலர்க்குப்பணி
செய்யநாடிலன்செய்வதறிந்திலேன்
மையணவுபொழிற்போரிவாழுயிற்
கையனேகந்தனேகங்கைமைந்தனே. (௯௧)

கங்குலும்பகலுங்கந்தவென்றியான்
செங்கையான்மலர்தூய்ச்சிந்தனைசெய
இங்களக்கருமின்பமருளுவாய்
அங்கணுசமராபுரியண்ணலே. (௯௨)

அண்ணன்மாதராறுவர்முலையுண்செவ்
வண்ணவாயமலிதிருப்போரிய
கண்ணிணுனினைக்கண்டுவணங்கிடுந்
தண்ணருள்செய்தயாவுருவத்தனே. (௯௩)

அத்தனேயருளாளவொராறிரண்
டத்தனேசமராபுரியையனே
நித்தநின்னடிநேயமளித்தியால்
சுத்தனேமயிலூர்ந்திடுஞ்சோதியே. (௯௪)

ஊரும்பேருமுருவுமிங்கொன்றிலாப்
போரிமேவியபுண்ணியனேநினைப்
பாரிலேத்திடும்பண்பினர்தாண்மலர்
நாரினேத்துவஞேசுகநாடனே. (௯௫)

நாடருஞ்சுகவாழ்வினைநாடிலேன்
தாடலைமிசைவைப்பதென்றோதமிழ்க்
கூடலாய்பரங்குன்றுடையாயிசை
நீடுபோரிநிலாவியவையனே. (௯௬)

ஐயமின்றியறங்கடவாதவ
ருய்யவொண்கதிர்காமத்திலோங்கிய

மெய்யநின்றனை மேவுவனோசொலாய்
வையநாடெழிற்போரிவரதனே. (கஎ)

வரிவிழிமடவார்வஞ்சனைக்கிவ
ணுரியனாய்க்கழிந்தேனுனைநாடிலேன்
குரவுநீள்பொழிற்குன்றுதோறுடிய
பெரியபோரிபிறங்குங்குமரனே. (கஅ)

பிறந்தைபற்பலவெய்திப்பெரிதுனை
மறந்தடைந்தனன்மாமணித்தீபமே
துறந்தவர்க்கருள்தொல்சமராபுரி
யறந்தவாதவருட்பெருவாரியே. (கக)

வாரமாயுனைவாழ்த்தியடைந்திடேன்
போரிவாணபொருவருஞ்சூரநிட்
டூரயானுன்றுணையடியோதுமா
வீரவேலவிரைந்தருள்செய்தியே. (உ0)

கலிநிலைத்துறை.

செய்யாளுறையுஞ்செங்கமலத்தண்டடமல்கும்
ஐயாறுடையாயார்வமிலாதாரறியானே
ஐயானனனுக்கருளும்போரியம்மானின்
கையானின்னைக்காட்டுவதென்றோகரிசேர்த்தே. (உக)

கரியானனத்தான்பின் வருகருணையனேநிற்
பரசாநிற்போருள்ளத்தவிசிற்பரிவாயோங்
கரசேயென்றுநாடலிலாதிங்கலமந்தேன்
தனைநாடியதென்போரியில்வாழுந்தக்கோனே. (உஉ)

வாழ்வாவதுமாமாயமதென்னமனத்தோரான்
தாழ்வேசெய்துகழியாநின்றேன்தமியேனுன்
பாழ்வேதனையாற்றுயர்நின்றேன்வெம்பவவேலை
யாழ்வாரியாச்சமராபுரிவாழம்மானே. (உங)

மானேநல்குமடமான்வள்ளிமணவாளா
ஞானகரனேசமராபுரிவாழ்நலத்தானே
யானுமொமதார்பாசமதாமொன்றிவனோரா
தானேனந்தோவெனசெயவல்லேனரியானே. (௪௪)

அரியார்கமலவாவிகள்சூழுமணியாரூர்க்
குரியாயென்னையுடையாய்போரூருடையானே
கரிசேசெய்துதிரிதருகின்றேன்கடையேனெங்
குருமாமணியேகுஞ்சரிநாடெண்குணத்தோயே. (௪௫)

குலமேபொல்லேன்குறியும்பொல்லேன்குணம்பொல்லேன்
நலமேபொல்லேனுன்னடிஞானநாடாதேன்
நிலமேயேத்தும்போரியினாயென்னினைகிற்பேன்
சலமேசூடுமாதிபுராணன்றருவானே. (௪௬)

தருவேயென்றுபுல்லரைநாடித்தமிழ்பாடித்
திரிவேனெந்தாயுன்னடியாரைச்சேராது
பெருமானுற்றேனென்செயவல்லேன்பெருமானே
திருவாழ்போரிமாநகர்மேவுஞ்செவ்வேளே. (௪௭)

வேளையெரித்தோன்காதினில்வேதம்விரித்தோய்கூ
தாளமுடிக்குறமாதுமணந்ததக்கோயிவ்
வேளையெழிற்சமராபுரிமேவும்வரமீந்துன்
றாளிணையுன்னுஞானமதன்பிற்றருவாயே. (௪௮)

தந்தமுன்னைக்கொ[illegible]மென்னைத்தணியானே
செந்திநகர்ச்சிந்தாமணியேசிற்சுகபோதா
அந்தமிலின்பத்தாரமுதன்பர்க்கருள்வானே
தந்திதிரிந்திடுசாரற்போரித்தணிவாழ்வே. (௪௯)

தண்டமிழாவினன்குடியாய்தென்றணிகேசா
கொண்டனிறக்குறண்மான்மருகோனேகுமரேசா
அண்டர்தொழுஞ்சமராபுரிவாழுமருளாளா
தொண்டெனநின்றாட்கென்றுகொள்வாய்துணியேனே.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தண்டமாமதிச்சடையவன்விடையவன்சுந்தரன்றொலைவில்லான்
அண்டர்நாயகன்றனக்கருமறைப்பொருளருளியவருளாளன்
எண்டிசாமுகந்தொழுதெழும்போரியானெம்மிறையெனநாடித்
தொண்டுசெய்பவர்க்கிருவினைப்பாசங்கடுயர்செயத்தொடராவே. ()

தொல்லையாம்வினைக்கட்டறுத்தாண்டருள்சோதிவேற்கரத்தெம்மா
னல்லவில்லெனக்கொண்டொருமுப்புரங்கனற்றுவோன்றருகானை[ன்
னல்லையில்லதோரின்புதவிறையவனெழில்குலாந்திருப்போரி
மல்லன்மாநகர்வாழ்குகனடிமலர்மறுதுநின்றுழனெஞ்சே. (௫உ)

நெஞ்சமேயிதுவஞ்சமேயன்றுகாணிவைப்பொமெறப்பற்றுக்
கஞ்சனுதியாபணிபதன்காஙகெயன்கழலிணைமறவாமற்
றஞ்சமென்றவனடியவர்சார்பினைச்சார்ந்துநின்றிடுகண்டாய்
வெஞ்சழக்கொழிந்திடும்பராளந்தமாம்வேலையிற்படிவாயே. (௫௩)

படியிலாணவத்தொடக்கினுன்வருந்தினேன்பணிவொடுநினையெய்து
மடியரானவர்க்கன்புசெய்தொழுகிலேனையவென்புரிகிற்பேன்
கொடியனுயினேன்குன்றினைவேவினுற்குமைத்திடுந்தென்போரி
யடிகணின்றிருப்பதியெலாமணைகிலேனறிவிலாச்சிறியேனே. (௫௪)

சிறுமைசெய்துழல்கின்றனனின்கழற்சீறடித்தொழும்பேசெய்
முறையிலேனினைக்கருத்தினுற்பணிசெயேன்முருகதென்றிருப்போரி
யுறைதருங்குகசேந்தவென்றுனையுன்னியுலப்பிலாவானந்தம்
பெறுகிலேன்மணிற்பிறந்துநின்றுழனைபேதையென்கடவேனே. ()

கடவதொன்றிலேனெஞ்சமேபோரிவாழ்காங்கெயன்பூந்தாட்கே
யடிமைசெய்கிலேனுன்மறையந்தங்களரற்றியபொருளோரேன்
விடியுமோபிறப்பென்றுநீகருதிடேல்விண்ணவர்பெருமானைக்
கடியசெங்கடம்பணிபுயாசலன்றனைக்கந்தனையடைவாயே. (௫௬)

அடையலார்புரமட்டவற்கோமொழியருளியபெருமானை
மடையில்வாளைகள்பாய்ந்திடும்வயல்செறிமயிலைமாநகரானைப்

படைநெடுங்கணூராட்டயர்போரியம்பரன்றனைப்பரிவோடு
மடைதிநெஞ்சமேபரசுகோததிபெறற்கஞ்சுவதென்னேயோ. (௫

என்னையாண்டவனரிப்பிரமாதியரோத்திடுமருளாளன்
தன்னையேயடியார்க்கருள்குகப்பிரான்றணிகைமாமலைவாழ்வோன்
தென்னவன்றிருநாட்டினுக்கணியெனச்செறிசெயந்தியிற்கந்தன்
பொன்னடிக்கமலந்தொழுநெஞ்சமேபுலைநரகடையாயே. (௫௮

நரலைவேலைசூழ்புவிவயிற்செல்வரைநாடியங்கவாக்கின்சொல்
விரையவோதிநின்றுழன்றனைநெஞ்சமேவிண்ணணைமணிமாட
நிரைகுலாந்திருவேரகப்பதியனைநெடியவேற்கரத்தானைக்
குரவணிந்ததாட்குழகனைப்போரிவாழ்குமரனையடையாதே. (௫௯

குமரனைக்குன்றுதொறும்விளையாட்டயர்குருந்தினைக்கொலைவேற்கை
யமரனைக்கச்சிமாவடிமேவியவண்ணலையடற்சூரைச்
சமரினிற்செற்றசண்முகன்றனையெழிற்சந்தனுசலத்தானைச்
சிமையமார்சிகரித்திருப்போரியிற்சென்றரில்களைவாயே. (௬௦)

எழுசீர்க்கழிநெடில்டியாசிரியவிருத்தம்.

அருவாகநிற்றியுருவாகநிற்றியகிலாண்டமாகநிற்றி
தெருளாகநிற்றி மருளாகநிற்றிசெயலற்றவன்பருளமே
மருவாதியம்பகவனாகநிற்றிமயிலேறுமெங்களிறையே
குருவாகநிற்றியொருபோரிமேயகுழகாவென்றேவுணர்வதே. (௬௧)

ஓத்திற்பொலிந்தபொருளே[illegible]க்குமுயரும்பருக்குமரியாய்
கூத்தைக்குயிற்றுமரனுக்கில்[illegible]துகுடிலைக்கருத்தமருள்வோய்
வேத்திற்சிறந்தபுனனாட்டிறைக்குவியனின்பநல்குமேந்தால்
தூத்தண்பொழிற்சமரமாபுரத்தஅரிசெற்ககற்றல்கடனே. (௬௨)

கடமாலியானையைக்காத்திலங்குகரியோன்பராவுமுதலே
வடவாலினீழலொருதேவினுக்குமறையுண்மைநல்குமமுதே
குடமாமுனிக்குமலமோசனஞ்செய்குழகாவெனப்பரசிடேன்
அடிஞானமீதிதிருவாளபோரியமர்கின்றவேற்கையரசே. (௬௩)

வேலாலெறுதுபவவேலைவாரிவிடியப்பரிந்துனருள்செய்
தாலாதனேனுமுய்வேனகண்டசுகநல்குமன்பினுருவே
சேலார்வயற்சமரமாபுரத்தசிலைமாதுமைந்தமறையின்
மூலாகடம்புபுனையும்புயத்துமுதல்வாசரண்சரணமே. (சுச)

சலமேவிளைத்தபுலவேடர்செய்சர்ப்பனையாள்மெலிந்துதிரிவேன்
நலமேகிளர்ந்தநினதன்பர்சார்புநணுகாதுழன்றலைகுவேன்
தலமேபராவுசமராபுரேசதமியேனையாண்டருளுவாய்
இலமோவுநல்லநெறியாளர்நாடுமிளையோயெனுதகுருவே. (சுரு)

குருவானகோலமதுகொண்டெனுதுகுறைதீர்க்கவேண்டுமொருவெங்
குருவேந்தவள்ளிமணவாளவன்புகுடிகொண்டமெய்யர்பரசும்
பரசேவலர்த்துவசபோரிமேவுபண்பாநினைக்கருதுவான்
வரமேயளித்திவடிவேற்கரத்தமலையான்மகட்குமகனே. (சுசு)

மகவான்மகட்குமணவாளகந்தவரையாயெவர்க்குமுரியாய்
சிகிவாகனத்தசமராபுரேசசெழுமாநகிக்குமதலாய்
நகநாடியாடல்புரிகின்றவேலநளிமாதிரமபணிசெயுஞ்
சுகவாரியேகருணையாளவன்புதுதைநெஞ்சநல்கல்கடனே. (சுஎ)

நெஞ்சாலயத்தினுறைகின்றநேயநிலையாகவனபுசெயுமா
எஞ்சாதநல்லவருணல்கவேண்டுமிமவான்மகட்குமதலாய்
கஞ்சாதனன்றனைக்குட்டியன்றுகழலிறகொடுந்தளையிடு
மைஞ்சாவிகங்கதுவசனபராவுமலிபோரிமாநகரனே. (சுஅ)

நடலைப்பிறப்பிணிவணேங்கிநின்றுநலிகின்றதுன்பமறிவாய்
சுடலைப்பொடிப்பரமனுக்குமோனசுகநலகுதெய்வவமுதே
குடிலைப்பொருள்விளைவயன்றுமுன்னுகுறுமாமுனிக்குதவுவோய்
குடிலததரோதுசமராபுரேசகொடியேனையாண்டருள்வையே. (சுகூ)

வைவேற்கரத்துமணியேசிவானுபவவஞ்சமோனவெளியே
மெய்வாழ்வுநாடுமடியார்மனத்துயிளிர்கின்றசோதிவடிவே
உய்வேன்கொனின்னதருளன்றியென்னையுடையாயெனக்கருளுவாய்
மைவாகனத்தமதிசூடிமைந்தவளர்போரிமேவுமரசே. (எ0)

வஞ்சிவிருத்தம்.

அருணயந்தவன்பர்தாழ் - குரவநின்குரைகழல்
பரவவேபணித்தருள் - விரவுபோரிவேலனே. (எக)

வேலபோரிவேந்தநின் - சீலநாடுசிந்தனே
பாலியாதபான்மையே - வாலைநல்குமைந்தனே. (எஉ)

மைந்தபோரிவாழ்ந்தருள் - கந்தநின்கழலிணை
சிந்தைசெய்யவல்லனோ - வெந்தையின்றியம்பிடே. (எங)

ஏதிலேனினின்னருட் - போதமெய்திடப்புகல்
நீதபோரிநின்மலச் - சோதியாந்துணைவனே. (எச)

துணையெனக்குன்றாயதா - ளிணையலாதுவேறிலேன்
கணைவிழிகுறக்கனி - நணியபோரிநாதனே. (எரு)

நாதநின்னைநாடினேன் - ஏதமிங்கிரித்திடாய்
ஆதிமைந்தவன்பினால் - நீதபோரிநிமலனே. (எசு)

நின்னையன்றிநீடுணை - அன்னையேயடைந்திலேன்
மன்னுபோரிவாழ்க்கையா - யென்னையாளுமீசனே. (எஎ)

ஆளவேண்டுமன்பினிவ் - வேளைபோரிவேலினாய்
தாளையீந்துசங்கரன் - காளையானகந்தனே. (எஅ)

காவிளங்குகாழியாய் - பூவிளங்குபோரியாய்
பாவளம்பரிந்தருள் - தேவிளங்குசேந்தனே. (எகூ)

சேந்ததெய்வதப்பிடிக் - காந்தநின்கழலிணை
சார்ந்திடத்தனித்தருள் - வேந்தபோரிவேலனே. (அ0)

கலிவிருத்தம்.

வேலநின்னடித்துணையைவேண்டுவேன்
பாலலோசனன்பயந்தமைந்தனே
சீலநாடிலேன்செல்வப்போரியாய்
கோலமாமயிற்குரக்ததந்தனே. (அக)

குரவுதாளிணைக்குமரநாதனே
திருவநீள்செழும்போரியாண்டவா
அரவவெற்பினையாடல்கண்டனை
கரவிலாதுனைக்காட்டவேண்டுமே. (௮௨)

வேண்டுவேனினிவிரகதின்றிநிற்
காண்டலென்றியான் கருதிநின்னையே
தேண்டுவார்க்கருடெய்வப்போரியெம்
ஆண்டவாபுரிந்தடைந்தபான்மையால். (௮௩)

ஆலினீழலிலறமுரைத்திடுங்
கோலமேனியான்குரவபோரியாய்
நீலமாமயினிலவும்வேலநின்
பாலதாமன்புபரிவினீதியே (௮௪)

ஈகையேயிலேனெந்தையெம்பிரான்
நாகபூடணனல்குமைந்தனே
மாகமோங்குநன்மாடப்போரியாய்
சோகமேதுடைத்தாளவேண்டுமே. (௮௫)

ஆறுமாமுகத்தண்ணல்போரியாய்
நீறுபூசியவிமலநின்னடிப்
பேறுவேண்டுவேன்பேதையேன்றனக்
கூறுதீர்த்தியாதுலப்பில்சோதியே (௮௬)

சோதியேயெனைத்தூயபோரியாய்
வாதியாவகைவஞ்சவல்வினை
தீதியாவிவணேடியாளுவாய்
கோதிலாதவெண்குணநிதியமே. (௮௭)

நின்னைநாடுவார்நெஞ்சமேவினாய்
கன்னிமாதுமைகனிவினலருள்
பொன்னின்மாடமேயொலியும்போரியாய்
என்னையாளுவதென்றுதானரோ. (௮௮)

என்றுகாண்கிலேனென்னையாள்வது
நன்றுபோரியாய்நாதநின்னடி
யொன்றுமெய்யருளோங்கவேயருள்
துன்றுசோதியேதுயர்ந்திடாமலே. (அ௯)

துன்பிறுற்றுயர்கின்றகீரனுக்
கினபநன்னிலையீட்டும்போரியாய்
அன்புவேண்டுநின்னடிமலர்க்கணே
என்றுவேண்டுவேனென்றுமிங்கரோ. (௬௦)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எல்லை யில்லதோ ரின்ப மெய்துவா னீண்டுனைத் தொழும் பேபுரிந் திடும், செல்லு லாம்பொழி லருணை வெற்புடைச் செல்வர் நினைனனு பூதி யோதிட, வல்லை வந்தருள் செய்த செய்யவேல் வலத்தி னேந்திய வள்ளல் போற்றியோ, வலவெலுந் தனத் தையை றனகரம் வழங்கு போரியின வாண போற்றியே. (௬௧)

போற்றி யெம்பிரான் போற்றி வெங்குருப் புனிதனுய்க் கொடுஞ் சமணை மாசறுத், தேற்ற மேவுவை திகசை வந்தனை யிங்க ளுட்டிய வெந்தை போற்றியென், தோற்றமே கெடுத தாண்ட போரியாய் தொடிக்கை வள்ளிதன் றுணைவ போற்றிமுன், கூற்று தைத்தவற் கருளு மாறிரு குலவு தோளிறுய் போற்றி போற்றியே. (௬௨)

போத மேவடி வாந்த ருமையான் போற்று செந்தமிழ்க் குதவி செய்திடும், நாத போற்றியெங் கோன் சிற்றம்பல நாடிகட் கனு பூதி நல்கிய, கோதி லாதவா னந்த வாரியாங் குழக போற்றிநல லழக போற்றியெம், மாதி போற்றிதென் போரி மேவிய வண்ணல் பன்னிரு கண்ண போற்றியே. (௬௩)

கண்ண கன்புவிக் கருள்பு ரிந்திடுங் கையி ராறுடைக் கந்தவானவர், விண்ண டைந்திடப் புரியும் வெற்றிவேல் வீரபோற்றியு தார போற்றிமுக், கண்ண னுக்ககத் தியனுக் கோமொழி கனிவி னோதி

்ளே போற்றிசெவ், வண்ண போற்றிதென் போரிவாழிய வரத தமிழ் விரக போற்றியே. (கச)

விபுதர் தம்படைக் கிறைமை மேவிய வேல போற்றிசெங் கோ பாற்றிநல், விபமுகத் தவன் பின்னு திசதிடு மெம்பிரா னடிக் க ் போற்றியெற், கபய நல்கிய வையன் போற்றியெம் மாருயிர்க் ரு துணைவ போற்றிமெய்ச், சுபமெனப்படுக் தரிய போரியிற் ்று மாதியஞ் சோதி போற்றியே. (கரு)

சோலை சூழ்பரங் குன்ற போற்றிபைந் ோகை மாமயில் விட பாற்றியெக், காலு நாயினேன் சென்னி மேற்சுழற் கமலஞ் சூட் சருணை போற்றிநல், வாலை யார்வமோ டுதவு செங்கனி வாய ற்றிய பாய போற்றியன், ஞாலை காட்டியாட் கொண்ட வீசனுக் மை காட்டுபோ ரூர போற்றியே. (கசு)

ள்ள நல்லவர் நாடுசெந் தில்வா ழொருவ போற்றிதென் ஞவி குடி, வள்ளி யோய கழல் போற்றி யேரக மருவு கார்த்திகை ்த போற்றியுட், கள்ள மேயிலா ருள்ள மேயெனக் கருதி மா தோறு மாடல்செய், விள்ளொ ணுச்சுக வாரி போற்றி மெய் க்குபோரிவி சாக போற்றியே. (கஎ)

வில்லெ னச்சிலை கொண்ட வேதியன் வேதன் மாலெனும் வி நாடியே,யெல்லை யில்சுக மெய்தருஞ் சோலைவெற் பிறைவ ்தன் றணிகை மேவிய. மல் [illegible] றுவல் வ ் கொளு [illegible] யப

புந்தி நைந்துனைந் துருகு மாறெனுட் போத நின்றபுண் ணிய சொரூபவம், புந்து கண்ணியர் மையன் மேவிடா துன்ன டிக்கமே யன்பு செய்யுமா, சிந்தை செய்தசிற் சொரூப போற்றியெஞ் சிதம் ரப்பெரு முனிவ னுக்கருள், கந்த போற்றிபோ ரூரின் மேவிய கட வு ளேறுசீர்க் கழல்கள் போற்றியே. (க00

## பதிற்றுப்பத்தந்தாதி முற்றிற்று.

---

## நேரிசைவெண்பாக்கள்.

அஞ்சக்கரத்தானுமஞ்சக்கரத்தானும்
அஞ்சக்கரத்தானுமாயகிலார்—நெஞ்சி
லரணென்றெழிற்போரூராண்டவனெங்கோமான்
சரணமலர்வாரிசம்.

அஞ்சுவணத்தானுமஞ்சுவணத்தானும்
அஞ்சுவணத்தானுமாய்ந்தறியார்—கஞ்சமலர்
மாண்டசெழும்பொய்கைமலிதென்றிருப்போரூர்
ஆண்டவன்றன்செம்பொனடி.

ஸ்ரீ மெய்கண்டதேசிகன் திருவடிவாழ்க.

ஸ்ரீ சிவஞானயோகிகள்
சேவடிவாழ்க.

கரு

போத ருமையான
செயதிடும, நாத றறியெங கோன சிறறமபல ந .
நலகிய, கோதி லாதவா ளாந வாரியாய குழக போறறிந ழைக
போறறியெம், மாதி போறறிதென் போரி மேவிய வணண ப பணமி
ரு கனண போறறிய. (கசு)

கண்ண கணபுவிக கருள்புரிநதிடுங சையி ராறுடைச கநதவா
னவா, விணண டைந்திடப புரியும வெற்றிவேல் விரபோறறியு தா
ர போறறிமுக், கணண ஜுககதத தியனுக் கோமொழி கனியி ரேறி

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

மயிலைபாதி - வான்மியூர்பாதி

# கலித்துறையந்தாதி.

இது

தமிழ்ப்பண்டிதர்

மா-ா-ஸ்ரீ வல்லை - ப. தெய்வநாயக முதலியாரவர்கள்

மாணாக்கர்

திருவல்லிக்கேணி அரிசிமண்டி

கா. ஆறுமுக நாயகரவர்களால்

இயற்றப்பட்டு

ஸ்ரீ சர்வசித்திவிநாயக பக்தஜன சபையார்களால்

திருவல்லிக்கேணி மண்டி

திருவல்லம் - மு. கோவிந்தசாமி செட்டியாராலும்

ஷை யூர் அரிசிமண்டி

பட்டை - வீ. இராஜு செட்டியாராலும்

சென்னை: ஜோதா அண்டு கம்பெனி யென்னும் "ப்ரீமியர்"

அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

குரோதி௵ மேஷரவி.

திருச்சிற்றம்பலம்.

மயிலைபாதி - வான்மியூர்பாதி

# கலித்துறையந்தாதி.

இது

தமிழ்ப்பண்டிதர்

ம-௱-௱-ஸ்ரீ வல்லி - ப. தெய்வநாயக முதலியாரவர்கள்

மாணாக்கர்

திருவல்லிக்கேணி அரிசிமண்டி

கா. ஆறுமுக நாயகரவர்களால்

இயற்றப்பட்டு

---

ஸ்ரீ சர்வசித்திவிநாயக பக்தஜன சபையார்களில்

திருவல்லிக்கேணி மண்டி

திருவல்லம் - மு. கோவிந்தசாமி செட்டியாராலும்

ஷை யூர் அரிசிமண்டி

மட்டை - வீ. இராஜு செட்டியாராலும்

சென்னை : ஷோ அண்டு கம்பெனி யென்னும் "ப்ரீமியர்"

அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

சிவமயம்.

# சாற்றுக்கவிகள்.

செந்திலாண்டவன் திருவடி துணை.

இஃது திரிசிரபுரம் - பிரம்மஸ்ரீ

திரு-சிவாநந்தசாகர யோகீஸ்வரர் அவர்கள் இயற்றிய

கட்டளைக்கலித்துறை.

*சீரார் மயிலை திருவான்மி யூரமர் செல்வ னிசைத்*
*தாரரா கலித்துறை யந்தாதி செய்தொன்று தந்தனனால்*
*காரரா ணவப்பகை சாய்த் தருளீசன் கழலி னன்பு*
*தீராத வாறு முகநா யகன் பத்தி செய்பவர்க்கே.*

இஃது சென்னை இந்துதியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

கோ - வடிவேலு செட்டியா ரவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

*மாறு பாட்டையறவொழித்து மனத்தாம ரைக்கண் மங்கை பங்கன்*
*வீறு கொண்ட வடிநிறுவி மெய்யன் புருவாய் விளங்குவான்*
*பேறு சிவமேயெனத் தெளிவான் பிறழா மதியான் புலன்கள்செலு*
*மாறு செல்லா வறிவாள றுமுக னென்பே ருடையான்.*

*எல்லா நலமுமடி யவருக் கீயும் பொருட்டு மயிலையுமே*
*பொல்லாப் பிறப்பை நீக்குதற்குப் பொலிவார் வான்மியூ ரையுமே*
*இல்லாக் கொண்ட வீசன்மே லினிமை யமையப் புலமைநிறை*
*நல்லார் போற்றக் கலித்துறை யந்தாதி நவின்று னலமுற்றான்.*

இஃது தஞ்சாவூர்

ஸெண்ட் பீடர்ஸ் காலீஜ் தமிழ்த்தலைமை உபாத்தியாயர்

பிரம்மஸ்ரீ அ. சேதுராம பாரதியாரவர்கள்

மாணாக்கராகிய

தி-முத்துராம பிள்ளை யவர்களியற்றிய

விருத்தம்.

*சீர்பரவு மயிலையொடு வான்மியூர் மேவியமர் சிவபிரான்றன், சீர்பரவு மிணைமலர்த்தாட் கிசைத்திட்டான் கலித்துறை யந்தாதி யொன்று, பார்பரவும் பத்திவை ராக்கியமொடு நற்குணமும் பரந்து மேவோன், நார்பரவு மாறுமுக நாயகனுஞ் சைவமெனு நலமிக் கோனே.*

இஃது

தமிழ்ப்பண்டிதர்

வல்லி-ப-தெய்வநாயக முதலியா ரவர்களியற்றிய

## நிலமண்டில ஆசிரியப்பா.

தண்டமிழ்த் தலைமை தைய லௌவையார்
தொண்டை நாடு தோமிலாச் சான்றோர்
வதியும் பதியென வகுத்த துண் மயிலைத்
துதிபுரி யூரிற் சுந்தர விடங்கன்
சங்கரன் சம்பு தயையுடை நிமலன்
மங்கை பங்கன் மான்மழு வுடையோன்
மண்முதல் போற்றும் வரதன் பகவன்
கண்ணுதல் மறைமுதல் கபாலி கறையறு
நந்து மலவ னயம்பட வுறையுஞ்
சிந்து நெருங்கு செய்சூழ் வான்மி
யூரிற் றனியி லுமையமை யோடுஞ்
சேரும் புனிதன் செய்ய கமலக்
கண்ணார் விண்டுங் கதிபெறச் சுரரும்
அண்ணா வெனவே யஞ்சலி கூப்பி
நாற்றிசை யோரும் நயந்து வந்துருகிப்
போற்றிப் பணியும் புகழ்மருந் தீச
ராகிய விவருக் ககமகிழ்ந் தன்பன்
பாகிய நெறிசெலாப் பகளறு சீலன்
பக்தியின் மிக்கோன் பணிமொழி யுடையோன்
நத்திறத் தவரை நாடும் நடையோன்
நன்னூ லுணர்ந்தோர் நன்குவந் தெண்ணும்
பன்னூ லுணர்ந்தோன் பதியிய லறிந்தோன்
அந்தாதி யில்லா னருள்பெற் றுங்கன்
அந்தமில் பேற்றை யடைந்திடு மாறு
கலித்துறை யொழியக் கவினுறக் கட்டளைக்
கலித்துறை யாலந்தாதிக் கழறினன்
மாறு முகங்கொளா மாட்சிமை வாய்ந்த
ஆறுமுகனெனு மான்ற நாவலனே.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மயிலைபாதி வான்மியூர்பாதி,

# கலித்துறையந்தாதி.



## விநாயகர் காப்பு.

திங்கடவ ழூஞ் சோலைதனிற்றிகழு மாடந் தொறு மிளைத்து
மங்குறவழூந் திருமயிலை மன்ன னடியிற் படிந்துவயற்
சங்கந்தவ ழூம்வான்மி யூர்த்தலைவன் றுளினரு ணறவ
மெங்குந்த வழவந்தாதிக் கென்றுந் துணை யைங்கரன் பதமே.

## சுப்பிரமணியர் துதி.

எழுத்தைந்து மொன்று மெழிலார் மயிலை யிறைவனையும்
வழுத்தென்று மொன்று மருந்தீசன் செய்ய வடியிணையு
பெழுத்தொன்று மாலை யிலசவைப் பாய்நன் றினிதமர
வெழுத்தைந்து மொன்று மெழிலா னனங்கொண்ட வெங்குருவே.

## அவையடக்கம்.

அறபத்து மூவ ரருணினைந் தீச னடிபரவற்
குறுபற்று வெண்ணியந் தாதிசொற் றேனொரு நூனசையால்
நெறிபற்று நின்ற வருட்புல வீர்நெல் லுறுதுகட்போற்
குறிபற்றுச் சொல்லின் குணம்பற்று வென்றுங் குறிக்கொண்மினே.

## நூல்.

ஓரெழுத் தைந்துஞ் செறிந்தோ ருருவமர்ந் தேயருளாற்
பேரெழுத் தைந்தா மயிலா புரிநிதம் பேணிநின்று
ஓரழுத் துந்தொண்டு நன்னெஞ்ச மேசெய ஓடுவமே
பாரழுத் தும்வினை பற்று தவனருள் பற்றுதற்கே. (௧)

பற்று மிருவினைப் பற்றறுத் துய்யப் பரிந்துநெஞ்சே
நித்த மொருவினை நீபுரி வாய்நில வோடரவ
மெற்று மலைபுன லாடிடுந் தாழ்சடை யீசனரு
ளுற்ற புகழ்த்திரு வான்மியூர்ச் சென்றவ ணேதுதற்கே. (உ)

ஓதக் கடனெஞ்ச மேகட னஞ்சை யுகந்தவன்றாட்
போதக் கடற்படும் புத்தமு துண்ணப் பொருந்துமவன்
சீதக் கடல்சூழ் திருமயி லாபுரி சென்றணைந்து
வேதக் கடற்பிறப் பேழுந் தொலைப்பா மிறைஞ்சியின்றே. (ங)

இன்றே நமன்வரு மென்றெண் ணினுமென் னிதயமொரு
நன்றே தருசெய லுந்த லின்று நலமிகுந்த
மன்றே மணிகண்ட னேதிரு வான்மியூர் மன்னவனே
யென்றே வருநின் னருட்டுணை யேழையெற் கின்புறவே. (ச)

இன்புற் றமர விருமையுந் தந்துல கேழ்பிறப்புந்
துன்புற் றகலத் துணையருள் வான்றுணைத் தாள்வழுத்து
மன்புற் றமர்ந்த வடியவற்கென்று மருளுருவாய்
நண்புற் றமர்ந்த திருமயி லாபுரி நாயகனே. (ரு)

நாயக னேயுயிர் தோறு நிறைந்து நலமுதவுந்
தாயவ னேதண் ணளியவ னேயெழிற் றுமறையின்
மேயவ னேடரி யேத்தெடுத் தேங்க வெரியுருவாஞ்
சேயவ னேசிவ னேதிரு வான்மியூர்த் தேசிகனே. (சு)

தேசிக னாகவந் தாண்டா னருமறை தேர்ந்துமுளங்
கூசிய நால்வ ருவந்துயக் கோதி லரும்பொருளைப்
பேசிய பிஞ்ஞகன் பேசாப் பெருமையன் பேசுமறை
வாசியி னேசன் றிருமயி லாபுரி வாழ்பவனே. (எ)

வாழ்முத லேயென் வழிமுத லாகிய வல்வினையி
னூழ்முத லேயொழிப் பாயுல கேத்து மொருமுதலே
நூழ்முத லேயடி யாரகத் தென்றுந் துணைபுரியக்
ாழ்முத லேதிரு வான்மியூர் வாழுங் கறைக்கண்டனே. (அ)

ண்டங் கறுத்தே யடிசிவப் பேறக் கடல்விடத்தைப்
ண்டங் குவந்த பழமறை போற்றும் பசுபதியே
ண்டங்கு சோலைத் திருமயி லாபுரி மேவியுன் றன்
ண்டே புரிசெய லென்றருள் வாய்சொற் ...

தொழும்புகொண் டானயன் மால்முதற் றேவரோ டோங்கசுரர்
செழும்புவ னந்தொறுஞ் சேருயிர் முற்றுஞ் சிலையடியின்
றழும்புகொண் டேத்தத் தனஞ்சய னேங்கவுந் தாங்கிநின்முன்
கொழும்புனல் வேணியன் வான்மியூ ராளுமெங் கொற்றவனே. (க0)

கொற்ற வருட்கவி கைத்தனி யோங்கக் குவலயத்தை
முற்றும் புரந்தின் னுயிர்க்குயி ராகியுள் ளந்தனிலே
சற்று மகலாத் தனிக்கோ னடாத்துமென் சங்கரனார்
நித்த முலவுந் திருமயி லாபுரி நேசமினே. (கக)

நேசப்பட் டேமறை போற்றும் பொருட்டிரு நீறுவந்து
மாசைப்பட் டானம்பி யாரூர னேத்து மருந்தமிழ்க்கே
வாசப்பட் டான்றிரு வான்மியூர் வந்தவான் மீகனுக்கா
வீசப்பட் டேயரு ளுடைக மாடிடும் வித்தகனே. (கஉ)

வித்தகர் வாழுந் திருவால வாய்தனில் வீற்றிருந்த
சித்தனைச் சித்தத் தொளியா னவனைத் திருமயிலைக்
கத்தனைக் கற்பக வல்லியுந தானுங் கலந்துநின்ற
வத்தனை யன்றி யறியார் புகலிட மாய்ந்தவரே. (கங)

ஆய்ந்த முனிக்கண மன்பொடு மேத்த வருந்தவத்தை
வாய்ந்து வருமுனி வான்மீக னுய்ய வருணடனந்
தோய்ந்த வடியிணைத் தூயோர தொழூந்திரு வான்மிபுரி
யேய்ந்த மருந்தினை யேத்துவோர்க் கென்று மிடரிலதே. (கச)

இடருள தோநமக் கென்றெண்ணி மான்முதற் றேவருமே
கடல்கடைந் தாரமு துண்ணக் கடுவெழுந் தேயெறிய
வுடல்கரிந் தேயவ ரோலமிட் டேத்த வுடனுவந்து
நடமயி லாபுரி நாயகன் செய்தனன் நல்லருளே. (கரு)

அருளே புரியுந் திருவான்மி யூரம ரண்ணலிடத்
தெருளே புரியுந் திரிபுர சுந்தரித் தேவியுமே
பொருளே நமக்குப் புகலிட நெஞ்சே புவியினுறு
மருளே தடைக்கு மருந்தரு ளும்மவ ரார் சபூலே. (கசு)

கழலார்ந் திறைக்கு மறைச்சரம் டென்றுங் கரத்தினிலு
மழையார்ந் திறைக்கு மொளிர்திரு மேனிமுற் றும்முவெவி
தழலார்ந் திறைக்குந் தழைத்தொளிர் வேணியிற் றண்ணிலவி
னிழலார்ந் திறைக்குந் திருமயி லாபுரி நித்தனுக்கே. (கஎ)

பற்று மிருவினைப் பற்றறத் துய்யப் பரிந்துநெஞ்சே
நித்த மொருவினை நீபுரி வாய்நில வோடரவ
மெற்று மலைபுனை லாடிடுந் தாழ்சடை யீசனரு
ளுற்ற புகழ்த்திரு வான்மியூர்ச் சென்றவ ணேத்துதற்கே. (௨)

ஓதக் கடனெஞ்ச மேகட னஞ்சை யுகந்தவன்றாட்
போதக் கடற்படும் புத்தமு துண்ணப் பொருந்துமவன்
சீதக் கடல்சூழ் திருமயி லாபுரி சென்றணைந்து
வேதக் கடற்பிறப் பேழுந் தொலைப்பா மிறைஞ்சியின்றே. (௩)

இன்றே நமன்வரு மென்றெண் ணினுமென் னிதயமொரு
நன்றே தருசெய னுடைத லின்று நலமிருந்த
மன்றே மணிகண்ட னேதிரு வான்மியூர் மன்னவனே
யென்றே வருநின் னருட்டுணை யேழையெற் கின்புறவே. (௪)

இன்புற் றமர விருமையுந் தந்துல கேழ்பிறப்புந்
துன்புற் றகலத் துணையருள் வான்துணைத் தாள்வழுத்து
மன்புற் றமர்ந்த வடியவற்கென்று மருளுருவாய்
நண்புற் றமர்ந்த திருமயி லாபுரி நாயகனே. (௫)

நாயக னேயுயி ரோறு நிறைந்து நலமுதவுந்
தாயவ னேதண் ணளியவ னேயெழிற் றமைாயின்
மேயவ னேடரி யேத்தெடுத் தேங்க வெரியுருவாஞ்
சேயவ னேசிவ னேதிரு வான்மியூர்த் தேசிகனே. (௬)

தேசிக னாகவந் தாண்டா னருமறை தேர்ந்துமுளங்
கூசிய நால்வ ருவந்துயக் கோதி லரும்பொருளைப்
பேசிய பிஞ்ஞகன் பேசாப் பெருமையன் பேசுமறை
வாசியி னேசன் திருமயி லாபுரி வாழ்பவனே. (௭)

வாழ்முத லேயென் வழிமுத லாகிய வல்வினையி
னூழ்முத லேயொழிப் பாயுல கேத்து மொருமுதலே
சூழ்முத லேயடி யாரகத் தென்றுந் துணைபுரியக்
காழ்முத லேதிரு வான்மியூர் வாழுங் கறைக்கண்டனே. (௮)

கண்டங் கறுத்தே யடிசிவப் பேறக் கடல்விடத்தைப்
பண்டங் குவந்த பழமறை போற்றும் பசுபதியே
விண்டங்கு சோலைத் திருமயி லாபுரி மேவியுன்றன்
றொண்டே புரிசெய லென்றருள் வாய்சொற் றொழும்பனுக்கே. (௯)

தொழும்புகொண் டானயன் மால்முதற் றேவரோ டோங்கசுரர்
செழும்புவ னங்தொறுஞ் சேருயிர் முற்றுஞ் சிலையடியின்
றழும்புகொண் டேத்தத் தனஞ்சய னேங்கவுந் தாங்கினின்றான்
கொழும்புனல் வேணியன் வான்மியூ ராளுமெங் கொற்றவனே. (௰)

கொற்ற வருட்கவி கைத்தனி யோங்கக் குவலயத்தை
முற்றும் புரந்தின் னுயிர்க்குயி ராகியுள் ளந்தனிலே
சற்று மகலாத் தனிக்கோ னடாத்துமென் சங்கரனார்
நித்த முலவுந் திருமயி லாபுரி சேசிமினே. (௧௧)

நேசப்பட் டேமறை போற்றும் பொருட்டிரு நீறுவந்து
மாசைப்பட் டானம்பி யாரூ ரனேத்து மருந்தமிழ்க்கே
வாசப்பட் டான்றிரு வான்மியூர் வந்தவான் மீகனுக்கா
வீசப்பட் டேயரு ளுடைக மாடிடும் வித்தகனே. (௧௨)

வித்தகர் வாழுந் திருவால வாய்தனில் வீற்றிருந்த
சித்தனைச் சித்தத் தொளியா னவனைத் திருமயிலைக்
கத்தனைக் கற்பக வல்லியுந் தானுங் கலந்துநின்ற
வத்தனை யன்றி யறியார் புகலிட மாய்ந்தவரே. (௧௩)

ஆய்ந்த முனிக்கண மன்பொடு மேதத வருந்தவத்தை
வாய்ந்து வருமுனி வான்மீக னுய்ய வருணடனந்
தோய்ந்த வடியிணைத் தூயோர் தொழுந்திரு வான்மிபுரி
யேய்ந்த மருந்திணை யேத்துவோர்க் கென்று மிடரிலதே. (௧௪)

இடரிள தோநமக் கென்றெண்ணி மான்முதற் றேவருமே
கடல்கடைந் தாரமு துண்ணக் கடுவெழுந் தேயெறிய
வுடல்கரிந் தேயவ ரோலமிட் டேத்த வுடனுவந்து
நடமயி லாபுரி நாயகன் செய்தனன் நல்லருளே. (௧௫)

அருளே புரியுந் திருவான்மி யூரம ரண்ணலிடத்
தெருளே புரியுந் திரிபுர சுந்தரித் தேவியுமே
பொருளே நமக்குப் புகலிட நெஞ்சே டவியனுறு
மருளே துடைக்கு மருந்தரு ளும்பவா வார் கழலே. (௧௬)

கழலார்ந் திறைக்கு மறைச்சாம் டென்றுங் கரத்தினிலு
மழையார்ந் திறைக்கு மொளிர்திரு மேனிமுற் றும்முவலி
தழலார்ந் திறைக்குந் தழைத்தொளிர் வேணியிற் றண்ணிலவி
னிழலார்ந் திறைக்குந் திருமயி லாபுரி நித்தனுக்கே. (௧௭)

நித்தனே யென்று மறவுரு வேற்றி னிவர்ந்தருள
மெத்தவு மாவ லுறுவதற் கென்னோ விதிநினக்கு
சித்தனே சித்தத் தமர்ந்துயிர் முற்றுஞ் செறிந்துநின்ற
வத்தனே வான்மி புரியமர்ந் தோனே வறைந் தருளே. (கஅ)

அறையும் பலசம யத்தினுள் ளொன்று மருண்மலிந்தே
யுறையு மருவா யருவுரு வாயுரு வாகியெங்கும்
நிறையும் பொருளாய் நிலைத்துல குய்யு நெறியருளு
மறையின் பொருளாந் திருமயி லாபுரி மன்னவனே. (கசு)

மன்னவ னேதிரு வான்மி புரிமகிழ்ந் தேயிருந்த
முன்னவ னேயரு முக்கண னேமுறை யோநினக்குத்
தென்னவ னுலடி யேற்றே னரியயன் றேவருக்கும்
பின்னுயிர் முற்றும் பெறவளித் தாயப் பிரம்படியே. (உ0)

அடியுறைந் தம்மைபே யாருவந் துன்ற னருட்கடலிற்
குடியிருந் தாடவுங் கூத்துகந் தாடுமுன் கொள்கையென்னோ
படியுறைந் தேயயன் மான்முத லேத்தப் பழமறையின்
முடியுறைந் தாண்ட திருமயி லாபுரி முன்னவனே. (உக)

முன்னவன் மூவுல கத்தினுந் தன்புக ழோங்கவைத்த
தென்னவ னுய்யச் சிலையிபந் தீங்கரும் பைக்கடித்துத்
தின்னவு மாரருள் செய்தவன் வான்மியூர் சித்தனென்றன்
கன்னக வெவ்வினை யுங்கரைத் தாளுறுங் காப்பதற்கே. (உஉ)

கார்கொண்ட மேனியன் கண்மலர் சாத்தக் கழலடியி
னூர்கொண் டவர்க்கு நயந்தளித் தாய்நல் லரக்கனுயிர்
வீர்கொண்ட நேமி விதித்தலை கைக்கொண் டளித்ததென்னோ
பார்கொண் டவர்க்குத் திருமயி லாபுரிப் பண்ணவனே. (உஙு)

பண்ணவ னேதிரு வான்மியூ ரேத்தும் பழவடியர்க்
கெண்ணவ னேயெண் ணெழுத்தவ னேயெண் டிசைவிளக்குங்
கண்ணவ னேகண் மணியவு னேகட லின்விடத்தை
விண்ணவ ரோங்கவன் றுண்டவ னேயென் விழுப்பொருளே. (உச)

பொருளோ டருளும் பொருந்துவோர்க் கின்பம் பொருந்துவபோல்
வெருளோ டிருளு மிகவடைந் தேதுன்ப மேவியந்தோ
தெருளாரும் வீதித் திருமயி லாபுரி தேடிநின்றேன்
மருளோட வெற்கு மகிழ்ந்தளிப் பாயுன் மலரடியே. (உரு)

மலரு மருணமல ரேமருந் தீசன் மகிழடியி
னலறு முயலக ஞரணத் தேனு மருவினையு
முலருந் திருவான்மி யூர்தனி லேயுவந் தேயிருந்து
பலருந் தொழுந்திருத் தாண்டவங் காணப் பரிந்தவர்க்கே. (௨௬)

பரிந்து நகையொடு பல்விரு கத்தி னிறைச்சிதனைத்
தெரிந்து சுவையமு தம்போலு மாசகித்தே னுஞ்சொரிந்து
வருந்திக்கண் ணப்பன்வைத் தேத்தவு மேவவ னன்பினையே
புரிந்துநீ யுண்டதென் னேமயி லாபுரிப் புண்ணியனே. (௨௭)

புண்ணிய மேயுரு வானசீ ராளன் பொரிக்கறியை
கண்ணிய மாகக் கலம்படைத் தேத்தயுங் காதலித்து
வெண்ணியே வந்த யேனழைத் தாய்மீண் டவன்வாவே
தண்ணியற் சோலைசூழ் வான்மியூர் மேயவெஞ் சங்கரனே. (௨௮)

சங்கக் குழையினைத் தாளுமை யார்க்குந் தனிமுதலை
மங்கை யடத்தனை மால்விடை யாளனை மான்மழுவோ
டங்கையி லேயயன் வெண்டலை யேந்து மழகனையே
புங்கவ ரேத்துந் திருமயி லாபுரிப் போற்றுநெஞ்சே. (௨௯)

நெஞ்சக் கரையொடு நின்னடி போற்று நினைவளித்து
பஞ்சக் காத்தினும் பால்வெள்ளை நீற்றினும் பற்றுவைத்தே
கொஞ்சக் கரவிலா வஞ்சக னுய்யக் குறித்தருள்வாய்
கஞ்சக் கரதடஞ் சூழ்திரு வான்மியூர்க் கண்ணுதலே. (௩0)

கண்ணுத லோனரு ளடிக் கவுணியா கோனுவந்து
தண்ணியற் சோலைத் திருமயி லாபுரி சார்ந்துகுடம்
நண்ணிய லங்கமே நாடுபூம் பாவையா நங்கைவர
வெண்ணியற் பாடலன் றேத்தினன் யாரும்வா னேறுதற்கே. (௩௧)

ஏறுவந் தோன்றிரு வான்மியூ ரேத்தி யிருங்கயிலைப்
பேறுவந் தேதிரு நீறணிந் தாரன்பர் பேதமையால்
வேறுவந் தேயணிந் தார்க்கல்ல வோவேழ் நிரயமெனக்
கூறிகந் தேமறை முற்றுநெஞ் சேநீ குறித்துணரே. (௩௨)

உணங்கு நிலவி னொருகலை யோடொளிர் தாழ்சடையி
லிணங்க வரவும் பலவிழைந் தேவைத்த வீசனடி
வணங்கும் வரம்பல வேற்றுநெஞ் சேநம் மனப்பவத்தி
னணங்குந் தவிர்ப்பா னவன்மயி லாபுரி யாதரித்தே. (௩௩)

ஆதார மாயெப் பொருளு மறைந்து மருமறையின்
மீதார வேபதம் வைத்துகந் தேதிரு வான்மியினிற்
ருதாவென் றேநட மாடுந் தியாகனின் ருட்புணையை
வாதாடு மேழையெற் கென்றருள் வாயிவ் வகலிடத்தே. (௩௪)

இடங்கொண்ட வன்வாயி லானகக் கோயிலி னின்பமொடு
நடங்கொண்ட வன்பண்டு நாடியே யேத்து மமரருக்கா
விடங்கொண்ட வன்னிட மின்னெளி சேர்திரு மாடமலி
திடங்கொண்ட வன்பினர் சேருந் திருமயி லாபுரியே. (௩௫)

புரிந்தடை யாமல ரோன்விதி யென்றும் புராரியடி
பரிந்தடை வோமவன் பத்த ருறவும் பலகலையுந்
தெரிந்துணரந் தோர்தொழு தேத்து மவன்றிரு வான்மிபுரி
விருந்தடை வோமருள் நெஞ்சே நமக்கு விதியிதுவே. (௩௬)

விதித்தலை கொண்டவன் விண்ணோர் பரவுந் திருமயிலைப்
பதித்தலை கொண்டவன் பாருய்ய வன்று பகீரதற்கா
நதித்தலை கொண்டவன் நாமேத்து மானய னம்மடியில்
வதித்தலை கொண்டவன் றண்ணரு ளேநிதம் வாழ்த்துமினே. (௩௭)

மின்போன்ற நுண்ணிடை யார்க்கேவற் செய்து மிகமெலிந்தே
துன்பொன்றி யேயலை யுங்கெடு நெஞ்சே துதிப்பவருக்
கின்பென்று மேதரு வான்மியூ ரீச னிணையடியி
லன்பொன்று மேவைப்பை யேலின்ப வெள்ளத் தழுந்துவையே. ()

வெள்ளத் துறங்கத் திருமா றனக்கு விதித்தவன்ற
னுள்ளத்தி லேயே வகலா துறைந்தா யுகந்தவர்தங்
கள்ளங் கரைக்குந் திருமயி லாபுரிக் கண்ணுதலோய்
விள்ளக் கருதா யடியேனுக் கின்று விளங்குறவே. (௩௯)

விளங்குந் திருவான்மி யூருறை வித்தகன் விண்ணவர்தங்
களங்களித் தோங்கக் கலங்கு மவரவர் கந்தரத்தில்
வளங்கெழு மங்கல நாண்வாழ வைத்து வருங்கடுவை
யுளங்களி தூங்கநன் றுண்டபி ரானரு ளோதுமினே. (௪0)

ஓதும் புகழ்மறைக் கோவண மார்த்துத் தரியமதாய்
மீது புழைக்கை யுரித்தோன் மிக வணிந் தின்பமொடு
மாதுகந் தேயுல கம்மளந் தானய னம்மடியிற்

(௪௧)

புங்கவர்க் குண்மைப் பொருளுவந் தோதும் புராதனனைத்
துங்க மனத்தவர் தாந்தொழும் வான்மியூர் தோய்ந்தவனை
யங்கச் சுமைதவிர்த் தாளுந் தயாளனை யான்றுதிக்கப்
பொங்கு மருடரு நெஞ்சே யவனடி பூதலத்தே (௪௨)

பூதல மீதலை முற்று மரியயன் போயலுத்து
வாதுலாந் தேயழ லண்ணா மலைபணிந் தேத்தவர்க்குப்
பாதலங் காட்டி யருள்புரிந் தோனிதம் பற்றுமொரு
மாதல மாமயி லாபுரி யேத்தி மகிழ்மினே. (௪௩)

மகிழ்ம்பாக் கேட்கத் திருவொற்றி யூரின் மகிழடியிற்
புகழ்ம்போற் சங்கிலி யாற்பிணித் தான்புண ணியத்துருவாய்த்
திகழுமென் சுந்தரன் றேங்கவும் வான்மியூர் தேவனிட
நெகிழுந் திரிபுர சுந்தரி யன்னையும் நேசிக்கவே. (௪௪)

நேசித்து நின்னிரு தாட்பணிந் தேத்தி யிராகவனு
மாசித் தருட்பல வேயடைந் தேயணி யாரிலங்கை
மாசித் திராவணன் றன்முடி பத்து மறுத்தருளப்
பூசித்த மாமயி லாபுரி யாளும் புராந்தகனே. (௪௫)

புரமூன் றெரித்தவன் பொன்னடி போற்றும் புரந்தரர்க்குச்
சிரமூன் றறுத்தவன் றேசிகற் கொன்றவெந் தீமையற
வாமொன்று மாலவாய் காட்டியே யாண்டவன் வான்மிபுரி
தாவொன்ற மேகம் மலமூன்று மேயறுத் தாள்வதற்கே. (௪௬)

தாளுடைய யேற்றுத் தருமனும் போற்ற வவனையுமே
யாளுநின் பேரருட் டானினைந் தேயுன் னடிபணிந்தேன்
கேளிது வேகுறை யென்பிறப் பெல்லாங் கெடுத்துனடி
யாளுதி யென்றுந் திருமயி லாபுரி யாண்டவனே. (௪௭)

ஆண்டவ னண்டத் துறுமுயிர் முற்று மழிபிறவி
தாண்டத் திருவுளம் பற்றியன் றேதனித் தாண்டவத்தைக்
காண்டகு வான்மியூர் காட்டியே யாண்டா னவன்கழலைப்
பூண்டகு நெஞ்சே முடிக்கணி யாகப் பொருந்துதற்கே. (௪௮)

பொருந்தவைத் தானிரு வர்க்கடி காட்டிப் புகழ்பரசு
விருந்தவத் தானிரா மன்றனை யும்ரகு ராமனையும்
வருந்தவைத் தானிகல் செய்தவ ரேங்கவு மாழ்குமெனை
திருந்தவைப் பானித மேமயி லாபுரித் தீவண்ணனே. (௪௯)

வண்ணம்பொன் மேனி வளர்திரு நீறுவெண் மேனிசடை
தண்ணஞ்செம் மேனி தளிரடி யும்மருண் மேனியவன்
நண்ணஞ்செய் சூழ்திரு வான்மியூ ரேத்தி நலம்பெருக்கு
மெண்ணஞ்செய் வோமிக நெஞ்சே யவனரு ளேற்பதற்கே. (௫0)

வற்று னடிபணிந் தெண்ணூர் சமணரெண் ணாயிரரைக்
காற்று யலையக் கழுவேற்றுங் காழியர் கோனுவந்து
நோற்று ளெலும்பை நொடிதனி லேமயி லாபுரியிற்
சேற்றார் கமலத் திருமகிழ் பாவையாய்ச் செய்தனனே. (௫௧)

தனமே புரிந்து தளர்வெய்தி நாளு மிருவினையின்
வனமே திரிந்த வறிவிலி யேன்றிரு வான்மிபுரி
புனமே யிருந்து பொருந்து மருந்தினைப் போற்றுதவந்
தினமே புரிந்தருட் செல்வம் பெறுந்திறஞ் செப்புவிரே. (௫௨)

புவிவாழ வம்பிகை பொற்புன்னை நீழலிற் பூத்திருந்த
வவியா விறைவனை யன்பொடு மேத்தி யருமலராற்
றுதியாரு மர்ச்சனை தோகை யுருவொடு மேபுரிந்த
கவினார ணரேத்துந் திருமயி லாபுரி காணுமினே. (௫௩)

காணும் பவப்பிணிக் கென்செய்கு வேன்கடை யேனிதழுங்
கோணும் பசிப்பிணிக் கேகடை வாயிற் குறித்துதரஞ்
சாணுந் தணிக்கத் தளர்வெய்தி னேன்றிரு வான்மிபுரிப்
பேணும் மருந்தீச னேதருவா யருட்பேதை யெற்கே. (௫௪)

பேதுற்ற மங்கையர்கண் வலைசிக்கி பேய்போ லலைந்து
கோதுற்ற நெஞ்சமே கூற்றுவனு ருயிர்க்கொண்ட வடிப்
போதுற் றருளமுடப் போதுவந் தேத்துவம் போற்றுவமே
சீதற்ற வன்மயிலா புரிசென்று தினம் பணிந்தே. (௫௫)

பணி சுமக்கும் முலகெல்லா முயப்பரிந்தே யருளி
யணி சுமக்கும் மருந்தீச னடியிணை யாதரித்தே
மணி சுமக்குந் திருவான்மி யூர்நம்மை யடர்க்குமலப்
பிணி சுமக்கா தருட்செய்யு மதன்புகழ் பேசுவமே. (௫௬)

பசைவைத்தான் திருச்சாழலை மூகை பிற மதத்தை
யசைவைத்தா னந்த வாசகமுற்று மெழுதி வைத்தான்
நசம் வைத்தே மயிலாபுரி யென்று நிலவுமருள்
நசைவைத்தான் கபா லீச்சுரனே யிவ்விய னிலத்தே. (௫௭)

வியனிலத் தேரிவர்ந்தே புரமூன்று மெரித்தருளி
நயனிலைத் தாரொரு மூவரு மேத்துநற் பாவலங்கற்
றயைநிலைத் தாளணிந் தானுவந் தென்வினை தானறுத்தின்
றுயனிலைத் தந்தருள்வான் றிருவான்மியூ ருத்தமனே. (ருஅ)

உத்தியன்றோ திருமாலொடுஞ் சூழ்ந்தே யுனது பதம்
நத்தியன்றே ரதிதேவி தன்னுயகனு ருயிரைப்
பெற்றுகந்தாள் பெரும்பேறு பெற்றுள் பிறந்தே யிறவா
முத்திநன்றே தருமா மயிலாபுரி முன்னவனே. (ருக)

ஏத்தும் பதஞ்சலியார்புலிக் காலனிரு வருக்காப்
போற்று மறையவர் மூவாயிரரும் புரிந்து தொழக்
கூத்துகந்தா னம்பலத்தி னுள்ளென்றுங் குலவு மரு
ளார்த்துகந்தான் றிருவான்மியி லென்னையு மாளுதற்கே. (சு0)

ஆட்டுத் தலையுறத தக்கனுக் கந்நா ளமைத்தவனீ
வாட்டு மயன்றனக்கேன் மற்றொரு தலைவைக்க விலை
கேட்டிலையோ வவன் கேடிலோ யென்றுங் கிளர்த்தருளக்
கூட்டுந் திருமயிலா புரியாளுங் குணக் கடலே. (சுக)

குணக்கடல்சூழ் திருவான்மி யூரெங்கோன் குறைவிலருள்
கணைக்கடலை யணைக்கட்ட நளன் றனக்கும் மருளி
யிணைப்புயமா ரிராமன் னுயவன்றவ் விலங்கையர்கோன்
பணைப்புயமோ ரிருபத்துந் தரைவிழப் பண்ணியதே. (சுஉ)

பண்ணியநற் றவம்பார்த்து ளம்பூத்து பார்த்தன் றனக்குக்
கண்ணியவத் திரமீந்து கண்ணன்றனை காக்க வொரு
நண்ணியதேர்ப் பரியோட்ட வைத்தா னல்ல பாரதத்தி
லெண்ணியனுன் முகனேத்து மயிலைவா ழீச்சுரனே. (சுங)

சுரப்பற் றிருவினைத்தூக் கற்றில் வாழ்க்கைத் துறந்தவர்க்கே
நிரப்பற்ற வின்பநிதி யளிக்கும் மருந்தீச னரு
டரப்பற்று வான்மியூர்த் தன்புக ழேத்தினா தாட்பரவி
வரப்பற்று நெஞ்சமே வானுல கின்பமிவ் வையகத்தே. (சுச)

வையத்தி னுழியரி தனக்கீந்து மவன் றனையே
யைக் கணையாக நாகத்தனு நுழைத்தே யலைத்து
மெய்யக் கருதாய் திருமயிலா புரியெம் மிறையே
வெய்யப் புரமூன் றெரித்தாய் சிரித்து விநாடியிலே. (சுரு)

நாடிடு நம்பியாரூ ரனுவந்துமுன் நற்பதிகம்
பாடிடச் செங்கற் பசும்பொனுச் செய்தவன் பாதமலர்
வீடிடு மிம்மையிலே யவன் வான்மியூ ரேத்தி யன்பாய்க்
கூடிடுவா யடியா ரடியார்தங் குழாத்துடனே. (சுசு)

குழையணி காதனைக் கோலவெண் ணீறுமெய்க் கொண்டுநின்ற
மழுவணி கையனை மால்குடி கொண்டபொன் மன்றினடந்
தழையணி காலனையே திருவள்ளுவர் தாம் புரிந்து
விழையணி நோற்றவூரா மயிலாபுரி வேண்டுமினே. (சுஎ)

வேண்டு முலகமொரு மூன்றுமாள வெலிக்களித்து
நீண்டவரியி னெலும்பணிந் தோனுவந் தேகிலவு
மாண்ட தவத்தினர்சூழ் திருவான்மி யூரவந்திப் பையேற்
றீண்டற் கரிதேழ் செனனத் தொடக்குறுந் தீப்பிணியே. (சுஅ)

பிணிகொண்டெ நாளுமே பிழையுற்றுய் மிகப் பேதைநெஞ்சே
பணிகொண்ட பாவைய ரல்குலின் றீவிடம் பட்டலைந்தே
துணிகொண்டி னிச்சுகமுற் றடைவாய் துகளே துமிலா
வணிகொண்ட வன்மயிலா புரியேத்தி வணங்குவையே. (சுகூ)

வணங்கத் தலைவைத்து வாழ்த்தநா வைத்து வளமருவி
யிணங்கத்தன் சீரடியார்க் குழாம்வைத்தா னிரு நிலத்தின்
மணங்கொண்ட சோலைத் திருவான்மியூர் மருந்தீச னமக்
குணங்குங் கருத்தென்ன வோதுநெஞ்சே யுனக்குற்றதுவே. (எ0)

உற்று வமரகுரு தானவர்குரு வோதுவரம்
பெற்ற தலமாந் திருமயிலா புரிப்பிஞ் ஞகன்சீர்க்
கற்றுத் தொழுவோர் கழற்பணிந் தேத்தக் கருது நெஞ்சே
முற்று மமர்ந்தின்ப சாகரத் தென்றுநா மூழ்குதற்கே. (எக)

மூழ்கின்ப வாரி முழுதும் படிந்து முனிவர் குழாஞ்
சூழ்ந் தின்பமாரி யெனக் கண்ணருவித் துளிபரவத்
தாழ்ந்துன் பதாம்புயந் தன்முடி சூட்டி சதானந்தமா
யாழ்ந்திருக்குந் திருவான்மியி லேழையெற் கன்பருளே. (எஉ)

அன்புக் கெளிதாந் திருமயிலா புரி யண்ணலரு
ளென்புக் கெளிதா யுயிரளித்தே யிருங் கூற்றனுயிர்
வன்புக் கெளிதாய் மலரடி தூக்கி வதைத்தவனென்
றுன்புக்கெளிதாய்த் துரத்துமவன் புகழ்ச் சொல்லுதுமே. (எங)

சொல்லிட்ட நான்மறைக் கெட்டாத் திரிபுர சுந்தரியின்
நல்லிட்ட நாயகன்வாழ் திருவான்மியூர் நண்ணி யன்பாய்
புல்லிட்ட ரும்புனற்பூ விட்டவனடிப் புந்தியிலே
வல்லிட்டு வாணவக் காடெறிவா மிந்த வையகத்தே. (எச)

கற்றோர் பரவித் தொழுங் கபாலீசன் கழலருளை
நற்றோர்ந் தமரொடு மாதவ னயந்தே தவத்தை
யுற்றோர்ந் தமர்ந்த திரு மயிலாபுரி யுன்னுவையே
லற்றோம் பிறவி யடைவோ மவனரு ளாரமுதே. (எரு)

ஆரா வமுதமே யோருரு வானவறு முகனைக்
காரார் மலயமுனிக கருளா றிருகை யவனைத்
தீராப்பயங் கெடுத்தண்டரை யாண்ட செவ்வேளைத் தந்த
சீராருட் டிருவான்மி யூரமேய செழுஞ்சுடரே. (எசு)

சுடரொரு மூன்றுமுக் கண்ணுயிலங் கத்தொல் லெண்டிசையை
யடறருமட் டபுயமாகக் கொண்டோ னமர்ந் திலங்குங்
கடலருகார் மயிலாபுரி யேத்திக சடிமலா ருழ்
தடம்படிந் தாடிட வாடிடு மேவினை தாண்டுதற்கே. (எஎ)

தாண்டக வேந்தன் றமிழ்மாலை சூட்டு நின்றுளுதவி
யாண்டகத் தென்று மமர்ந்தருள் வாயடி யேனைமிகத்
தூண்டிடு மூழ்வினை யானலங் தேங்குமென் றுன்ப மெலாங்
காண்டகுமோ திருவான்மி யூராளுங் கருணை யனே. (எஅ)

கருணாகரன் கரியின்பா மூறிரண்டுங்க லங்குந்
தருணுதா வொடுதாய் போலவணைந் தருட் பாலருத்தி
யருளாகம மறையாய்ந் தமைச்சும் புரிந்தா னவைத்த
குருநாதன் வாழ் மயிலாபுரி யேத்திக் குலவுமினே. (எகூ)

குலங்கடந்தான் குணந்தான் கடந்தான் குறி குற்றமொடு
மலங்கடந்தான் புலமுங் கடந்தான் மனை மற்றுமெலாச்
சலங்கடந்தான் சலத்தேங்கும் பகீர தற்கா சலத்தின்
வலங்கடந்தார் சடைவைத்தவன் வான்மி புரி யிதுவே. (அ0)

வேய்கொண்ட தோளுமை மின்கொண்ட வஞ்சிறை யேய்ந்துமயி
லாய்கொண்ட வளிடமாய்க் கொண்டவன் மயிலா புரியி
லாய்கொண்டவன் பெயராயிர மேத்தியரு மறையும்
வாய்கொண்ட றற்றிடச் சேய்கொண்டவன் பதம் வாழ்த்துமினே. ()

வானவர் நாயகன் மாலய நாயகன் வாசவ னோ
டானவர் நாயகன் சங்கரி நாயகன் சந்தமறை
யேனையர் நாயகனென்னுயிர் நாயகனெண் டிசையுந்
தானமர் நாயகனே திரு வான்மி யூர்த்தற்பரனே. (அஉ)

தற்பரை யாகந்தழுவக் குழைந்த வடானு வப்பப்
பொற்பரை யாகம்பொருந் தளித்தே தன்புரி சடையி
னற்பரமாகத் திழிபுனனங் கையை நன் குவந்தான்
சிற்பரன் மாமயிலாபுரி மேய சிவக் கொழுந்தே. (அங)

சிவமேவு வான்மி யூர்ச்சென் றன்பர் மேவி செகம்பரவுந்
தவமேவி யேயவன் றாண்மேவி னோர்த்த ரணியிலே
யவமேவி நெஞ்சமே யன்பேது மின்றி யலைவதென்னே
பவமே துடைத்தருளும் மருந்தீசனைப் பாடு வையே. (அச)

பாடுவதுன்றிரு நாமம்பணி வதுன் பாத மல்லாற்
றேடுவ தொன்றுள தோவடி யேற்கிந்தத் தேசத்திலே
கூடுவ தென்று நின்னன்பர் குழாத்தொடு கோலமன்ற
நாடிடு மாமயி லாபுரி மேய வென்னு யகனே. (அரு)

என்னாளும் வான்மி யூர்மேய பிரானெண் டிசைபரவுந்
தென்னால வாய்மறு கிற்றிரிந் திந்தனமுஞ் சடைமேன்
முன்னாட் சுமந்து தன்னன்பரைக் காத்தவன் மொய்ம்மலர்த்தா
ளிந்நாட் சுமந்தகத் தேத்துவமே வினையேங்கு தற்கே. (அசு)

ஏகாந்தமாய் நின்னருள் வெள்ள மேவியென் னேழ்பிறவிச்
சோகாந்த காரமெல்லா மெளிதாகத் தொலைப்ப தென்றோ
நாகாரந்தகங்கணனே மயிலாபுரி நாயகனே
பாகார்ந்த கற்பகவல்லிக் குகந்த பர சிவமே. (அஎ)

பராபரனே திரு வான்மி யூரொன்றுமேபற்றி நின்ற
வராவிறைக் குஞ்சடை யாரியநாத வடி யெனையுந்
தராதர நோக்காத்தய வொமொளத்தகு மூனக்கே
மராமரா வென்ற வான்மீ கனையாளு மருந்தீசனே. (அஅ)

மருந்தாய்ப் பிறப்பிறப்பெல்லா மகற்றி மறைக்குயிரா
யிருந்தார கிலமீ தொழுயவே வெழுத்தைந் துதவும்
பெருந்தா ரணிமதி வேணிய னென் பிழையைப் பொறுத்துப்
பொருந்தா ருடருவான் மயிலாபுரிப் புண்ணியனே. (அகூ)

புண்ணாகுதே மனம் புத்தியுங் கெட்டுப் புலன் வழிபோ
யென்னாகுமோ வென வேங்குமெற் கின்னருள் செய்வதென்றோ
கண்ணாகி மூன்றுல கெங்கு நிறைந்து கருதுபுரம்
மண்ணாகவே யெரித்தாண்ட வென் வான்மியூர் மன்னவனே. (க0)

மண்ணானவன் பொன்மணி யானவன் மலமற்ற மருட்
கண்ணானவன் கண்மணியானவன் கடலும் பிறவும்
பெண்ணானவன் னலியானவ னெங்கும் பிறங்கிநின்ற
விண்ணானவன் மயிலாபுரி யேத்தி விரும்புமினே. (கக)

இருப்பான வென்மனத்தே யிருந்தாளுதற் கெங்குநிறை
நெருப்பான மேனியனே நினக்கேதகு நேசமிலா
கருப்பான வின்மதனைக் காய்ந் தமரரைக் காத்தருளப்
பொருப்பான வில்லினனே திருவான்மியூர் பூத்தவனே. (கஉ)

பூத்தவிசா னுதலாந் தவிசின்மிசைப் பூத்துலகங்
காத்தவிசான் மகமாற்றிய தக்கனைக் காதலித்த
மாத்தவிசான் மகவான் கரியோன் முதல்வா னவரை
சேத்தவிசான் மயிலாபுரி யேத்துமின் நீங்கறவே. (கங)

நீங்கறத் தாடிரு ஞானசம்பந்தன் றிருப்பதிகத்
தோங்குறு மாரணத் துள்ளொளியா முமைகேள்வனருட
பாங்குறு வான்மியூ ரேத்திப் பணிந்தவன் பங்கயத்தாட்
டேங்குறு வீடெளி தாயடைவோ நிதஞ் சிந்தியுமே. (கச)

சிந்திக்குஞ் சிந்தனையாகி யென்னெஞ்சத் திருந்து நகை
யந்தித்து வந்தனைப் பாவணிந்தான் பாிந்தோ ருளத்திற்
சந்திக்குந் தாளுடை தற்பரன்வாழ் மயிலாபுரியை
வந்திப் பவர்க்கல்லவோ புலன்முற்றும் வசப்படுமே. (கரு)

வசப்படுமே யிந்த வையகமும் புகழ் வானுலகும்
நசைப்படு வான்மியூ ரீசனருணிதியாயெழுந்த
புசப்படு நீறுபூனைந் தன்பு கொண்டவன் பொன்னடியி
லிசைப்படு சீர்த்தியை யேத்திறை வாரவியம்பி னர்க்கே. (கசு)

நாவாரவும் மனமாரவு மன்பொடு நால் வரருட்
டேவாரமுந் திருவாசக மும் பணிந் தேத்துவையேற்
காவாருமா மயிலாபுரி மேய வெங் கண்ணுதலின்
சேவாருஞ் சேவடியுஞ் சிவ லோகமுஞ் சித்திக்குமே. (கஎ)

சித்தி தந்தா யறுமங்கையர்க் கெட்டுத் தினம்பரவும்
புத்திதந்தா யடியாருளத் தொட்டிப் புரிந்த வர்க்கே
முத்திதந்தா யருளொட்டி யெற்குன்னிரு முண்டகத்தாட்
பத்திதந்தா ளொன்றுமே திருவான்மியூர்ப் பண்ணவனே. (கஅ)

நவவுருவே திருவம்பலத் தாடிய நல்லுருவே
சிவவுருவே சிற்றுருவே திரு மயிலாபுரியின்
றவவுருவே தவத்தோருளம் பூத்த தனியுருவே
யவவுருவோ ருயிர்க்கும் முயிரான வருளுருவே. (கக)

அருவாகி யெங்கு மருவுருவாகி யமர்ந்துமையோ
டொருவாகி யேதிரு வான்மி யூராண்டருளுத்தமனே
குருவாகி வந்தென் முடிக்கணிந் தேயவன் கொய்ம்மலர்த்தாட்
டெருளா குமைந்தமைப் பாவெஞ்சகத்தினுஞ் சீரெழுத்தே. (க00)

திருச்சிற்றம்பலம்.

"வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெ லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே."

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.



உ

கணபதி துணை.

# மாவையந்தாதி.

---

திருக்கைலாயபரம்பரைத்திருவாவடுதுறையாதீன

வித்வான்

சபாபதிநாவலரவர்கள்

இயற்றியது.

—:o:—

இஃது

சென்னை வைதிகசுத்தாத்வித

சித்தாந்தசைவசபையாரால்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

சென்னபட்டணம்

பார்த்திப௵ ஆவணிமீ

PRINTED AT THE MADRAS RIPON PRESS,

1885.

## ஆக்கியோன்பெயர்.

வலமார்தருமயிலாண்டகைமாவைக்குகன்கழற்குப்
புலமார்தருபொருளந்தாதிமாலைபுனைந்தணிந்தான்
குலமார்தருகுடிதுன்றியெஞ்ஞான்றுங்குறைவிறிரு
நலமார்தருவடகோவைச்சபாபதிநாவலனே.

இது கூறினோர், இந்நூலாசிரியர்மாணாக்கா

அ. சோமசுந்தரமுதலியார்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# மாவையந்தாதி.

காப்பு.

பூவைத்திருத்தியுடனேபுனைந்துபணிந்துபுகழ்
நாவைத்திருத்துவனெஞ்சத்துநாகத்திருமுகனை
மாவைத்திருத்தலவேளுக்கந்தாதிவகுத்திடவின்
பாவைத்திருத்தமுறவெனக்கீந்தருள்பாலிக்கவே.

## நூல்.

பொன்னங்கடுக்கைப்புரிசடையோன்றன்புதல்வன்முனூர்
முன்னங்கடக்கமுயலான்முளரிமலர்களினந்
தனனங்கடுக்கும்வயலீழமாவைப்பதியகத்து
மன்னங்கடகமொழித்தருள்பாலிக்கவைகினனே. (க)

வைத்தானையாலசுரக்குழுமாய்த்தவன்மாவைமனுல்
கைத்தானையாலொருகானக்குறத்திகளபமுலை
துய்த்தானையாறமர்பெம்மான்மகன்றன்றொழும்பிலெனை
யுய்த்தானையாதுபொய்த்தேவர்தொழும்பினையுற்றுநின்றே. ()

உற்றவனன்பர்க்குருதவனன்பிலுளத்தினர்கண்
முற்றவனன்குணர்ந்துய்யமெய்ஞ்ஞானமொழிந்தவன்மால்
கற்றவனன்றொழுமேயதென்மாவைக்கடவுட்டொழப்
பெற்றவனன்றுவரும்வினைவேரறப்பெற்றவனே. (ங)

பெற்றம்பலத்தையுயவேண்டின்ஞானம்பிறங்குதிருச்
சிற்றம்பலத்தரன்சேய்மினிர்சங்கந்திகழ்வயலூ
றற்றம்பலத்தினுழுமீழமாவையுறுமினொளிர
பற்றம்பலத்தின்மதித்துவிடுமின்பயன்பிறவே. (௫)

பிறவாதவநயனம்பன்னிரண்டுபிறங்குமுகக்
குறவாதவநன்குளுற்றேனெனினுங்குறைகடற்செந்
நிறவாதவனண்மியாங்குமயின்மிசைநீவந்தரு
ளெறவாதவனம்பயிலீழமாவைச்சுடர்க்கொழுந்தே. (௬)

கொழுந்தேறல்வாய்ச்சியர்கொம்மைப்பயோதரக்குன்றுதட்ப
விழுந்தேறலின்றிமெலிநெஞ்சுகேள்விவிமரிசத்தா
லெழுந்தேறல்கூடிமெய்யானந்தநிட்டையையெய்தியதி
லழுந்தேறதேறிதருமாவைவேள்பணியாவதிதே. (௭)

ஆவணத்தானன்றுசுந்தரரைத்தடுத்தாண்டதிருப்
பூவணத்தானன்மகன்மிடையும்மெழிற்பூகமரக்
காவணத்தானன்குயர்வீதிமாவைக்கடவுடனைப்
பாவணத்தானன்பினிற்பாடுவோரறுப்பாரிடரோ. (௮)

பாராலமங்கிபவனம்விண்டந்தபகவன்கொடும்
பேராலமங்கந்தரித்தோன்சுதன்பிரதாபமிகு
சூராலமங்கலமேயசுரரைப்புரந்தவன்மா
வாராலமங்கிசைமாவைமன்பாதமடைந்தனனே. (௯)

அடையார்புரத்தடையாதவராதிபகவர்வெள்ளை
விடையார்புரத்தையழலுக்களித்தவிடலர்பிறங்
கடையார்புரத்தறிடமாவைசேர்மின்கறைமருவு
முடையார்புரத்தைதநிலையாவெணியுழன்முடர்களே. (௧௦)

படகத்தார்வழிகேட்டுழலாமன்முதுக்குறைவு
கூடகத்தார்குமரன்குறமாதுகொழுநனெழிற்
சூடகத்தார்நடநீங்காதவீதிகடோறுமொளி
யாடகத்தார்திகழ்மாலைச்செவ்வேள்கழலாய்ந்துய்ம்மினே. ()

ஆயத்தனுயிருந்தான்மவருக்கடளிப்பவன்வே
ரேயத்தனுயிருமாகமத்தின்பொருடெய்யகுறட்
காயத்தனுயமுனிக்களித்தோன்கழற்கேகமென்றன்
சாயத்தனுதருடந்தனன்மாலைத்தனிப்பதிக்கே. (௧௧)

தனித்தவனுறுதலையிட்டமுப்பதின்மேற்சயிலங்
குனித்தவனுறுதலைக்கணிந்தோனுதற்கோமுளரிச்
சனித்தவனுறுவெட்சித்திருத்தாரன்றனதடியார்க்
கினித்தவனுறுதல்போக்கநன்மாலையிருந்தனனே. (௧௨)

இருந்தவனம்புயத்தேய்ந்தொர்சரவணத்தேத்துமொரு
பெருந்தவனம்புபதேசன்மெய்ஞ்ஞானப்பெரியருக்கோர்
விருந்தவனப்புறவோடாடுமாலைவிரும்பிவள்ளி
யருந்தவனம்புனையண்ணறன்சேயெற்கருந்துணையே. (௧௩)

அருத்திதனங்கழற்காக்கினர்த்தேவர்தொழத்தன்பதி
யிருத்திதனங்கரவாதிரப்போர்பெறவீகணவர்
கருத்திதநங்கையர்சென்மாலைவேடன்கடிவரையி
லொருத்திதனங்கண்டுமீளண்ணலேயுரவோனிலத்தே. (௧௪)

உரகந்தரிக்குமொருவர்நுதலிலுதித்தவர்நல்
வரகந்தரிக்குவளரீழமாலையர்வான்மங்கல
தரகந்தரிக்குமணாளர்கழலைத்தமதுள்வைப்பார்
நரகந்தரிக்குநரல்லரென்றோதுநலமறையே. (௧௫)

மறையினந்தத்தின்மிளிரவேரயர்நான்முகவள்ளலும்வாற்
கறையினந்தத்திருக்கையனும்போற்றுங்கடவுள்கடற்
றுறையினந்தத்துவளவீழமாலைச்சுவாமியென
வறையினந்தத்தருமற்கஞ்சலில்லையகமெலிந்தே. (கசு)

அகன்றங்கிங்கென்றுரையாடாதுயிர்தொறமர்ந்திடுசண
முகன்றங்கிளைடொடுநாரதரன்றுமுதுமறைநூல்
புகன்றங்கியோம்புழிப்போந்தகரோறும்புனிதனுமை
மகன்றங்கிமாலையிலெற்கருள்சாலவளித்தனனே. (கஎ)

அளியார்கடம்புபுனைமார்பாவள்ளியமுதவிதழ்க்
களியார்கடந்தபரானார்மெய்ஞ்ஞானக்கதிர்விழியர்க்
கொளியார்கடங்கிளர்மாலைத்தலைவவுனதிடஞ்செல்
கிளியார்கடந்தமொழியாலிருந்தனள்கேடின்றியே. (கஅ)

கேடகத்தோடசியேந்திமகவிக்கினங்கெடுப்போன்
மாடகத்தோடிசைகேட்டுமகிழுமடப்பிடிநே
ராடகத்தோடணியம்பிகைபாலனமர்ந்திருப்போ
னேடகத்தோடணிந்தோன்மகன்மாலைமனென்புகலே. (கக)

என்புகலாதவர்கோடியின்மாமயிலின்னிலங்கு
மன்புகலாதவருள்ளம்புகாதவன்மாலைச்செவ்வேட்
கன்புகலாதவர்துன்னுஞ்சுரஞ்செலணியிழைதன்
முன்புகலாதவடுன்மலரோடையின்மூளுகவே. (உ0)

மூண்டமருவலர்வீயமுன்றுளொர்மூதிர்கினவே
லாண்டமருவலரம்புயக்கையரடைந்தவர்க்கோர்
மாண்டமருவலகந்திகழ்மாலைக்குமரர்க்கன்பு
பூண்டமருவலஞ்சேணிப்பேரமனார்தமக்கே. (உக)

ஆரத்திமாச்சண்பகமுதற்றாருவடர்ந்துமதக்
காரத்திமாமுழங்கீழத்துமாவைக்கடவுளையன்
றோரத்திமாதுசெயுங்காழிவேந்தருளத்தனைக்கார்ப்
பேரத்திமாமுதல்செற்றானைப்பாடப்பிறப்பறுமே. (௨௨)

அறங்கணாநாவினருள்ளத்தன்வாழையகத்தண்டைநேர்
குறங்கணாநாயகிவள்ளிக்குவாய்த்தகொழுநன்கடற்
புறங்கணாநாகம்வளரீழமாவைப்புரித்தலைவ
வுறங்கணாநாளிரவோருகமாகிடுமொண்டொடிக்கே. (௨௩)

தொடிக்கைக்கருங்கட்சுருளோதிவாணுதற்றெய்யின்முலைப்
படிக்கைக்கருமெழில்வள்ளிக்கொடிபடரும்புயத்தர்
தடிக்கைக்கரும்புவளரீழமாவைத்தலத்தருடம்
பிடிக்கைக்கருத்தமனாதனைப்போற்றல்பெரிதான்றே. (௨௪)

பெரும்பங்கையம்பிகைக்கீந்தவன்சேய்மென்பிரசமலி
தரும்பங்கையம்புனைசேவடியோர்க்கிடந்தண்கழனிக்
கரும்பங்கையம்பிடியோடுதின்றேகிக்கடிகமழ்பூ
வரும்பங்கையங்குடையீழத்துமாவையணிநகரே. (௨௫)

அணித்தாருவாமுகத்தையற்கிளையவரம்புனத்தோர்
கணித்தாருவானவர்தெய்வப்பிடியைக்கதிர்ப்புயத்தாண்
பிணித்தாருவானவர்பேரிடர்தீர்த்தவர்பேரருள்வெண்
மணித்தாருவாமதியிற்றிகழ்மாவைவணங்குநர்க்கே. (௨௬)

வணத்தவராகமுன்மேருவையாண்டவர்வாலியவெண்
குணத்தவராகத்தொர்கோமனத்தேவியைக்கொண்டவர்பற்
பணத்தவராகந்தரித்தவர்பாலர்தம்மாவைதனை
யுணத்தவராகமணித்தனையொன்றனக்கிப்பிறப்பே. (௨௭)

இப்பந்தமாயப்பொய்வாழ்வினிற்பட்டுழலேழைநெஞ்சே
யப்பந்தமாமுடிவைத்தவன்மாமகனார்தழைய
கப்பந்தமாலைப்பொழிலீழமாவைக்கருணையன்சீர்
செப்பந்தமாம்பிறப்பானந்தவாழ்வுநிற்சேருமன்றே. (உ அ)

சேர்ந்தனந்தாமரைவாழீழமாவைத்திருப்பதியி
லார்ந்தநந்தாவிளக்கேயறிவானந்தவாதியருள்
கூர்ந்தனந்தாதிகுரவற்குமோர்குருவாயநின்சீ
ரோர்ந்தனந்தாழ்விலமாலினியோரெழுதோற்றத்துமே. (உகூ)

தோற்றினன்றிக்கிளையாதியபொய்யெனச்சோலைவயற்
சேற்றினன்றிக்குவளரீழமாவைச்செவ்வேடகர்வ
லேற்றினன்றிக்கொரொட்டும்பணிவேல்கையெடுத்துமுன
நீற்றினன்றிக்கிரிசாடிபொற்றுண்ணிலவலின்றே. (௩௰)

நிலவிலம்பாடுதவிர்த்தோற்கினியநிமலன்வன்கற்
புலவிலம்பாடுமெளிக்குழல்வள்ளிடணர்புயனற்
பலவிலம்பாடுகரத்தனன்மாவைப்பதியனுமர்க்
குலவிலம்பாடுசிதையுங்கலக்கிற்குறத்தியையே. (௩௧)

குறத்திக்குவாய்த்தகொழுங்கனிவாணிழக்கொடுங்குலையிற்
புறத்திக்குவாயிரெழுநுந்திகழ்மாவைப்புனிதனைச்சார்
வுறத்திக்குவாய்முகத்தேனைச்சிறையிடுவோனையுனி
யறத்திக்குவாழ்பவராள்வரத்தேவரணியுலகே. (௩௨)

அணிக்கச்சிவந்தொருகோட்டங்கொண்டோனன்றலைகடன்
துணிக்கச்சிவந்தவயின்மாவைவாணன்சுருதிமலைக் [மாத்
கணிக்கச்சிவந்திகழ்ந்தாங்குப்புறத்துக்கதித்தருவ்
மணிக்கச்சிவந்தனைச்செய்தறியாட்டின்மற்றொன்றுமே. (௩௩)

மற்றனையாழிந்தலைவயமெலாமொருவான்குடைக்கீழ்ப்
பெற்றனையாதிசதுரங்கஞ்சூழப்பிறங்காரு
முற்றனையாவிடர்மூழ்குநெஞ்சேநல்லுறுதிவெஞ்சூர்ச்
செற்றனையாறுமுகமாவைவாணனைச்சேவிப்பதே. (௧௪)

சேவிக்கமலர்கொடுநாற்றிசையுந்திருத்தொண்டர்சேர்
வாவிக்கமலந்திகழும்புள்ளூரநன்மாவைப்பதி
மேவிக்கமலத்தயன்பணிசெய்திடவீற்றிருப்போய்
பாவிக்கமலம்வருவித்தடியுட்பதிப்பதென்றே. (௧௫)

பதிகந்தவாகுமுதனவவீரர்பரசமுனம்
விதிகந்தவாகவனசனிற்கண்டவிமலவர
நதிகந்தவாகனெரிபரித்தேத்தநயந்தவநெஞ்
சதிகந்தவாநின்கழறொழுமாவையைச்சாரச்செயே. (௧௬)

சார்வாகனாதிசமயத்தர்தேறருஞ்சண்முகமுன்
போர்வாகனாதவற்காய்ந்தாற்றெறவருள்போதமயி
லேர்வாகனாவெழின்மாவைப்பதிவருமெந்தையென்ற
னோர்வாகனாவிற்றுயிற்கீழ்த்துரியநிகழுமுன்னே. (௧௭)

நிகமாகமங்களிரண்டின்முடிவினில்வுசத்தாங்
குகமாகமங்குறவழ்மாடமாவைக்குமரவெழின்
முகமாகமங்குவிடுங்காமவாளியின்மூழ்கியொரல்
லுகமாகமங்கைதுயிலாடொடையலுகந்தருளே. (௧௮)

உகவனந்தங்கதிராதவர்போன்மயிலூர்ந்தொளிர்சண்
முகவனந்தங்கினர்செங்கைக்குரிசின்முதலிமையோர்
பகவனந்தங்கவல்பாற்றெனச்சூரைப்படுத்தவன்சேர்
மிகவனந்தங்கும்வயலீழமாவையைவேண்டிநெஞ்சே. (௧௯)

வேண்டவரம்பலவீமாலைவாணரைவேண்டியன்பு
பூண்டவரம்பொனடியேயுளத்துட்பொதிகவினை
யாண்டவரம்பொரும்பொன்போலத்தேயுமடையுமுங்கண்
மாண்டவரங்கொள்சிவானந்தபோகமெய்வாழ்வுமன்றே.(சo)

வாழத்தினகரமகரமுன்மாய்ந்தெனமாயும்வினை
தாழத்தினகரும்பணிக்கருளுஞ்சிவன்றன்மகனற்
போழத்தினகரன்போன்றெளிர்மேனியன்மாலையெனு
மிழததினகரனுறெழுத்தன்புடனெண்ணுமினே. (சக)

எண்ணம்பகமுடைப்பண்ணவன்மால்பதமெய்தவெண்ணித்
தண்ணம்பகநின்றுளுற்றுந்தவத்திர்தனிப்பணிரு
கண்ணம்பகவனைமாலைப்பிரானைக்கருதிர்ந்தந்
திண்ணம்பகர்வருமீளாப்பரகதிசேர்விரன்றே. (சஉ)

சேரத்திரிபுரமும்வேவமூரல்சிறிதரும்பு
வாரத்திரிமனைவேண்டக்கருவில்வரார்மகனை
யோரத்திரிமுற்பிளந்திடுவேலனையும்பர்வலி
பேரத்திரிமயில்செற்றனைமாலைப்பிரானைநெஞ்சே. (சங)

பிராசாதமாக்கலையும்பர்ப்பிறங்குபிரானருள்கு
மராசாதமாக்கலைகல்லார்மனத்தின்வயங்கவில்வேற்
கராசாதமாக்கும்வினைபோக்கிடப்புற்கலருங்கருத்
தராசாதமாக்கந்தருமாலைமேவியதற்பரனே. (சச)

தற்பதத்தோபெரயதமானவச்சங்கரியாம்
பொற்பதத்தோடணியுந்தேவிகண்டற்புதமடைய
முற்பதத்தோடிவினையாடுபாலனைமுன்னுவனென்
சொற்பதத்தோடங்கொளாதருண்மாலைச்சுவாமியையே. ()

சுவானந்தமாக்ச்சிவானந்தமுண்ணுந்துகளிலன்பர்க்
கவானந்தவன்னருடவிலமாக்கொண்டமர்சண்முக
தவானந்தவாவித்தடவீழமாவைத்தலைவவனுற்
பவானந்தமாவினைதீர்த்தெனையாடல்பரமுனக்கே. (சசு)

பரந்தபராபரைசிராட்டுபிள்ளைபணிவிபுதர்ப்
புரந்தபராகவெண்ணீறணிமேனிப்புனிதவருள்
சுரந்தபராதம்பொறுத்தாளுமாவைச்சுவாமியெற்கீ
வரந்தபராகமொடுன்னடியாரைமருவுதற்கே. (சஎ)

மருக்கடம்பந்தொடைசேரும்புயத்தர்மணித்துவசந்
தெருக்கடம்பந்திகழ்மாவைவாணர்சிவன்றனக்கோர்
குருக்கடம்பந்தென்றறுமாதர்போற்றுங்குமரருண்ணுள்
ளிருக்கடம்பந்தனைவேண்டிநெஞ்சேபுறத்தேகுவையே. ()

ஏகம்பத்தாதிப்பிரானைக்கயிலையெடுத்துமூனம்
பூகம்பத்தாக்கிநிலையிற்பிறழப்புரிந்ததிறன்
மாகம்பத்தானுக்கருளீசற்கோமொழிமாவைக்குக
சோகம்பத்தாதவிரென்றுமுன்வாமன்றேன்றிடினே. (சகூ)

தோன்றக்கனைகதிர்முன்னிருள்போல்வினைதோற்குநெஞ்சு
ளூன்றக்கனைகழற்செவ்வேனைத்தேவரொழுக்கொழித்த
கோன்றக்கனையொறுத்தாண்டருளீசன்குமரனைநான்
மூன்றக்கனையெழின்மாவைப்பதியின்முருகனையே. (ருo)

முருகக்கடவுளைமாவைக்கிறையைமுதற்பொருளைப்
பருகக்கடன்முனிலைவேல்விடுத்தபரனைமதம்
பெருகக்கடமுடைப்பெம்மாற்கிளையபிரானையெணி
யுருகக்கடவைமணமேகடத்தியுய்ற்பவமே. (ருக)

உற்றலையாய்பவத்துய் திரெஞ்சேயிவ்வுலகவின்பம்
புற்றலையாய் துளிபோணிலையாதிப்பொருளுடலைப்
பற்றலையாய்த்தனிமாவைக்குகன்றன்பரந்தபுகழ்
கற்றலையாய்தலையேநிதநீசெய்கடைப்பிடித்தே. (ருஉ)

கடையாரல்போன்றெழுவெஞ்சூரைவீட்டுங்கதிருமிழ்வேற்
படையாரல்போன்மொழிர்கூர்ந்தற்செவ்வாய்ப்பணைத்தோ
ரிடையாரன்மாதர்க்கறுபாலராகியிருந்தவர்க்கன் [ளொருசிற்
புடையாரல்லார்க்கரிதோங்கெழின்மாவையுறப்பெறலே. ()

உறக்கத்துக்கைப்பொருள்போனிட்டையிற்பணியோதலன்றி
துறக்கத்துணிதலபராதமென்றுசுருதிபயம் [த
பிறக்கத்துகளிலுரையாற்கழறவும்பேதையர்புன்
புறக்கத்துறைகொடுமாவைப்பிரான்பணிபோக்குவரே. (ருச)

போக்கலைமாதவம்போன்றிடைவாட்டும்புணர்முலையீர்
பூக்கலைமாதுதிகழ்மாவைச்சேர்தன்பொருப்பிற்புனங்
காக்கலைமாண்டொழிலாக்கொடுகைவகுவிர்கண்டிர்கொலோ
மாக்கலைமாவெஞன்றென்வாளியின்மூழ்கிவரவிவணே. (ருரு)

வரவாகுவாகனத்தேவற்கினையவமானவயவே
றரவாகுவாதிகவீரர்தம்முன்றணிகைவரைச்
சிரவாகுவாதியெட்டாகுனென்றனையதிருச்செந்தின
கரவாகுவாணவம்விண்டோடவென்னகக்கஞ்சத்திலே. (ருசு)

கஞ்சத்தளிமுரன்றுமுழுமாவைக்கடவுளென்ற
னெஞ்சத்தளியகலாதுறைசேய்வெற்பினேரிழையுன்
விஞ்சத்தனிக்குமுகமந்தகாசமிழுலைப்பிரான்
பஞ்சத்தளிக்கும்படிக்காசபோன்மகிழ்பாலிக்குமே. (ருஎ)

பாலிக்கமாவிதமெவ்வுயிர்க்கும்மருள்பாலிபண்டொர்
ரீலிக்கமாவிலையைவிட்டாருயவருணின்மகன்சே
யாலிக்கமாவினையட்டருள்வோய்சுரராலைதுறும்
வாலிக்கமாவளவீழத்துமாவைநல்வானவனே. (ருஅ)

வானந்தமாருதமாவனனீர்மண்மடியினுமோர்
தானந்தமாதலில்சங்கரன்சேயத்தகுவர்கடங்
கோனந்தமாவயிலாள்குகன்கோயில்குரூச்சுடர்கொள்
சூனந்தமாழியிற்சத்திக்குமாவைத்தொலைப்பதியே. (ருகூ)

தொலைத்தாண்டவன்றுயர்நக்கீரனைமுற்சொலற்கரிய
திலைததாண்டவன்மகன்மாவைச்செவ்வேளிற்றிருந்தொருவர்
கொலைத்தாண்டவன்மிருகப்பூங்குழல்புகுவார்மக்காச்
சிலைத்தாண்டவன்னிகடிவாரின்மீள்வரென்செய்தக்கதே. ()

செய்த்தலைவாளையுகளிழமானவத்திருப்பதிவாழ்
வைததலைவாளயிலேந்திபொற்றுளைமனத்திருத்து
மெய்த்தலைவாவுன்னருந்தழைமென்னைவிரும்பிக்கொண்டா
மெய்த்தலைவாணுதனுடினாற்பிறசொல்வதேனே. (கூக)

மசான்றான்பிரமவுபதேசமாரிடர்தோமகல
முனான்றான்பிரமம்பிரமமென்றோதுமுகிலின்வணை
மன்றான்பிரமனறியாச்சிவன்மகனன்பிலர்க்கோ
ரொன்றான்பிரமரக்காணிழமாவையுறைபரனே. (கூஉ)

உறைவனத்தன்னயனோடவ்வுருத்திரனோதற்கரு
பிறைவனத்தன்றிருஞானசம்பந்தனிசைவிரும்பு
மறைவனத்தன்றிருமாமகன்வண்மருதத்தடத்திற்
சிறைவனத்தன்னமுறையீழமாவைத்திருப்பதியே. (கூ௩)

திருமாலயன்முதற்றேவர்வணங்குந்திருச்செந்திலென்
பெருமாலயன்முதுகுன்றின்மகிழும்பிரான்றனக்கோர்
குருமாலயன்முகிறோய்மாடமாவைக்குகன்கடப்ப
மருமாலயன்முளரித்தாண்மருந்துமலப்பிணிக்கே. (சுச)

மலக்காயவாழ்வையினிதென்றெண்ணுமென்மனமுனருட்
கிலக்காயவாவறலென்றுகொன்மாவையிறைவமுனம்
பலக்காயவாறுசெல்பண்ணவனேவப்பறித்தவன்மால்
விலக்காயவாலமெனவயின்றோனருள்வித்தகனே. (சுரு)

வித்தாரமாக்கவிக்குண்மகிழ்மாவைவிசாகன்வெற்பிற்
புத்தாரமாக்குழம்பும்யாமிளமுலைப்பூசலொட்டேங
கொத்தாரமாக்கலைதேரண்ணனீகைக்கொடுவெருமிம்
முத்தாரமாக்கந்தருமோசொல்சிற்றிடைமொய்குழற்கே. (சுள

மொய்யார்கடம்புடையோங்கீழமாவைமுருகரயிற்
கையார்கடம்பணிதோளாரிரண்டுகெழற்கன்பினைச்
செய்யார்கடய்வினைதீராவொன்றேமறைசெப்புமிந்த
மெய்யார்கடந்துபிறதேவின்வெவ்வினைவீட்டினரே. (சுஎ)

வீட்டினன்றிப்பியமாமாவைவேளைவிரிஞ்சன்றலை
யோட்டினன்றிற்பலிதேரிறைசேயையொருபதிக
வேட்டினன்றிக்கிளர்புண்சயண்சாய்த்தன்றிணையில்சிவ
நாட்டிநன்றித்தளைவைத்தாற்கினியனைநட்டிடடோ. (சுஅ)

நட்டவராகண்டலனைவிண்டயனைநாமனைவே
றொட்டவராகண்டக்தோறுந்துரக்குதொலைத்தவர்கொ
றுட்டவராகண்டம்பூண்டார்தக்தோன்றலர்மாவைதொழிற்
சூட்டவராகண்டவெவ்வினையாவுங்கெடறிடமே. (சுகூ)

கெடவரலாயத்துணிபுகுந்தாடுகிளவொளிப்பூண்
மடவரலாயத்தமாதவன்சேருமுன்வந்தவனை
யடவரலாயத்தனுமாவைவாணர்நமைப்புரக்கக்
கடவரலாயத்திருழ்புவியுண்ணக்கடுகினுமே. (எ0)

கவிகையம்மாரனுக்காமிதென்றெண்ணல்கருங்குழலாய்
சிவிகையம்மார்தெருமாவைச்செவ்வேளிற்றிகழ்வதுவெப்
பவிகையமாவிஃதூற்றமுதாலன்றியாதவிலை
குவிகையம்மானமுடிமேற்றிகழ்திங்கட்கொழுந்தினுக்கே. ()

கொழுமையருத்திவெறியாட்டயர்ந்துகுறவாதுன்றி
முழுமையருத்தியொடேத்துங்குறிஞ்சிமுதலவருட்
செழுமையருத்திபலசால்செழுந்தமிழ்மாவைசனைத்
தொழுமையருத்திகெழுமுடிச்சேடன்சுமையலரோ. (எஉ)

சுமையனைமாரினித்தூக்கிநையாதருளத்தொழுவ
னமையனைமாரிவளமாவைவாணனைநாரிக்கொரு
தமையனைமாரிவணமான்மருகனைத்தாரகன்செ
யமையனைமாறிடமுன்வடிவேல்விடுமண்ணலையே. (எங)

அண்ணப்பன்மேவிலனம்மென்குதலைதிருந்திலள்கார்
வண்ணப்பன்மாமயிர்கூடமுலைகள்வளரப்பெருள்
கண்ணப்பன்றெண்டுக்குளமகிழீசன்கனல்விழியி [தே.
னண்ணப்பன்மாவையனையாட்கெனேமன்னநான்சொல்வ

நானரம்பாய்வடிவேவிற்பிறழுங்கண்ணுயகிமா
வானரம்பாய்பொழின்மாவைச்செவ்வேள்கழன்மாணிழல்
மேனரம்பாய்வலியாழோர்மணமின்றுமேவவுன்றோ [போன்
டீனரம்பாய்வளர்பூமல்லிகைப்பந்தரீங்கிசைந்தே. (எரு)

ஈராறுகைக்குமியற்றுந்தொழில்களெழின்முகங்கள்
சேராறுகைக்குஞ்செவ்வேண்மாவைவாணைதெரிவைகங்கைப்
பேராறுகைக்கவுமைமுலைப்பாலுண்பெருமமதன்
போராறுகைக்குன்புயமாலையீந்தருள்பூங்கொடிக்கே. (எசு)

பூங்கலையக்கணைரன்பாலன்மாவைப்புரியையொப்பா
யாங்கலையக்குழல்செய்வதல்லாலணிசெய்யமலர்
தாங்கலையக்கனல்போல்விழிசேக்கத்தனங்கள்விம
வாங்கலையக்கிரிமாண்சுனையாற்றவும்வல்லதுவே. (எஎ)

வல்லைபபுறந்தருமாமுலைமாள்கலைமாவைப்பிரான்
றில்லைப்புறந்திகழம்பலத்தான்றருசேயருளாற்
றொல்லைப்புறம்பணைசூரியவெப்பிற்றிரிந்துபடுங்
கல்லைப்புறவருந்தும்பாலையாறுகடந்தனமே. (எஅ)

கடக்கரடக்கயமாமுகன்றம்பிகருணைசெய
விடக்கரடக்குந்தமிழ்ப்புலவோர்க்கருளேந்தலென்றுந்
தடக்கரடக்கைமுழக்கிடப்பூதர்தருவர்வினைத்
துடக்கரடக்கியமாவைச்செவ்வேளென்றுஞ்சொல்லுநெஞ்சே

சொற்கலைமாதமர்த்தேவாழுமாவைச்சுவாமிதொல்சீர்
கற்கலைமாதவொடன்னவன்றொண்டுகடைப்பிடித்த
வற்கலைமாதவர்கூட்டம்விரும்பிலைவஞ்சநெஞ்சே
பொற்கலைமாதரையெண்ணிலைவாயிதுபுத்தியன்றே. (அ0)

புத்திமன்றுளரிபோல்வான்றலைமகன்போதமிலாப்
பித்திமன்றுதவிளைமையனோடுபெயருங்கொலோ
வத்திமன்றுகம்வளரீழமாவையமர்ந்துறையு
முத்திமன்றுறுமுகன்றுளங்கொண்முனிவர்களே. (அக)

முனிவரைமங்கணிகளொடுமோகமொழித்தருள்செய்
பனிவரைமங்கையொர்பங்குடையான்மகன் பௌவவிம்மே
இனிவரைமங்குறவழ்மாடமாவைநற்சேந்தற்கன்ப
வினிவரைமங்கலமேங்கவிவளையெமர்தரவே. (அஉ)

என்பணியாவையுநின்கழலுக்கென்றியற்றநந்த
மன்பணியாவையுரித்துண்ணுநந்தர்க்கும்வான்பதந்தந்
தனபணியாவையமேத்தச்செயண்ணலருள்சுதமான்
முன்பணியாவைகிடும்வாயின்மாவைமுதற்பொருளே. (அந)

முதலைச்சமமில்பொருளைப்பதியைமுரண்கெழுசூர்
விதலைச்சமரங்கடந்தருண்மாவைவிசாகனைமென்
குதலைச்சமங்கலைவள்ளிக்குளமகிழ்கொண்கனையன்
சுதலைச்சமன்செயவாராமுன்வேண்டித்துதிசெய்ம்மினே. ()

துதியாரணம்பரவுங்கந்தவேளைத்தொடர்ந்தவன்வாழ்
மதியாரணம்பொழின்மாவைப்பதியைவணங்கருளு
ததியாரணம்பல்லிறுகத்தடங்கண்சுழலவுடற்
பொதியாரணம்படவீழ்ந்துயிர்போமுன்புலைநெஞ்சமே. (அரு)

புலையாகமங்கலைநீர்மேலெழுத்தினிற்போதலொரு
தலையாகமங்கலமாவைச்செவ்வேடந்ததாவில்பல
நிலையாகமங்கலைகல்லார்க்குறுதிநிலையெதென்றூர்
கலையாகமங்கணர்வேட்டார்கொதேறிலன்காரிகையே. (அசு)

காரங்கத்தானவரோடுவெஞ்சூரைக்கடலினயில்
வாரங்கத்தாரண்டரோத்தெடுத்தாடவதைத்தவிறற்
பேரங்கத்தாநன்குயர்மாவைவாணன்பிறங்குமெழிற்
சீரங்கத்தானத்திருமான்மருகெங்குலதெய்வமே. (அஎ)

குலமாதரம்மனையாடினரொங்குங்குழமிவைகும்
பலமாதரம்மனையோங்கெழின்மாலைப்பதிக்கந்தற்பா
டலமாதரம்மனையோற்கன்புசெய்யவடுத்தவிப்புற்
கலமாதரம்மனைதீவினைகோலல்கயமைநெஞ்சே. (அஅ)

கயந்தலையம்பிடியோடுகளிறுகடிதுசென்று
நயந்தலையம்படிந்தாடீழநங்கைக்குநல்லமுகாம்
புயந்தலையம்பகமாமெனுமாலைபபுலவற்கண்டாம
பயந்தலையம்பகரோந்துசெல்பாசப்படிறனுக்கே. (அகூ)

படித்தலம்வந்தளந்தோன்முதற்றேவர்பண்டஞ்சிநஞ்சந்
துடித்தலம்வந்துகடிதோடினர்சென்றுசோத்தமென்று
வடித்தலம்வந்தனைசெய்திடக்காத்தவரன்மகன்வாழ்
கெடித்தலம்வந்தியங்கும்மாடமாலைக்கிளர்நகரே. (கூ0)

நக்கனயக்கநகைவாணுதலுமைநங்கையிவர்
பக்கநயக்கநவீற்றிருக்குமொர்பாலன்றிகழ்
சொக்கனயக்கலைமாதுறைமாலைதொழாரிற்சுரந்
தைக்கநயக்கமொதுள்ளிவாடுநெந்தம்மையன்றே. (கூக)

தந்தாவளந்தங்களியாடுகோணத்தடங்குன்றுசேர்
நந்தாவளந்தங்கணியீழமாலைநகர்க்குமரா
கந்தாவளந்தங்கவொண்ணாங்கரேந்திகதியிலன்னா
லந்தாவளந்தங்கமர்மான்மருகவடைக்கலமே. (கூஉ)

அடைக்கக்கனிகளதிகந்தந்தத்துறக்கத்தவர்கைக்
கிடைக்கக்ககனம்பலத்தங்கினைவிடுமாலைமன்சிற்
றிடைக்கக்கணக்கரத்தெய்வதயானைக்கிறையன்றிவாய்
தொடைக்கக்கவையிவ்வுயிர்போகுங்காலைத்துணையில்லையே.

துணங்கைகடந்துமயல்குடர்மாலைகடோட்கொண்டள்ளி
நிணங்கைகடந்தம்பிலவாய்நிறைக்கநிருதர்ச்செற்றோன்
வணங்கைகடந்தங்குகேதீச்சுரர்மைந்தமாவைக்குக
குணங்கைகடந்தபரானந்தவாழ்வுகொடுத்தியெற்கே. (கூச)

கொடுங்கந்தமாமலராளிவெம்பூசலிற்கோட்பட்டுயிர்
விடுங்கந்தவார்குழனுமணைந்தாற்றவிளைந்துபொற்றேர்
கடுங்கந்தவாகன்பிறக்கிடப்பாககடவுவினை
யடுங்கந்தவேடிருமாவைக்குமரனருவரைக்கே. (கூரு)

அரவிந்தவாவிதிகழீழமாவையமர்ந்தவன்வாள்
வரவிந்தவாரிசடைக்கணிந்தான்மகன்வள்ளயில்வேற்
கரவிந்தவான்கிரிநேர்குயவள்ளிகணவற்கன்ப
விரவிந்தவாமரையூன்றின்றுறங்கிச்செலெற்பட்டதே. (கூசு)

எற்பந்தஞ்செய்யும்வினைவேரறுத்தெனையேன்றருள்வா
யற்பந்தஞ்சென்றுன்னடியடைந்தேனக்கிரவுஞ்சப்பேர்
வெற்பந்தஞ்செல்லவடிவேல்விடுத்தருண்மாவைக்குக
பொற்பந்தஞ்சேமமுலைவள்ளிசேரும்புயவெற்பனே. (கூஎ)

புரந்தரன்மாலயனுதிபுத்தேளிர்முப்போதும்வந்தங்
கிரந்தரன்மாமகன்சண்முகன்கந்தனென்றேத்தெடுப்ப
வரந்தரன்மாபயந்தீர்த்தல்கண்டின்றிருமாவைதொழேன்
கரந்தரன்மாதவங்கண்ணுவென்மக்கட்பிறப்பினன்றே. (கூஅ)

பிரசங்கமுத்தமிழ்ச்செங்காப்புலவர்பிரானயில்வேற்
கரசங்கமுத்தம்வரன்றுங்கல்லோலக்கடற்செந்திலோய்
பரசங்கமுத்துக்குமாரநன்மாவைப்பதிப்பரம
வரசங்கமுத்தருள்வைத்தெனக்கானந்தவாழ்வுநல்கே. (கூகூ)

வாரணியம்பதிர்பூண்முலைவள்ளிமணாளனொரு
காரணியம்பிகைபாலனச்சங்கரன்காதலனித்
தாரணியம்பரமேத்திழமாலைத்தலன்புகழ்கற்
போரணியம்பலமேவவுவந்தருள்பூக்கும்பொனே. (௱)

## மாலையந்தாதி முற்றிற்று.

——:0:——

தாவருநற்றிருக்கயிலைத்திருநந்திமரபுநனிதழைக்கப்போந்த, தேவருவொன்றில்லாதமாதவத்தோரகவிருளைச்சிக்கும்பானு, மாவருவின்வகிரன்னகண்ணிவழிபடமாசின்மணிதான்மேவு, மாவடுதண்டுறைசையிற்சுப்பிரமணியகுருபரன்றாளடைந்துய்ந்தேனால்.

குறியமுனியருளியமெய்வரத்திறலவதரித்துக்கோதின்ஞானத், துறைசைநமச்சிவாயகுருவருட்கடலும்வடமொழிதென்மொழிப்பேர்த்தூய, நிறைகடலுமுண்டபுனிதாத்துவிதசிந்தாந்தநிலவப்பூமேன், மறைமொழிமெய்ச்சிவஞானபாடியஞ்செந்தமிழ்வகுத்தயோகிவாழி.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

மதுரை

மீனாட்சியம்மை

# பதிற்றுப்பத்தந்தாதி.

கருவூரைச்சார்ந்த

நல்லமாகாளிபபட்டி

சு. தெய்வசிகாமணிக்குருக்களவர்கள்

இயற்றியது.

இஃது

கோயமுத்தூர் ஜில்லா

ஆண்டிப்பட்டி ஜெமீன்

துரையவர்கள்

மகா-ள-ள-ஸ்ரீ

துமாரப்பெரியதம்பிப் பொம்மைய நாயக்

விருப்பப்படி

“தஞ்சை நாஷனல் அச்சுக்கூடத்

பதிப்பிக்கப்பட்டது.

விரோதி ஹு வைகாசி மீ.

பாயதம்பிப் பொம்மயநா

# சிறப்புப்பாயிரம்.

தஞ்சைமாநகரம்

சதாவதானம்

மகா-ள-ள-ஸ்ரீ

## சுப்பிரமணிய ஐயரவர்கள்

இயற்றிய

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

செங்கையிற்குட் சங்குடையான் றங்கையெனத் தென்கூடற்
    றிருநகர்க்கண்
நங்கையர்க்குள் ளரசாகித் தங்கியருள் பொங்கியெங்கு
    நாடிப்பாயும்
அங்கயற்கண் ணம்மையடிப் பங்கயத்திற் பதிற்றுப்பத்
    தந்தாதிப்பா
மங்கையைக்கண் டிங்கிதமாப் பணிவித்தான் றெய்வசிகா
    மணிவிதவானே. (௧)

பண்ணியவப் பாமங்கை வடிவமெலாம் பண்ணுறுத்தும்
    பான்மையென்ன
இந்நிலத்தி லெவ்வெவரு மெளிதினிற்கண் டின்புறவச்
    சிட்டான்வண்மை
மன்னுமெழின் மழைசைநகா வாழிறைவன் மாநிதிக்கோன்
    மாரனசேடன
அன்னவன்மன் னனைகுமாரப் பெரியதம்பிப் பொம்மயநா
    யக்கமாலே. (௨)

## திருக்கைலாயபரம்பரை

அன்னப்பன்பேட்டை ஆதீனத்து அடியார்குழாத்தொருவராகிய

# ஸ்ரீ சபாபதிசுவாமிகளியற்றிய

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அன்னந்தன்பெடையைப்புல்லி யகமகிழ்காலைவாவி
யின்னந்தமபுயப்போதூர விதுநின்பேடெனப்பேடுங்
கொன்னந்தமமதுலையாள்சீர்க் கோமகளாயுதித்த
விண்ணந்தற்கறியவொண்ணா விமலையங்கயற்கண்ணாட்கே. (௧)

கண்டுதேனுவின்பாலக் காரங்கைத்திடவோர்பதத்துப்
மண்டுசீர்ப்பதிற்றுப்பத்தந் தாதியாமவளநூலொன்று
முண்டகக்கண்ணினாரோ டிருவர்க்குமுழுச்சீர்நல்கும்
அண்டர்நாயகனபாலன்ப னரியவைதிகமார்க்கத்தான். (௨)

தத்துவமுப்பத்தாறுங் கடந்ததோர்தனிப்பாலுள்ளம்
வைத்திடுமுரவனல்ல மாகாளிப்பட்டிவாழ்வோன்
உத்தமகுணத்தன்றெய்வ சிகாமணிப்புலவனெங்கும்
வித்தகக்கவிஞர்மெச்ச வியற்றினன்விழைந்தநூலை. (௩)

கொண்டலையணவுநொச்சிக் கோநகர்மழைசைவாழ்வோன்
விண்டுவினடியோகத்தான் விரைமுல்லையலங்கற்றோளான
எண்டருநலத்தின்மிக்க வெறுழனுமகேதனத்தான்
அண்டலர்க்கேறுபோல்வா னுங்குருகுலத்துவர்தான். (௪)

தம்மையனென்னயார்க்குந் தந்தளித்திடுமாலண்ட
பொம்மையக்குரிசில்முன்செய் புண்ணியப்புதல்வன்மேன்மைச்
செம்மைசால்குணக்குமாரப் பெரியதம்பிப்பேர்சேர்ந்த
பொம்மையமகிபனச்சிற் பொலிவுறவமைவித்தானே. (௫)

திருவாவடுதுறை ஆதீனத்து மஹா வித்துவானாகிய

மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்

மாணாக்கருள் ஒருவராகிய

தஞ்சை மிஷியோன் காலேஜ் தமிழ்த்தலைமைப்புலமை நடாத்தும்

மகா-௱-௱-ஸ்ரீ

ஐயாச்சுவாமிப்பிள்ளையவர்களியற்றிய

நேரிசை யாசிரியப்பா.

மணிவளர் நெடுந்திரை வாரிதி யுடுத்த
பணிவள ருலகுயிர்ப் பரப்பெலாம் படைக்கு
முண்டகத் தவிசுறை முதுமறைக் கிழவனுங்
கண்டக நாகுசக் கரந்தரி கரத்தனு
மற்பக லேத்து மருமறை முடிவாய்க்
கற்பனை கடந்த தற்பதப் பொருளா
யொன்றாய்ப் பலவா யொன்றினும் பற்றா
நன்றாய்ச் சச்சிதா நந்தநிர்க் குணமாய்ப்
பாவனைக் கெட்டாப் பரஞ்சுட ராகித்
தேவ தேவனாஞ் சிவபெரு மாற்கு
மாலையு மகுடமும் வனப்புறச் சூட்டி
யாலவாய்க் கரசி யாகிவீற் றிருக்கு
மங்கயற் கண்ணிபூம் பங்கயத் தாட்குப்
பத்திதேர் கலைஞரு முத்தமிழ்த் தலைவரு
மத்துறு பதிற்றுப் பத்தந் தாதிப்
பேர்புனை யீனாந் தோகமழ் செந்தமிழ்த்
தார்புனைந் தணிந்தனன் றண்புனற் பொன்னி
ன்னதி சூழு ஸ்மங்கதிப் பதியில்
யம்பல பயக்குஞ் சுயம்பிர காச
தேசிகன் மரபிற் சிவகா ருண்யம்

பாசவை ராக்கிய மீசுர பத்தி
பிரம ஞானம் விரவுமிந் நான்கு
மொருவடி வாயெழுந் தருள்சிவா நந்த
பரமசற் குருவின் பாதசே கரஞய்த
தரமலி மலர்ப்பூந் தண்டலை யுடுத்த
கவின்பெறு நல்லமா காளிப் பட்டிவாழ்
சிவந்திகழ் தெய்வ சிகாமணிக் கவிஞன
இன்னதைப் பத்தி யீகைநல் லொழுக்க
மன்னிய செல்வரு மாதவஞ் சிறந்த
வுத்தமர் களுமுறை குத்திநன் னூடான்
தரங்குறிப் பரிய விரங்கமால் வரையான
சுடர்மணி கொழிக்குங் குடவனன் னதியான
பூம்பொழிற் றேம்பொழிந் தாம்பொழிற் காலவாய்
காம்புதிர் முத்தமுங் களிற்றின் முத்தமு
நத்தின மீன்ற முத்தொடு நட்புற
வாரிப் பரப்ப மதிபல வென்ன
வெண்கதிர் பரப்புந் தண்பணை தோறுங
கன்னலுஞ் செந்நெற் கதிரும்விண் ணுலவி
மன்னுசீர் மழசை யென்னுமூ தூரான்
அருளறந் தழைத்த குருகுலத் துதித்தோன்
இன்புற விழைந்தோ ரீண்டுவெம் மின்னென
றன்புற வழைக்கு மனுமகே தனத்தான்
மேம்படு சித்திர வான்பரி யுடையான்
எங்கணு முழங்கு மங்கல முரசான்
நலத்தகு முல்லை மலர்த்தொடை யுடையான
சற்சனர்க் குரிய சற்குண மனைத்து
மன்னிய லண்ட பொம்மைய மன்னன்
ஆறு வன்பொடு மேஞட் புரிந்த
நற்றவப் பயன்கண் முற்றுமோ ருருவாய்ப்
பெற்றருள் குமாரப் பெரிய தம்பிப்
பொம்மைய மகிப னிம்மகி தலத் தோர்க்
கின்பா மெழுதா வெழுத்தி
லன்பா லமைத்தன னற்புத மெனவே.

ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகள் பரம்பரையில
திருவையாற்றிலெழுந்தருளிய

## ஸ்ரீ சிவாநந்தசுவாமிகள்

மாணுக்கருளொருவராகிய
தஞ்சைமாநகரம

## ந. வீரபத்திரபிள்ளை யவர்களியற்றிய

கலிவெண்பா.

பொன்னு ளுறைமருமப் புங்கவனும் வெண்கமல
மின்னு ளுறைநாக்கொள் வேதியனும்—முன்னடி

ஆதிமுடி காண்டற கரிதா யகண்டபரஞ்
சோதியாய்ச் சற்சிற் சுகவடிவாய்ப்—பூதாதி

எவ்வுயிர்க்குங் காரணமா யேகபரி பூரணமாய்ச்
செவ்வியதா யோங்குஞ் சிவபெருமான—குவவில்

அருள்விளையாட் டாய வறுபத்து நான்கு
திருவிளையாட் டன்றமைத்த சீர்சால—தருமுத்தி

யாநகமொன் றோது மதுரைத் தலத்தரசி
ஆனமீ னுட்சியெம தம்மைக்கும்—மாநிலத்தில்

ஆற்றலுறு மெண்ணுன் கறம்வளர்த்த நாயகியோ
டேற்றமலி செம்பொற்சோ தீச்சுரனூர்—வீற்றிருக்கும்

ஆலயமும் வான்றோ யணிமால் விடைமதிலும்
மால வளையூர் வயல்களும்பூஞ்—சோலைகளும்

பைந்நீர்க் கதலிபலா பல்தெங்கு மாவினஞ்சூழ்
அந்நீர்க் கமலமல ராவிகளும்—பொன்னீர்மை

தங்கும் வணிகர் தருமன்ன சத்திரமுஞ்
சங்கம் புகழ்வேத சாலைகளும—எங்கணுமிச்

சீர்விளங்கக் காட்டுஞ் சிகரநெடுங் கோபுரமுந்
தேர்விளங்கு நல்வாச் சியமுழக்கும்—போவிளங்கக்

கூடிவரு மெய்யடியார் கூட்டந் தனைக்காண்பான
நாடிவரும் பொன்னி நதிவளமும்—பாடிவரும

முத்தமிழோ ரின்சொன் முழக்கு நனிதழைத்தெண்
சித்திமுத்தி நல்குந் திருநகராம்—முத்தர்புகழ்

ஐயா றெனுந்தலத்தி லன்பரொலாங் கண்டுதொழ
மெய்யாந் திருவருளே மேனிகொண்டெம்—பொய்யாவுந்

தீர்த்தருள வந்த சிவாநந்த ஞானகுரு
மூர்த்திதிருத தாண்மலரை முப்போதும்—ஏத்திமகிழ்

சித்த முடையான் சிவமே பொருளெனத்தேர்
வித்த முடை யாமெய் விளக்குடையான்—நத்தினஞ்சார்

வார்மணக்குஞ் செய்வனைநன் மாகாளிப் பட்டியுறை
சீர்மணக்குந் தெய்வ சிகாமணியாம்—பேர்மணக்குஞ்

செந்தமிழ்ப்பா வல்லோனற் றேன்பால்கற் கண்டென்ன
விந்தைமிகு மேலோர் வியப்படையத்—தந்தான்

## சிறப்புப்பாயிரம்.

பதிற்றுப்பத் தந்தாதிப் பாமாலை தன்னைக்
கதிக்குறுதி யென்றிவணைக் காணும்—மதித்தெளிதில்

உற்றுணர்வா னச்சியற்றி யுண்மையுணர் வுற்றோர்க்கும
மற்றவர்க்கு மன்பால் வழங்கினான்—நற்றவஞ்சால்

சித்தருடன் முத்தர்களுஞ் சிந்தை களிகூர்ந்து
நத்திவருங் குத்தியெனு நாடுடையான்—நித்தநித்த

வேட்டுவெந்து மூழ்கினார்க்கு வெந்துயர்தீர்த் தீபநிலை
நாட்டுங் குடவ நதியுடையான்—சேட்டமுறுஞ்

செந்நெற் பயிர்தழைக்குஞ் செய்வளமுந் தெங்குபலா
கன்னலொடு தேமாங் கனிவளமும்—பொன்னெயில்சூழ்

தேவா லயம்பலவுந் தெண்ணீர்க் கயங்களுஞ்சூழ்ந்
தோவா தொளிர்மழசை யூருடையான்—பாவாணா

ஏத்துங் குருகுலத்தா னெண்டிசையுங் கொண்டுநிற்குங்
கீர்த்தி விளக்கனும கேதனத்தான்—பூத்தடத்தில்

ஓரானைக் கன்றெதிர்வந் துய்வளித்த பைந்துளவத்
தாரானைப் போற்றுஞ் சமயத்தான்—பேராத

ஈரம்பொறுமை யிணக்கமுத னற்குணங்கள்
சேர வளர்ந்த திருவுருவான்—கீரமொடு

பாகுநேர் மென்மொழியார் பார்வைமனத் தைக்கவரும்
வாகுசேர் முல்லைமலர் மாலிகையான்—ஓகையுடன்

பாரறியப் பெற்றவருட் பாக்கியத்தி னுக்கமெனப்
பேரறிஞர் வாழ்த்துமகப் பேறுடையான்—வாரமொடு

கண்டா ருளக்கருத்தைக் கண்டா தரித்துமகிழ்
கொண்டுகை நல்குங் குணக்கடலான்—அண்டலர்கள்

போற்றுபுகழ் பெற்றலண்ட பொம்மைய பூபதிமுன
பாற்றியமெய்க் நோன்பா லருள்சுதனும்—நாற்றிசைகொள்

எமயா நிலத்தினர்க்கு மின்பந் தனைவிளைக்கும
பெமமான் குமாரப் பெரியதம்பிப்—பொம்மைய

பூமான் புவிபுகழும் போருகச்செம போதிலுறை
மாமான் மகிழ்ந்துறைசீ மான்.



உ

சிவமயம்.

மதுரை

மீனாட்சியம்மை

# பதிற்றுப்பத்தந்தாதி.

## காப்பு.

### விநாயகக்கடவுள்.

திருக்கூடற் பதிக்கரசா மீனாட்சி யம்மைதுணைத்
திருத்தாட் கன்பாம
மருக்கூடற் புதத்தமிழாற் பதிற்றுப்பத் தந்தாதி
வனைவா னுள்ளத்
துருக்கூடற் பகலுநினைந் தொன்றிரண்டென் னுநிலையை
யுறுவார்க் கனனே
கருக்கூடற் பவமகற்றுஞ் சித்திவிநா யகன்பதமுட்
கமலஞ் சேர்ப்பாம்.

### சோமசுந்தரக்கடவுள்.

வேலைவாய்க் கடுவை மிடற்றில்வைத் தமுதை விண்ணுளார்க் களி
த்துமா ணிக்காய்க், காலைவார் கூற்றைக் காய்ந்தணி வேய்ந்து கயற்
கண்மா தரசியை மணந்து, மேலவா முனிவ ரிருவருண் மகிழ வெள
ளியம் பலத்திடை நடித்த, ஆலவாய்ச் சோம சுந்தரக் கடவு ளடி
யிணை மலர்முடிக் கணிவாம்.

### சுப்பிரமணியக்கடவுள்.

அரவணை முகுந்தன் வேத னமரர்கோன் வெலற்கொ ணாவெங்
கரவணை தருஞ்சூர் மாய்த்துக் கனககா டினிது காப்பான்
குரவணை குழலார் தெய்வ குஞ்சரி வள்ளி வேட்பச்
சரவண முதித்த வேற்கைச் சண்முகற் கன்பு செய்வாம்.

## கலைமகள்.

மாமக ணிறைந்தெஞ் ஞான்றும் வளமெலாஞ் செழிக்குங் கூடற்
கோமகள் புயத்தென் னன்பாற் குலவுசெந் தமிழ்த்தார்சூட்டப்
பூமக ளுவங் கற்றோர் புந்தியும் புகுந்து வாழும்
நாமகள் விரைப்பூந் தாளெந் நாளுநெஞ் சகத்துள் வைப்பாம்.

## அருளிறைவணக்கம்.

பையரவப் பணியணியெம் பரமனய னெடுமொன்மூப்
படிவ மொன்றாந்
துய்யவுருக் கொண்டெழுந்து மலமாய்த்து மெய்யுணர்வாந்
தோற்றங் காட்டி
ஐயமிலா வீட்டின்ப மளித்தாளு முதற்றொழில்பூண்
டையாற் றின்கண்
செய்யபுகழ் பெற்றசிவா நந்தகுரு பரன்றாணஞ்
சிந்தை சேர்ப்பாம்.

## நூல்.

பூவாய் கமலன் முதலைவர் புரியைந் தொழிற்கு முதற்பொருளாய்த்
தூவாய் நான்கு மறைமுடிவாழ் துரிய வடிவே நீயெனக்காண்
மாவாய் பெருந்த வத்தினருள் வயங்கு மணியே வானுலவுங்
காவாய் மதுரைப் பதியமர்ந்த கயற்கணரசே காவாயே. (க)

காவே தனித்தண் கருணைமழைக் காரே யடிய ருளமணக்கும்
பூவே தலங்கண் மூன்றுநிறை பொருளே கூடற் பதிக்கரசே
மூவே தனையற் றென்னுளத்தின் முதிர்தே னமுது கண்டெனநின்
பாவே தழைத்துத் தினம்படரும் படிக்குன் கடைக்கண் பார்த்தரு
[ளே. (உ)

பாரங் கனல்கா லந்தரமாய்ப் பல்சீ வருமா யனைத்துலகும்
வாரங் கலந்து புரக்குமெழின் மதுரைக் கயற்கண் மாதுமையே
ஓரங் கருதா தெளியேனுக் குறுமேழ் பிறவி யெனும்பாரா
வாரங் கடக்க நின்கமல மலர்த்தாட் புணையை வழங்குவையே. (௩)

வழங்குந் திறத்தோர்க் கறம்பெருகு மாபோற் பெருகி நெடுந்தரங்கம
முழங்கும் புனல்வாய் வையைவள முதிர்பூங் கூடற் கயல்விழியாய்
கழங்கு தருங்காய் வெண்பொடியுட் கலந்துங் கலவா திருத்தலெனப்
பழங்கு வலயத் தகந்திரிந்தும் பற்றா திருக்கப் பணித்தருளே. (ச)

பணிமா லிகைபூண் சொக்கர்வலப் பாகத் தமர்ந்து பத்தர்தமக்
கணிமா முதலெண சித்திகளு மளிக்கு மதுரைக் கயற்கணியே
பணிமான விழியாா நிதிநிலமூ வாசைக் காளா யுடலகமா
றெணிமான பருவா தென்றுநினை யெண்ணும் வரமொன் றெனக்க
[ருளே. (ரு)

எனக்கோர் துணையும பிறிதகிலத் திலையென றெனது குறைமுழுது
நினக்கோ லமிட்டு மிரங்காதென் னெறியோ ஞானப் பால்சுரந்த[ம
தனக்கோ மனேயே யன்பாமனத் தளிவிட டகலாத தறபரையே
வனக்கோ கனகத் தடம்பணைசூழ் மதுரைக் கயற்கண் மடமாதே.()

படஞ்சேர் மனத்தே னெனக்குறித்தி வையத் துலவு மெய்யடியா
ரிடஞ்சேர்த் தருளா விடிலெளியே னெவ்வா றுய்வே னிலகுமணி
வடஞ்சேர் மருமத் திளப்பிடியே மணிமால் வரையே மலர்ப்பதும
தடஞ்சேர் மதுரைப் பதியமர்ந்த தாயேகயற்கட் சவுந்தரியே. (எ)

தரியா துடல்விட் டுயிரகலுந் தருணம் வருமு னெனக்குனருள
புரியா தறியார் போலிருந்தாற் புவியோர் விசும்போர் நகையாரோ
வரியா ரிதழி மணமியற்கை மணமெண் டிசையு மலிகுழலாய்
அரியா ரணனும் புகழ்மதுரைக் கரசே கயற்க ணாரணங்கே. (அ)

அணங்கா ரணங்க ளாகமங்க ளனைத்துந்தேடி யளப்பறிதற் [ன்
கிணங்கா திலங்குன் னருள்வடிவை யெந்நாட் டரிசித் தின்படைவே
வணங்கா மகிடா சூரனுடல் வதைத்த வருட்பேர் வல்லமையாய்
மணங்கா தலித்த சொக்கர்மகிழ் மதுரைக் கயற்கண் மாமணியே. ()

மணிவாய் மகுட முடியுமலர் வதனும் புயமு மங்கலப்பொன்
அணிவாய் மிடறும் பணைத்தோளு மங்கைவளையுங் கொங்கையணிப்
பணிவாய் மார்பும் பட்டிடையும் பைம்பொற் சிலம்பார் பதத்துணையு
எணிவாய் வழுத்தத் தினமதுரை யெந்தா யுணர்வைத் தந்தாளே. [ம்

வேறு.

தந்தாடை சொன்ன மணியான வென்ன சகமேழு மாகி விளையாா
கொந்தா ரணிந்த வருண்மேனி கொண்ட கூடற் கயற்க ணுமையே
முந்தா யகட்டி உருவான வன்று முதலாக வின்று வரையுஞ்
சிந்தா குலத்தை யலதின்ப மொன்று சிறியே னடுக்க விலையே.(௰க)

இலையோ தொழும்ப ரினமே வவைக்க வெளியேனை வைக்கவிடமுந்
தலையோ ரியற்கை சிறியோ ரிழைத்த தவறைப் பொறுப்ப தலவோ
கலையோ ருரைக்கு மறைநீதி கொண்ட கமழ்நிம்ப மாலை புனைதென்
மலையோன் மகத்தின் மகளா யுதித்த மதுரைக் கயற்க ணுமையே. ()

உமையா ளனைதது முடையாள் வழுத்த லொழியா மனத்தை யுடை
தமையா தரித்து நிலையான முத்தி தருவா ளகண்ட வுருவாள் [யார்
இமையார் சிரத்தி னிலகும் பதத்தி யெமையாள நித்தம் வருவாள்
அமையார் புயத்தி மதுரா புரத்தி லமரங் கயற்க ணரசே. (௰௩)

அரவச் சிரத்தி னுலகிற் சடத்தை யடைவுற்று முன்ற னிருதாள்
பரவற் குரத்தை மருவா மனத்தர் பவமற் றிருத்த லெவனோ
கரவற்ற முத்த ரிதையத்துண் மொய்த்த கருணைத் திறத்தகடலே
மரவத் தருக்கள் வளரச் செழித்த மதுரைக் கயற்கண் மயிலே.(௰௪)

மயிலைப் பழித்து வளர்சாயன் முற்று மதியைப் பழித்த முகமும்
அயிலைப் பழித்த விழியுஞ் சுரந்த வருளைப் பொறுத்த வடிவுங்
குயிலைப் பழித்த மொழியுஞ் சிறந்த கூடற் குமாரி பதமே
கயிலைப் பதிக்க ணுயர்நித்த சுத்த கதியென்று நம்பு மனமே. (௰௫)

மனமேவு மாறு மதிசென்று மாயை வசமாகி மாழ்கு மடவோர்
இனமேவு மூறு னிருதாள் வழுத்து மியல்பெற் களித்தி விடைவா
கனமேவு சொக்க ரளிமேவி முன்பு கடலே ழழைத்த நிபநீள்
வனமேவு மென்கண் மணியாய் விளங்கு மதுரைக் கயற்கண் வடிவே.

வடிதந்த சுண்ண மணிதந்த வண்ண மனைவிண்ணு லாவமதியைக்
குடிதந்த மைந்தர் பிடிதந் துலாவு கூடற் கயற்க ணுமைபொன்
அடிதந்த தின்று துதிதந்து பாட வருளொன்று பாச விருளைத்
தடிதந்த தொன்று நிலைதந்த தொன்று சகசானு போக சுகமே. (மஎ)

சுகமொன்று வேத நெறிநின்றி டாது துனியொன்று மாக மகமென
நகமொன்று நாட விழியொன்று காண வகிலத் தழுந்தன் முறையோ
பகமொன்றுதொண்ட ரகமொன்றி நின்ற பரையான சோதிமணியே
இகமொன்றி யுய்ய மதுரைக்கண் வந்த வெனதம்மை யாதிசிவையே

ஆதித்த னங்கி மதியென்னு முக்க ணவிர்கின்ற வாதி சிவனைப்
பாதித்த னுக்குள் விரவப் புரிந்த பலமேவு கூடலரசே
பேதித்த நாம வுருவங்க ளாய பிரபஞ்ச மாய மயலை
நேதித் தகண்ட வறிவான நின்னை நினையுந் திறத்தை யருளே. (மகூ)

அருவாகி யண்ட பகிரண்ட மாகி யணுவாகி யாவுமுதவுங்
கருவாகி ஞான வொளியாகி மோன கதியாகி யன்ப ரிதையம் [வாா
ஒருவாது நின்ற பெருவாழ்வு கொண்ட வுனதுண்மை யாவ ருணா
திருவால வாயி லுருவான தேவி செழியன் றவதத னிதியே. (உ0)

வேறு.

நிதியாளும் பிறியாளங் கலையாளுங் கலையாளொண் ணிலவு கஞ்சப்
பதியானுங் கரஞ்சிரத்திற் பதியான் றென் பதியானும் பணிவான்
சொக்கர், மதியாருஞ் செக்கர்நிறச் சடையெழுந்த மழைபொதிநா
ன் மாடக் கூடற், பதியாளங் கயற்கணிதா ளிருபோது முப்போதும்
பரவுவோர்க்கே. (உக)

பரவுவார்க் கருள்புரியும் பரம்பரையே மதுரைவளம் பதியின் மேய
குரவுவார் மலர்க்கோதைக் கொடியிடையங் கயற்கணிசற் குணியே
நாயேன, கரவுவாய் மனத்தினை யுலகெனுமா யைக்காட்டிற் காத
லென்னும், அரவுவாய்ப் பட்டுவினைக் காளாகா திப்போதுன னரு
ள்செய் வாயே. (உஉ)

செய்வாய்ந்த தென்மதுரைப் பதிவாய்ந்த வஙகயற்கட் செவவா
யெந்தாய், பொய்வாய்ந்த புவியிலுயர் மெய்வாய்ந்து நின்பதத்தைப்
போற்று மூனறிச், சைவாய்ந்து விழற்கிறைத்த சலம்போல வாணா
ளாத தணக்கு மாக்கள், மெய்வாய்ந்த நினகருணை விழிவாய்ந்திங் கு
ய்வதெந்நாள் விளம்பு வாயே. (உ௩)

வாய்த்தவைகொண் டகமகிழ்ந்து வருபொருட்கிங தனையகன்று
வாழும் வாழ்வே, தூய்த்தநெறி யெனக்காணுப் பேராசைக் கருங்க
டலிற் சுழலகின் றேனிப், பேய்ததகைமை யுடையேற்குன் பெருங
கருணைக் கரைகாட்டிப் பிறங்கச் செய்வாய், காய்த்தமரச் சோலைம
ருக் கமழ்மதுரைப் பதிவதியங் கயற்கண் மாதே. (உ௪)

மாதவத்தோா தினம்பரவு மதுரைவளர் கயற்கணியவ வையத தி
ன்கண், போதவத திற் கழித துவினை புரியவதைக் குள்ளாகிப் பூத்து
க் காயாப், பாதவத்தை யொத்திவணோர் பயன்காணு தயர்கின்ற பா
வி யேனிங், கோதவததை மூன்றுமுணர்ந் துனைத்தரிசித் துய்வதெ
ந்நா ளுரைத்தி யின்றே. (உ௫)

இன்றுளவாம் பொருளனைக் கின்றெனுஞ்சொன் மாத்திரமா யிய
ங்கு மேற்றந், துன்றுலகை மெய்ம்மையென்றுந் தொக்குடலை யகமெ
ன்றுந் துணிந்து நாளு, நன்றுறவு தீமையிக லென்னுது நிற்குநிலை
நல்காய் வெள்ளி, மன்றுணடம் புரிந்தபெரு மான்மகிழு மங்கயற்க
ண் மதுரை வாழ்வே. (உ௬)

மதுகரங்கள் பண்பாடன் மகதியிசை நிகரிதழி மாலை யாற்குப் புதுமணக்கோ லஞ்சிறக்க வானவர்நான் முகன்றிருமால் புகழ்ச்சி கூறச், சதுமறையா முரசொலிப்ப மணமாலை சூட்டிமுடி தனையுஞ் சூட்டி, மதுரைநக ரரசளித்த வங்கயற்கண் ணரசேநன் மதியைநல்கே.

மதியுணர்த்து மறைநான்கின் முடியுணர்ந்தோர் நின்கமல மலர்த் தாட் கன்பாந், துதியுரைத துன் னருளடைந்தா ரைவகையா மிலக் கணநற் சுருதி யோதும், விதியுணரா வெளியேன்சொல் புன்மொழியு நன்மொழியா வியநதேற் றுனருட்,கதியுணர்த்தாய் மதுரைவளம் பதிவளரங் கயற்கணியே கருணை வானே. (உஅ)

வானாட்சி யோருரகர் மண்டலத்தோ ருமவிய க வாழுங் கூடற் கோனாட்சி புரியவந்த கோமளையே யாமளையே குமரிவாமி மீனாட்சி யாதரசே யெனகுறையை நிற்கெடுத்து விரித்து மின்னும் வனாட்சி கொள்ளாம லிருக்கின்ற யினனதெனை வெடுத்துக்கூறே. ()

கூறுமொரு முக்கூற மன்னமய முதலைந்து கோசநீதது, வேறுமொரு பொருட்குறியா துனைக்குறித்து நிற்பதுவே வினையினேற் குத், தேறுமொரு நிலையமலாற் சிறிதறியேன் பிறிதொன்றுந்தென் கூடற்கண், ணேறுமொரு விடைப்பெருமாற் கரசளித்த வணங்கரசே யின்பத் தாயே. (௩0)

வேறு.

இன்பதுன்பத் திருப்பிடமாகிவா
யொன்பதுள்ள வுடற்சுமையானென
தென்பதற்ற வியல்பருளாலவாய்த்
தென்பதிக்கண் டிகழ்கயற்கண்ணியே. (௩௧)

கண்ணிற்காண்சகக் காட்சிகள்யாவுநின்
வண்ணமென்ன மதிக்குமுணர்வருள்
மண்ணும்விண்ணும் மகிழ்மதுராபுரிக்
கண்ணமர்ந்த கயல்விழிக்கன்னியே. (௩௨)

கன்னலின்மொழி காமருசேல்விழி
யன்னமேமது ராபுரிச்செல்வமே
நின்னையன்றியிந் நீணிலவைப்பிலெற்
கன்னைதந்தையுற் றார்துணையில்லையே. (௩௩)

இல்லைநம்பி யிருநிதிக்கேயுழல்
கல்லைநேர்மனக் கண்டகர்காண்பரோ
எல்லையற்ற வெழின்மதுராபுரி
யல்லைநேர்குழ லம்மைநின்பாதமே. (௩௪)

பாதங்கொண்டு படியளந்தோன்மலர்
சீதங்கொண்டருச் சித்துயராலவா
யாதங்கொண்டம ரங்கயற்கண்ணியென்
னேதங்கொண்டினி யின்பருள்செய்வையே. (௩௫)

செய்யநான்முகன் றேவரும்போற்றுநின்
றுய்யதாண்முடி சூட்டப்பெறுவனோ
ஐயையம்பிகை யாரணிநீரணி
வையைசூழ்தென் மதுரைத்தலைவியே. (௩௬)

தலைவணங்கிநின் றாட்டுதிபாடிநெஞ்
சலைவணங்கு மகன்றின்படைவனோ
மலைவணங்குற வானுயர்தெங்கினைக்
குலைவணங்குதென் கூடற்குமாரியே. (௩௭)

கூடலம்புரிக் கோமளைதாட்டுதி
பாடலம்புயன் பற்றறுப்போர்க்கலால்
நாடலம்படு நாரியர்பாலுளம்
வாடலம்படு வாவொன்றடைவரோ. (௩௮)

வரத்தைமேவு மதுரைக்கரசியாற்
சிரத்தைமேவித் தினந்தொழுவோரினிப்
புரத்தைமேவிப் புவிக்கண்புகாதமெய்
யுரத்தைமேவி யுவப்புற்றிருப்பரோ. (கூகூ)

இருப்புநெஞ்சக னென்னினுநின்கழல்
விருப்புளேனை வியந்தருள்வேதியர்
இருப்புமேவு மெழின்மதுராபுரிப்
பொருப்புநேர்தனப் பூங்கொடியன்னமே. (சய)

வேறு.

அன்னைபிதா வாயகிலத் தாருயிருக் கோருயிராம்
உன்னையலா திங்கெளியேற் குற்றதுணை யாவருளார்
தென்னைபலா கன்னல்வளஞ் சேரால வாய்வழுதி
மன்னையுல கைப்புரப்பான் வந்தகயற் கண்ணுளே. (சக)

கண்ணுடும் பேருருவக் காட்சியெலா நித்தியமென்
றெண்ணுதுன் பொன்னடியா னெண்ணிநிற்ப தெந்நாளோ
மண்ணுடர் விண்ணுடர் வந்திறைஞ்சு மாமதுரைக்
கண்ணால யத்துறைசேற் கண்ணிசிவ சங்கரியே. (சஉ)

சங்கரிக்குச் சோதரியே சத்திகரு ணுகரியே
அங்கயற்கண் மாதரசே யாலவா யாரமுதே
சங்கையிலா தெவ்வுயிர்க்குந் தாயாகி நீயிருந்தும்
இங்கடியேன் பாவிரக்க மில்லா திருப்பதென்னே. (சங)

என்னேதங் கிஞ்சிலுநீ யெண்ணு தெனக்கிரங்கி
யின்னே தயைபுரிந்தா லீடேறு வேனலது
பின்னேல்லை யென்றூற் பிழையேன் பிழையேனென்
அன்னே மதுரை யரசாள வந்தவளே. (சச)

வந்தவுடற் கொண்டிம் மதுரைக் கயற்கணியைச்
சந்ததமும் போற்றுந் தனிவாழ்வு சாராமல்
மைந்தர்மனை பொன்னெனும்பொய் வாழ்விலயர்ந் தாகுலித்தால்
எந்தவகை யாலினியீ டேறுவாய் நன்மனமே. (சரு)

நன்மதுராங் காரர்கள்பாற் கையேற்றுப் பாடாமல்
நன்மதுர வாக்காலெந் நாளுமுனைப் பாடவருள்
தென்மதுரை யென்னுந் திருவால வாயமர்ந்த
தன்மதுரைச் சொக்கேசன் றான்மணந்த வான்மணியே. (சசு

வான்மாரு தங்கனனீர் மண்ணெனுமைந் தாலமைத்த
ஊன்மாயை நீக்கி யுணர்வாகி யென்றிருப்பேன்
கான்மாறிச் சொக்கர்நடங் காட்டியவெண் பொற்பொதுவாம்
நான்மாடக் கூடனகர் நங்கையங்க யற்கணியே. (சஎ

ஏகாந்த தானத் திருந்துன் னருட்சுடரால்
மோகாந்த கார முரணகற்றி யென்றிருப்பேன்
பாகார்ந்த வின்மொழியாய் பங்கயன்மா லும்பர்புகழ்
நாகார்ந்த வைகை நதிக்கூட லம்மனையே. (சஅ

அம்மைதரு மும்மலமற் றற்பகலில் லாநிலையை
இம்மையிலங் கைக்கனிபோ லெல்லீருங் காணவல்லீர்
செம்மைமணி மாடத் திருக்கூட லங்கயற்கண்
அம்மைமலர்த் தாட்கமலா வன்புசெயப் பெற்றிடினே. (சக

பெற்றதவத் தோர்க்குன் பெருங்கருணை கிட்டுமலான்
மற்றவரா மாயா வசத்தோர்கட் கெய்துவதோ.
செற்றவழ்செம் பொற்புரிசைத் தென்மதுரை யம்பதியார்
கற்றவர்க ளேத்துங் கடம்பவனப் பூங்குயிலே. (ருo

வேறு.

பூங்குவளைத் தடம்புடைசூழ் மதுரை மூதூர்ப்
பொற்கோயின் மீனாட்சி புயலை வென்ற
தேங்குழலு மணிமுடியுந் திலக நெற்றி
செவிக்குழையு மலர்முகமங் கலநாண் கண்டக்
தாங்கமைநேர் புயத்தார்கை வளைமார் பாரஞ்
சரப்பளிவா ரிணைக்களபத் தனமுஞ் செம்பட்
டோங்குதுடி யிடையரவ மொலிக்குந் தாளு
முன்னிவினைப் பிறவியொழித் துய்வாய் நெஞ்சே. (௩க)

நெஞ்சகமே யோருண்மை சொல்லக் கேணீ
நிரந்தரமு மூவாசைப் பவவத் தாழ்ந்து
வஞ்சகம்பொய் யழுக்காறு சினமு லோபம்
மடமாதி குடிகொண்டு மலைவுறுமற்
கஞ்சனரி சிரந்தாளு முன்னாட் டேடிக்
காணரிய சொக்கருளங் களிக்க நாளும்
மஞ்சமர்பொன் மதில்சூழு மதுரை வாழு
மாதுமையங் கயற்கணிதாள் வழுத்து வாயே. (௩உ)

வழுத்துறுநான் மறைநூற்கு மெட்டா ஞான
வடிவாகி யுலகமெலாம் வயங்கிப் பத்தி
பழுத்தவடி யாரிதையத் தவிசில் வைகும்
பரஞ்சுடராய்ப் பேரறிவாய்ப் பலன்க ளெல்லாஞ்
சழித்தமது ரைப்பதிவாழ் கயற்க ணெந்தாய்
சேவடிக்கன் பியற்றாது திரிந்தா னெஞ்சே
கொழுத்தகரும் பகட்டியமன் றூதர் காணக்
கூப்பிடும்போ தெதிர்மறையென் கூறு வாயே. (௩௩)

வாய்ப்பகட்டா லுடற்பகட்டா லுண்மை ஞானம்
வந்தவர்போ னடைகாட்டி வையத் தோரை
எய்ப்பதற்குத் துணிந்துழலு மாயத் தோர்தம்
மினத்தோடு நெஞ்சேநீ யிணங்கி டாமல்
தூய்ப்புகழ்சேர் மதுரைவளம் பதியிற் சோம
சுந்தரரோ டினிதமர்ந்த சுகமீ னாட்சி
சேய்ப்பதுமத் தாட்டுணையை யன்போ டென்றுஞ்
சிந்திப்பார் திருவடியை வந்திப் பாயே. (௯௪)

வந்திப்போர்க் கருண்மதுரைக் கயற்க ணம்மை
வாரிச மலர்த்தாளைக் காலைப் போதோ
டந்திப்போ துச்சிப்போ தெனுமுப் போது
மகலாத வாதரத்தோ டருச்சித் தேத்திச்
சிந்திப்போ டைசைவகன்று நிற்கி னெஞ்சே
திருமாதம் புவிமாதுக் கினிய நாதன்
உந்திப்போ துதித்தசதுர் முகத்தோன் றேற்றத்
துள்ளாகா நிலையுறலா முனக்கீ டின்றே. (௯௫)

ஈடிருக்கு முதனான்கா மெழுதா மாற்றத்
தீற்றிருக்கும் பொருளாகி யிருக்கு நீபக்
காடிருக்குந் திருவால வாயா மூதூர்க்
கண்ணிருக்குங் கயற்கண்ணி கருணை வாய்ந்தாற்
சேடிருக்குந் திருவிருக்குங் கவிநான் கோதுந்
திரமிருக்கு முரமிருக்குஞ் சிந்தாய் மேலாம்
வீடிருக்குங் கைக்கனிபோ லிவைக ளல்லால்
வேண்டுவதொன் றுனக்குளதோ விளம்பு வாயே. (௯௬)

விளங்குலகின் மாக்களொரு வாய்ந்துங் கூடன்
மீனாட்சி புகழ்படிக்க விழைவு றாமற்
களங்கமுறு வன்காமக் கடலின் மூழ்கிக்
கன்மமெனுங் கல்லோலத் தலைப்புண் டுண்மை
வளங்கலவாச் சிற்றறிவோ ரினததிற் கூடி
வாழ்நாளைக் கழித்ததலையு மடமை நெஞ்சே
துளங்கமல நித்தபரி சுத்தா நந்தத்
துரியமெனும் பெருவாழ்விற் சுகிப்ப தென்றே. (௫எ)

என்றுலகத் தோற்றமெலாங் கனவின் றோற்ற
மெதிர்கானற் சலத்தோற்ற மென்னத் தேர்ந்து
வன்றுயரின் பிருவகையு மொன்றாய்ப் பத்தி
வயிராக்ய நெறியெனுஞ்சோ பானத் தேறி
நின்றுபொறி யைநதொடுக்கி யவத்தை மூன்று
நீக்கியய லற்றுணாவி னிலைநிற் பாயோ
வன்றுனக்கு மதுரைவளம் பதிமீ னாட்சி
யருள்வாய்த்த தெனத்திடமா யறிதி நெஞ்சே. (௫அ)

அறியாமைச் சேயெனநா ணச்ச மான
மணுவுமிலா திச்சைவயத் தழுந்திப் பார்மேற்
குறியாத வெண்ணமெலாங் குறித்து வாடிக்
கொடும்பிறவிக் காளாகு மனமே கேட்டி
மறியாருங் கரப்பெருமான் மகிழ்தென் கூடல்
மன்னுகயற் கண்ணியுமை மலர்த்தாட் கென்றும்
பிறியாத பேரன்போ டுருகி நின்றாற்
பேரின்ப நிலையெளிதிற் பெறலாங் காணே. (௫௯)

காண்டமொக்கு ளெனத்தோன்றிக் கழியுங் காயங்
கற்கோட்டை யெனவுமனைக் கணமு நில்லா
நீண்டகன வெனநிகழுஞ் சகமெய் யென்றும்
நினைத்திதுகா றும்பலனென் னேர்ந்தாய் நெஞ்சே
வேண்டனைத்து மீண்டருளு மால வாயின
மீனாட்சி தாண்மறவா விரதம் பூண்டாற்
காண்டகுமெண் சித்திகளுங் காட்டு மேலைக்
கதிகாட்டு மினிக்காட்டுங் காட்சி யுண்டோ. (௯௰)

வேறு.

காட்சியை யகலா நாட்டக் கடவுளர் பெருமான் பேறுஞ்
சாட்சியா ரணத்தோன் பேறுந் தடங்கட னிறத்தோன் பேறும்
மாட்சிமா முனிவ ரேத்து மதுரைமீ னாட்சிக் கன்பு
பூட்சியற் றிருக்குந் தொண்டர் வேண்டிடார் வேண்டி டாரே. ()

வேண்டுவ தருள்வா யென்ன விரும்பியுன் கழலை நாடி
ஈண்டுனை வழுத்து நாயேற் கிரங்கிடா திருத்த னன்றோ
தூண்டுதற் கரிய ஞானச் சோதியே யால வாயை
யாண்டயி ரனைத்துங் காக்கு மம்மையங் கயற்கண் மின்னே. (௯௨)

மின்னனே ருலக வாழ்வை மெய்ம்மையென் றுழலு நாயேன்
றன்னனே ருணர்வி லார்முத் தலத்தினு மொருவ ருண்டோ
உன்னையே தஞ்ச மென்றே னுவந்தருள் புரிவா யிப்போ
தன்னையா ரணங்கே கூட லாலவா யமர்ந்த தேனே. (௯௩)

தேன்குடித் தளிபண் பாடுஞ் செழும்பொழிற் கூட லார்ந்தென்
னூன்குடி புகுந்தோ யுன்னை யுணர்ந்திடா தனந்த ருற்றேன்
வான்குடிப் புலவோர் நித்தம் வாழ்த்துநின் வனசத் தாட்கீழ்
நான்குடி யிருக்கு நாளினி நாளென் னுணர்த்தி யின்றே. (௯௪)

இன்றளை வெளியேன் செய்த விரும்பிழை பலவா னாலும்
ஒன்றளை வேனுங் கொள்ளா துவந்தருள் புரிய வேண்டும்
நன்றளை கேசன் வாழு நகரினும் வளமிக் கோங்கும்
குன்றளை வுயர்நான் மாடக் கூடன்மீ னாட்சித் தாயே. (கரு)

தாயினே ரில்லா வாதித் தாயென நின்னை நாடுஞ்
சேயினேன் கடைய னேனுஞ் சித்தம்வைத் தருணீ செய்வா
யாயினேழ் பொழிற்கு நின்பே ரருட்புகழ் மணக்கு மால
வாயினே ரில்லா தோங்கி வாழுமுத் தனத்தி னாளே. (கசு)

தனத்தினைப் புதைத்து நின்றாட் சரண்புகுந் தவத்தி னன்றோ
ரினத்தினுக் கியா மாக்க ளெவவழி யுய்வா ரந்தோ
அனத்தினன் முதலோர்க் கெட்டா தாரணச் சிரத்தும் தொண்டர்
மனத்தினும் வயங்கு மால வாய்க்கவு மாரி மாதே. (கஎ)

மாரியம் புதிநீர் மாந்து வளர்பயி ரினங்கட் கெல்லாம்
வீரியம் பெருகப் பெய்யும் விதமென வருளைப் பெய்து
காரிய வுயிரா யெல்லாங் காப்பையா னவற்றின் வேறோ
சீரியர் பரவுங் கூடற் செல்வியெற் கருள்செய் வாயே. (கஅ)

அருளுருப் புனைந்தோய் நீயென் றாரணு கமங்க ளோதும்
பொருளுணர்ந் திப்போ தூன்றாட் புகழ்சொலக் குறித்தே னென்னை
வெருளுற விடுத்தா னின்சீர் மேலவர்க் கிகழ்ச்சி யன்றோ
தெருளுளார் பரவுங் கூடற் றேவியென் னாவிப் பேறே. (கக)

ஆவியே யறிவே கூட லாலவா யரசே சொக்கர்
தேவியே சிலையே வானோர் செல்வமே யகில மெல்லாம்
மேவியே யிருந்து மேவா மெல்லியே யெனவெஞ்ஞான்றும்
பாவியே னுன்னைப் பாடிப் பணியொழிந் துவக்கப் பண்ணே. (உ0)

## வேறு.

பண்ணமைத் துனைத்தினம் பாடிப் பாடியென்
னெண்ணமு முருகிலே னினியென் செய்குவேன்
திண்ணமெற் குலையலாற் றிக்கு வேறிலை
வண்ணமெண் வகையுமா மதுரைச் செல்வியே. (எக)

செல்வியென் றுன்னையான் றேடிப் பாடியும்
வல்வினை யுறுதலுன் மகிமைக் கொதததோ
பல்விதப் பதங்களும் பத்தர்க் கீந்திடும்
செல்விரி யாலவாய்ச் சேற்க ணங்கையே. (எஉ)

நங்கையர் முறைமுறை நடிக்கு மோசையும்
மங்கல முழக்கமும் வான் பதிக்கெழுந்
தெங்கணும் பரவிய விசைகொள் கூடல்வாழ்
சங்கரி யெனக்குநின் சரணந் தஞ்சமே. (எங)

தஞ்சமென் றுன்பதஞ் சார்ந்தி டார்கொடும்
வஞ்சகக் கூற்றுமுன் வரினென் செய்வரோ
மஞ்சம ரிஞ்சிசூழ் மதுரை யம்பதிக்
கஞ்சமா மலர்முகக் கயற்கண் வல்லியே. (எச)

வல்லவ ராவரோ மதுரை யாலவா
யில்லர சியற்றிய வெம்பி ராட்டிதாட்
கல்லரும் பகலுமன் பமைத்தி டாதலை
பல்லவத் தொழில்கடோர் படியின் மாக்களே. (எரு)

படித்திலேன் மறைகளின் பத்தர் தாட்சிரம்
முடித்திலே னெவ்வண முத்தி யெய்துவேன்
வடித்தசெஞ் சாந்தணி மார்பி சேய்ப்பிறை
முடித்ததென் மதுரையாழ் மொழிப்பி ராட்டியே. (எசு)

மொழியுள முடலிவை மூன்றை யுங்கடந்
தழியுள வின்பமா முன்னைக் காணுமெய்
வழியுள வெனக்கருள் மதுரை யிற்கயல்
விழியுள வருட்கொடி விமலி வீரியே. (எஎ)

விமலமாம் பரசுகம் விளைக்கு நின்னருட்
கமலமா மலர்முகங் காட்டி வந்தருள்
மும்மலமா சகன்றமெய் முத்தர் சித்தர்சூழ்
அமலமா மதுரைமீ னாட்சி யம்மையே. (எஅ)

ஆட்சியா யாலவா யரசு பெற்றமீ
னாட்சியா ரமுதமே யவத்தை மூன்றினுஞ்
சாட்சியாய் விளங்குநின் சகச மேனியென்
காட்சியிற் புலப்படக் கடைக்கண் வைப்பையே. (எகூ)

கடையவ னெனினுமுன் கழலை நாடுநெஞ்
சுடையவ னாயினே னுவந் தளிப்பைவெள்
விடையவ னடநவில் வெள்ளி யம்பல
முடையவற் புதத்தளி யுறைசிற் சோதியே. (அ0)

வேறு.

சோதியாம வென்னைநின் றொழும்பரோ டிருத்திநன்
னீதியா ரணங்களோது நின்னையந் தெளிந்துளம்
பேதியாது நின்றருட் பெறுந்திறத்தை நல்குவாய்
ஆதியால வாயுலாவு மங்கயற்கண் மங்கையே. (அக)

மங்கலஞ் சிறந்தவால வாயின்மேவு செல்வியே
அங்கயற்க ண்ம்மையே யனைத்துமீன்ற கன்னியே
இங்கணெங்க ணென்பதின்றி யெங்கணுங் குலாவுநின்
றுங்கஞான மேனியைத் தொழும்பனென்று காண்பதே. (அஉ)

காணலாய முன்னிலைக் கருத்தகன்று நாயினேன்
பூணலாய துன்னருட் புகழ்ச்சியன்றி வேறிலேன்
கோணலாய வெண்பிறைக் கொழுந்தணிந்த கோதையே
மாணலாய வாலவாயின் வாழுமுக்க ணம்பையே. (அரு)

அம்பையாதி சத்தியாகி யாலவாயை யாண்டுதண்
கிம்பமாலை யைப்புனைந்த நித்தசுத்த சற்குணீ
எம்பிராட்டி யின்றுநீ யெனக்கிரங்கி யிங்ஙனே
செம்பொன்மேனி கொண்டுநித்ய சேவைகாட்டி யாள்வையே. ()

ஆளவல்ல தெய்வநின்னை யன்றியில்லை யென்றுநின்
றாளடைந்த வென்னைநீ தரங்குறித்த னீதமோ
நாளடங்கு முன்னமுண்மை ஞானவாழ்வை நல்குவாய்
வாளமர்ந்த கண்ணியால வாயமர்ந்த பூவையே. (அ௫)

பூமணக்கு மாவிதண் பொழின்மணக்கு மேன்மனை
மாமணக்கு மாலவாய் மணக்கவந்த செல்வியே
ஏமணக்கு நின்பதத்தை யேத்தியேததி யென்றுமென்
நாமணக்க வுண்மணக்கு நல்லுணர்ச்சி நல்கிடே. (அசு)

நல்லுலா விழாக்களென்று நன்கிலங்கு மாலவாய்
இல்லுலாவு மங்கயற்க ணெம்பிராட்டி யென்னுடைக்
கல்லுலாவு நெஞ்சமுங் கனிந்துநிற்கு வண்ணநின்
வில்லுலா வருட்கணால் விளக்கியின் பளிப்பையே. (அஎ)

அளியெடுத்து வைத்ததேனை யடவிவேடர் கொள்ளல்போற்
களியெடுத்து நானெடுத்த கடமிருக்க வந்தகன்
விளியெடுத்தெ னுவிகொள்ளும் வேலைமுன்னர் நின்னருள்
அளியெடுத் தெனக்களித்தி யாலவாயி னரசியே. (அஅ)

அரசமைக்கு மாலவாயி னங்கயற்க ணம்மைதாட்
பரசமைக்கு மெய்த்தவத்தர் பக்கலென்று மாழ்கடல்
முரசமைக்கு மாரனம்பு முளரிவேத னங்கையாற்
சிரசமைக்கும் வரியும்வந்து சேர்கிலாது திண்ணமே. (அகூ)

திண்ணமேவு மாரணந் தினந்துதிக்கு மைமவகை
வண்ணமேவி யொன்றுமல்ல வாயிலங்கு மாலவாய்க்
கண்ணமே யெனுள்ளநின் கழற்கணின் றுவப்பநின்
எண்ணமேவி னன்றியொப்ப தில்லைவல் வினைகளே. (கூ0)

வேறு.

வல்வி னைப்பயன் வழியெனக் குறுமிடர் மாற்றி
நல்வி னைப்பய னாட்டிநின் றிருவரு ணல்காய்
கல்வி யிற்பொலி கவிஞர்சூழ் மதுரையங் கயற்கண்
செல்வி நித்திய சிற்குண கரிபர சிவையே. (கூக)

சிவந்த தாள்களு மரகதச் செண்ணமுஞ் சேற்கண
ணிவந்த மாமலர் வதனமு நிறைமணி முடியும்
நவந்த ரும்புகழ் மதுரைநன் னகரிடை நாடி
யுவந்த முத்தர்களுலகிடைப் பிறந்திறந் துலையார். (கூஉ)

உலைவி லாதநெஞ் சுடையனு யுன்னெழுத் துன்னி
மலைவி லாதுநின் வடிவுகண் டென்றுள மகிழ்வேன்
சிலைவி லான்மகிழ் தேவிமா மதுரையிற் றிகழ்மும்
முலைவி லார்நுதன் முக்கணி நிறைமதி முகத்தாய். (கூரு)

முகக்கு றிப்பறிந் தன்னைசேய்க் கிரங்குதன் முறைநீ
அகக்கு றிப்பையு மறிந்தெனைப் புறம்விட லழகோ
சுகக்கு றிக்கொரு துணையென மதுரையிற் றோன்றி
நகக்கு றிப்புறச் சேர்க்கணி யாந்தடா தகையே. (கூச)

தகைத்து வந்தெனை யடிமைகொள் ளாமலித் தருணம்
அகைத்து நீயுநட் டாற்றினிற் கைவிட லறமோ
பகைத்து ளோர்களும் பணிந்துயர் மதுரையம் பதிவாழ்
நகைத்து முப்புர மெரித்தவன் மகிழ்துணை நங்காய். (௯௫)

காய மாதியைம் பொறியுநாற் கரணமுங் கடந்தாங்
காய மாட்சிநின் னருளெனு மறிவையென் றணைவேன்
நேய மாமறைத் தொனி[illegible]ங் காலவாய் நிறைந்த
தூய மாமணிச் சோதியாய் விளங்குமா துமையே. (௯௬)

மை யிலங்கருட் சேற்கணாள் மதுரையில் வசிப்பாள்
மெய் யிலங்குநால் வேதமா முடியில்வீற் றிருப்பாள்
கை யிலங்குமுக் காலமுங் கடந்தகா ரணத்தாள்
ஐ யிலங்கியென் னகத்தினின் றின்பளிப் பவளே. (௯௭)

அளித்தன் மாய்க்குத லாக்குதன் முத்தொழி லடைந்து
தெளித்த முப்பெய ருருவுமா மாலவாய்ச் சிவைநீ
களித்த மாமலர் முகத்தினைக் காட்டியிக் கடையேன்
விளித்த போதெலா முன்னெழுந் தருள்செய வேண்டும். (௯௮)

வேண்டு நின்னரு ளாலவாய் விளங்குமீ னாட்சி
வேண்டு மெய்யடி யார்குழா மேவியான் வியக்க
வேண்டும் யானென தென்பதை விடுத்துநான் விளங்க
வேண்டு முன்னிலை மேவுறு வீடுற வெனக்கே. (௯௯)

என்னு ளார்ந்துல கெங்கணு நிறைந்துவெள் ளேற்றில்
மின்னு சொக்கரோ டாலவாய் விளங்குமீ னாட்சி
மன்னு நான்முக னெழுத்தற வென்சிரம் வைத்தாள்
பொன்னு ளார்களும் போற்றுநின் பொன்னடிப் பூவே. (௧௦௦)

## மீனாட்சியம்மை பதிற்றுப்பத்தந்தாதி.

### வாழி.

வாழ்க கூடல் வளம்பதி யன்பர்கள்
வாழ்க நான்மறை மாமணி வெண்பொடி
வாழ்க வெள்விடை வாகனச் சுந்தரர்
வாழ்க வங்கயற் கண்ணியும் வாழ்கவே.

பதிற்றுப்பத்து

முற்றிற்று.

